# ஞானத்தின் வாயிலில்...











ஆசிரியர் :

திருமதி B. சண்முகவள்ளி

# திருமண விழா அன்பளிப்பு

அன்புடையீர் வணக்கம்,

நிகழும் மங்களகரமான சர்வஜித்து வருடம் மாசி மாதம் 6ஆம் நாள் (18-02-2008) திங்கட்கிழமை புனர்பூசம் நட்சத்திரம் கூடிய சுபயோக சுபதினத்தில் காலை 6.00 மணிக்கு மேல் 7.30 மணிக்குள் கும்ப லக்கினத்தில்...

இரா. சண்முகம் - ச. ஜெயந்தி தம்பதியினரின்

செல்வன் : **ச. ஜெயவேல்** பி.இ.,

மற்றும்

முருகு. சிவகுமார் சி. ராஜேஸ்வரி தம்பதியினரின்

செல்வி : **சிவ. அன்னபூரணி** பி.இ.,

ஆகியோரது திருமணம் **MYM பைசல் மஹால் திருமண மண்டபத்தில்** (வடக்கு மெயின் ரோடு, சிதம்பரம்) நடைபெற்ற மண விழாவில் கலந்து கொண்டு ஆசி வழங்கிய அனைத்து நல்ல உள்ளங்களுக்கும் உள்ளார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.



தங்கள் அன்புள்ள,

**இரா. சண்முகம் - ச. ஜெயந்தி**

ஏ.1 வாலதி பிளாட்ஸ்,

24/2, டாக்டர் தாமஸ் சாலை,

தி.நகர், சென்னை - 600 017.

தொலைபேசி : 24345030,

கைபேசி : 9841123823.

(நன்றி : பி.வி. பாலசுப்பிரமணி குடும்பத்தினர், சென்னை)

# திருமண விழா அன்பளிப்பு

அன்புடையீர் வணக்கம்,

நிகழும் மங்களகரமான சர்வஜித்து வருடம் மாசி மாதம் 6ஆம் நாள் (18-02-2008) திங்கட்கிழமை புனர்பூசம் நட்சத்திரம் சுவுடிய சுபயோக சுபதினத்தில் காலை 6.00 மணிக்கு மேல் 7.30 மணிக்குள் கும்ப லக்கினத்தில்...

இரா. சண்முகம் - ச. ஜெயந்தி தம்பதியினரின்

செல்வன் : **ச. ஜெயவேல்** பி.இ.,

மற்றும்

முருகு. சிவகுமார் சி. ராஜேஸ்வரி தம்பதியினரின்

செல்வி : **சிவ. அன்னபூரணி** பி.இ.,

ஆகியோரது திருமணம் MYM பைசல் மஹால் திருமண மண்டபத்தில் (வடக்கு மெயின் ரோடு, சிதம்பரம்) நடைபெற்ற மண விழாவில் கலந்து கொண்டு ஆசி வழங்கிய அனைத்து நல்ல உள்ளங்களுக்கும் உள்ளார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

தங்கள் அன்புள்ள,

இரா. சண்முகம் - ச. ஜெயந்தி

ஏ.1 வாலதி பிளாட்ஸ்,

24/2, டாக்டர் தாமஸ் சாலை,

தி.நகர், சென்னை - 600 017.

தொலைபேசி : 24345030,

கைபேசி : 9841123823.

(நன்றி : பி.வி. பாலசுப்பிரமணி குடும்பத்தினர், சென்னை)

# ஞானத்தின் வாயிலில்...

ஆசிரியர் :

**B. சண்முகவள்ளி**



**நவமணி பதிப்பகம்**

காயத்ரி அப்பார்ட்மெண்ட்ஸ்

58/6, கணபதி தெரு, மேற்கு மாம்பலம்,

சென்னை - 600 033.

போன் : 24725699

# நூல் விவரம்


| | | |
|---|---|---|
| நூலின் தலைப்பு | : | ஞானத்தின் வாயிலில் |
| ஆசிரியர் | : | B. சண்முகவள்ளி |
| © பதிப்புரிமை | : | B. சண்முகவள்ளி |
| முதற் பதிப்பு | : | 2005 |
| பக்கங்கள் | : | 216 பக்கங்கள் |
| எழுத்து | : | 12 புள்ளிகள் |
| தாள் | : | 14.4 kg. வெள்ளை அச்சுத்தாள் |
| வெளியீடு | : | நவமணி பதிப்பகம்,<br>காயத்ரி அப்பார்ட்மெண்ட்ஸ்,<br>58/6, கணபதி தெரு,<br>மேற்கு மாம்பலம், சென்னை-33. |
| விலை | : | ரூ. 70 |
| அச்சிட்டோர் | : | ஸ்ரீ மாருதி லேசர் பிரிண்டர்ஸ்<br>173, பீட்டர்ஸ் சாலை,<br>இராயப்பேட்டை,<br>சென்னை - 600 014. |

# முன்னுரை

ஒருவரின் வாழ்க்கையில் நல்ல நூல்கள் நல்ல வழிக்காட்டிய நண்பனாக அமையும் என்பது ஆன்றோர் வாக்கு. நூல்கள் பலவற்றை படிக்க நம் அறிவுக்கு பல விசயங்கள் விருந்தாக அமைந்து வாழ்க்கையின் சில சமயங்களில் வழிக்காட்டியாக அமையவும் வாய்ப்பு உண்டு. எமக்கு சிறு வயதிலிருந்தே பல நூல்களை படிக்கும் ஆர்வம் அதிகம். அவ்வார்வமே இந்நூல் அமைய காரணமாகவும் இருந்தது.

மேலும் என் கணவரை கைப்பிடித்த நாள் முதல் ஆன்மீகத்தில் எமக்கு பற்று அதிகம் ஆனது. என் துணைவரின் மூலமாக பல ஆன்மீக குருமார்கள் நான் செய்த புண்ணியத்தின் பலனாக கிடைத்தார்கள். அவர்கள் கூறிய போதனைகளாலும், அவர்கள் எழுதிய நூல்களின் கருத்து களின் மூலமும் பல ஆன்மீக கருத்துக்கள் எம் மனதை கவர்ந்தன. யான் பெற்ற இன்பம் இவ்வையகமும் பெற வேண்டும் என்கிற கருத்தில் இந்நூலின் மூலம் பலருக்கு எனது சிறிய கருத்துக்களை கூற விரும்பினேன். இந்நூலை படிப்பதினால் படிப்பவர்களுக்கு சிறிதேனும் நன்மை பயக்குமென்றால் யான் பெரும் மகிழ்ச்சி அடைவேன்.

இந்நூல் எழுத காரண கர்த்தாகவும், குருவாகவும் விளங்கி பல ஆலோசனைகளை வழங்கி நல்ல முறையில் இந்நூலை எழுத காரணமாக இருந்தவர் திரு. வெங்கட்ராமன் ஐயா அவர்கள், சித்தர்களும் சாகா கலையும் என்ற பகுதியை எழுத காரணமாக இருந்தவர் சித்தர் திரு. துரைராஜ் அவர்கள், மேலும் இந்நூலிலுள்ள பிழைகளை திருத்தம் செய்து நல்ல முறையில் அமைய காரணமாக இருந்த எம் சம்மந்தியாகிய தஞ்சாவூர் பாவலர் திரு. கி. தர்மராஜ் அவர்களும், மற்றும் இராமர் பாலம் அமைக்க அணில் உதவியது போல் இந்நூல் எழுத உதவிய எம் மகளாகிய செல்வி B. சோபனா தேவி, மகனாகிய செல்வன் B. சரவண பிரகாஷ், தொழில் நுட்ப முறையில் உதவிய

அனைத்து நல்ல உள்ளங்கள் எமக்கு பக்கத் துணையாகயிருந்து உதவியதற்கு மிகவும் மகிழ்ச்சி கொள்கிறேன்,

என் வாழ்வின் விடிவெள்ளி, எங்கள் குடும்பத்தின் தலைவன் என் இதய நாயகனுமாகிய திரு. P. V. பாலசுப்ரமணி அவர்கள் மிகவும். பொறுமையாளர், குணத்தில் குழந்தையின் தன்மையை கொண்டவர், ஞான மார்க்கத்திற்கு செல்ல எமக்கு மிக முக்கிய காரணகர்த்தா. ஒரு ஆணுக்குப் பின் எவ்வாறு ஒரு பெண் இருக்கின்றாளோ, அதுபோல் என் வாழ்வின் முன்னேற்றத்திற்கு என் அன்பான கணவரே காரணம். ஒவ்வொரு ஞான குருமார்களையும் என்னிடம் அறிமுகப் படுத்தி எனக்கு ஞான அறிவை வளர்த்தவர் என் கணவரே. ஒரு ஆண் அன்பராகவும், பொறுமைசாலியாகவும் ஒழுக்கம் உள்ளவராகவும், ஞான மார்க்கத்தில் ஈடுபாடு உள்ளவராகவும் இருப்பது மிகவும் அரிது. இவை அனைத்தும் கொண்ட குணங்கள் உள்ளவர் திரு. பாலசுப்பிரமணியாகிய என் கணவர். இதில் பெரும் மகிழ்ச்சியும் பெருமையும் கொள்கிறேன்

இத்தகைய நல்லவரை ஈன்று எமக்கு வாழ்க்கைத் துணையாக அர்ப்பணித்த என் கணவரின் பெற்றோரும் என் மாமனார், மாமியாரும் ஆகிய அமரர் P.G. வாசுதேவபிள்ளை, திருமதி லட்சுமி அம்மாள், அவர்களையும் எம்மை ஈன்று நல்முறையில் வளர்த்த எம் அன்னையாகிய M. நாகலட்சுமி அம்மாள். எம் அருமை தந்தையாகிய M.A. மாரிமுத்து பிள்ளை அவர்களையும் நினைவு கூர்ந்து மகிழ்ச்சியும் பெருமையும் அடைகிறேன். இந்நூலை சிறந்த முறையில் அச்சிட்டு வழங்கிய திருமதி. கலைவாணி ஸ்ரீதரன், ஸ்ரீ மாருதி லேசர் பிரிண்டர்ஸ் உரிமையாளர் அவர்களுக்கும் நன்றி.

இங்ஙனம்,

**சண்முகவள்ளி**

# பொருளடக்கம்

# அணிந்துரை

*சென்னைப் பெருநகராம் தலைநகரைச்*
*சேர்ந்திருக்கும் மாம்பலத்தில், நல்லதொரு*
*அன்னையாய், ஆன்மீகத் திருவுருவாய்*
*அறவழியில், இல்லறத்தின் அடிச்சுவட்டில்,*
*வரம் பெற்ற வாழ்வுதனை தானேற்று*
*வாழ்ந்திடும் நற் சண்முகவள்ளி, என்பார்*
*பரஞ்சோதி மகானருள் பதம் பற்றி- திரு*
*பாலசுப்பிரமணியனார் தம் கரம் பற்றி*
*''ஞானத்தின் வாயிலிலே'' என்றதொரு - நல்ல*
*ஞாயிற்றின் கதிர் ஒளியாய் மன இருளை,*
*ஊனத்தைப் போக்கும் ஒரு நூலை ஆக்கி*
*உண்மைகளை, நன்மைகளை உலகறிய*
*இந்து மத தர்மங்களை இதழாய்த் தீட்டி*
*இதயத்தில் பதிப்பதுபோல் பதிப்பித்தாரே!*
*சிந்திய நன் முத்துக்களை சிந்தையேற்று*
*செம்மையுற வாழும்வழி காணலாமே!*

*தஞ்சாவூர்*
*17-02-2005*

பாவலர் **தஞ்சை தர்மராசன்,**
**B.Lit., M.A., B.Ed.,**

# 1. ஆலயம்

'கோபுரதரிசனம் பாப விமோசனம்' என்பார்கள், வான மண்டலத்தில் உள்ள பிரபஞ்ச சக்தியை ஆன்ம சக்தியானது கர்ப்பகிரகத்திற்கு ஈர்த்துக் கொண்டுவந்து கர்ப்பகிரகத்தில் இருக்கும், தெய்வத்திற்குச் சக்தியைத் தருகிறது. மேலும் எந்தத் தெய்வத்தைக் கோவிலில் பிரதிஷ்டை செய்கிறோமோ அந்தத் தெய்வத்திற்குரிய யந்திரத்தை அத்தெய்வத்தின் சிலையின் அடியில் வைத்திருப்பார்கள். ஒரு மண்டலம் யாக பூஜை செய்வார்கள். யாகத்தில் சொல்லப்படும் மந்திரங்கள் மேகம் போல் ஆகாயத்தில் பதிந்து அங்கிருந்து கர்ப்பகிரகத்திற்குக் கோவிலின் கலசம் வழியே வந்து, தெய்வ உருவில் பதியும். நாம் கும்பிடும்போது நம்மில் அந்தச் சக்தியானது பதிந்து நமக்கு வேண்டும் வரத்தை அருளும்.

பஞ்ச பூதங்களின் ஆற்றலை நாம் நேரடியாகப் பயன் படுத்துவதற்கு உதவி செய்யக் கூடிய இடம் ஆலயம் ஆகும். ஆலயங்களை எந்த நோக்கத்தில் நம்முடைய ஞானிகளும் சித்தர்களும், முன்னோர்களும் வடிவமைத்தனர்? ஒருவர் ஒரு செயலை வெற்றி பெறச் செய்ய அவரது உடல், எண்ணம் போன்றவற்றில் முதலில் மாறுதல் ஏற்பட வேண்டும். அதற்கு, பஞ்ச பூதசக்திகளின் உதவியும் தேவை. நம் உடலில் உள்ள பஞ்ச பூத சக்திகள்யாவும் நம் இயல்புக்கு மாறுபட்ட நிலையில் இருக்கும்போது நமக்குத் தடைகள் ஏற்படும். அத்தகைய தடை களைத் தகர்த்தெறிய ஆலயங்களின் அமைப்புகள் நமக்கு உதவி செய்கின்றன.

நம் முன்னோர்கள் மிகுந்த அறிவாளிகள் ''கோவில் இல்லாத ஊரில் குடியிருக்காதே'' என்று கூறியுள்ளனர்.

பழங்காலத்தில் அரசர்களும் வசதி படைத்தவர்களும் பல கோயில்களைக் கட்டி மகிழ்ந்தனர்.

பழங்காலக் கோயில்களை நாம் காணுகையில் மூன்று பிரகாரங்கள், நடுவில் இறைவன் உறைவிடம், தல விருட்சம், குளம், அன்னதானம் செய்யுமிடம் போன்ற அமைப்புகளுடன் இருக்கும்.

தற்போது, டாக்டரிடம் சென்றால் அவர்கள் சொல்லும் முக்கிய சொல் நடைப்பயிற்சி மேற்கொள்ள வேண்டும் என்பது தான்.

ஆனால் இராஜாக்கள் காலத்திலேயே, ''கோவிலுக்குச் செல்லுங்கள், இறைவனை வழிபடுங்கள்'' என்பது முன்னோர் களின் தாரக மந்திரமாக இருக்கும். பிரகாரத்தைச் சுற்றி வந்தால், (ஏறக்குறைய) ஒரு மைல் தூரம் இருக்கும். தினமும் நடந்தால் உடல் ஆரோக்கியமாக மாறும்.

இறைவனை அண்டி மனதில் ஏற்படும் குறையைக் கூறி வழிபடுவதால், இறைவனிடம் நம் சுமையை ஒப்படைத்து விட்டோம் என்று கவலை இல்லாமல் இருப்பார்கள். இதனால் மனச்சுமை குறைந்து இதய நோய் ஏற்படாமல் தடுக்கப்படும்.

பலர் கோவிலுக்கு வருவார்கள் அவர்களில் உறவினர் களும் இருப்பர், தெரிந்தவர்களும் இருப்பர், சிநேகிதர்களும் வருவார்கள். இதனால், அவர்களிடம் நம் குடும்ப நிகழ்ச்சி களைக் கூறலாம். அவ்வாறு அவர்களிடம் அளவளாவுவதால் மனச்சுமை குறையும். அவர்களைப் பார்த்த மகிழ்ச்சியும் ஏற்படும்.

**விருட்சம்:**

கோவிலுக்கென்று ஒரு விருட்சம் (மரம்) இருக்கும். கோவிலைச் சுற்றிலும், மரங்கள், செடிகள் என்று இருக்கும். இதனால் சுற்றுப்புறச் சூழ்நிலையில் காற்று சுத்தப்படுத்தப் படுகிறது. மரத்தின் நிழலில் அமர்ந்தால் மனதிற்கு இதம்

அளிக்கும். உடல் நோய்க்கு மருந்தாகும் பல அபூர்வ மரங்கள் இதனால் காலம்காலமாகப் பாதுகாத்து வரப்படுகிறது.

இயற்கையின் சூழ்நிலையே வழிபாட்டுக்குரிய இடங்களாயின, வேள்வித்தீயின் மூலம் வழிபாடு பெரிதும் நிகழ்ந்து வந்தது. நதிக்கரையிலும் மரச் சோலைகளிலும் தெய்வத்தை மக்கள் வணங்கி வந்தனர். அத்தகைய விருட்சங்கள் நாளடைவில் ஸ்தல விருட்சங்களாக மாறின.

## குளம்

எதற்குக் கோவிலில் குளம் உள்ளது? ஆண்டவன் அபிஷேகத்திற்கும், மக்களின் உபயோகத்திற்கும் குளம் உள்ளது. இப்போது உள்ளது போல வீட்டிற்கே அந்தக் காலத்தில் தண்ணீர் வருவதில்லை. வீட்டில் கிணறு இருந்தால், அவை உப்பு நீராக இருந்தால், குடிக்க உபயோகப்படாது. ஆனால், கோவிலிலுள்ள குளத்தின் நீர், ஊற்று நீர் அல்லது மழைநீர் சேமிப்பாகவும் இருக்கும். அவ்வாறு குளங்களை அமைப்பார்கள். உதாரணமாக, கும்பகோணத்திலுள்ள மகா மகக் குளத்தைக் கூறலாம். ஊரில் தண்ணீர்ப் பஞ்சம் ஏற்பட்டால் கோவிலின் குளத்தைப் பயன்படுத்திக் கொள்வார்கள்.

## அன்னதானம்

இக்காலத்தில் உள்ளதுபோல் அக்காலத்தில் ரயில், பஸ், விமானம், கார் என்று போக்குவரத்து வசதிகள் இல்லை. நடந்து செல்ல வேண்டும் அல்லது மாட்டு வண்டி, குதிரைச் சவாரி என்று ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குச் செல்ல வேண்டும். ஆங்காங்குச் சத்திரங்கள் இருக்கும். இரவு நேரம் ஆகிவிட்டால் பெண்டிரும், ஆடவரும், குழந்தைகளும் அச்சத்திரங்களில் தங்கி, விடிந்தபின் பயணம் மேற்கொள்வார்கள். அவர்களுக்கு அப்போதுள்ள அரசாங்க ஆட்சியாளர்கள் மூலமாக அன்னமும் தங்க இடமும் வழங்குவார்கள். கோவிலுக்கு வந்து சேர்ந்ததும் குளத்தில் குளித்து, உடலைத் தூய்மைப்படுத்திக்கொண்டு அக்கோவிலில் வழங்கும் உணவை

உண்டு, இறைவனைத் தொழுது நிம்மதியுடன் வீடு திரும்பு வார்கள். இப்பழக்கம் திருப்பதி கோவிலிலும் மற்ற சில கோவில்களிலும் இன்றும் தொடர்ந்து நடைபெறுகிறது.

பிரதிஷ்டை செய்த கோவில்களை வணங்குவதைவிட உயர்நிலைக் கோயில்கள் என்று சமாதியுடன் கூடிய கோவில் களில் உள்ள தெய்வங்களுக்குப் பலன்தரும் சக்திகள் மிக அதிகம் உண்டு (உ-ம்) மந்திராலயம், திருப்பதி, பழனி.

அரசர்கள் காலத்தில் கோவில்கள் இறைவனை வழிபட மட்டுமின்றி ஊனமுற்றோரும், பெண்டிரும், வயதானவர்களும், குழந்தைகளும், அரச குடும்பப் பெண்டிரும் போர் ஏற்பட்டால் போர் முடியும் வரை பாதுகாப்பாகத் தங்கிக் கொள்வதற்கும் பயன்பட்டன.

கோவிலுக்குச் சென்றாலே எல்லாச் சுமைகளையும் ஆண்டவனிடம் ஒப்படைத்த திருப்தியுடன் மனச்சுமை இல்லாமல் வருகிறோம்.

**சித்தர்கள் சமாதி அடைந்த இடங்கள்**

| | | |
|---|---|---|
| *அகப்பேய்ச் சித்தர்* | - | அழகர் மலை |
| *திருமூலர்* | - | சிதம்பரம் |
| *சிவவாக்கியர்* | - | ஏற்காடு |
| *இடைக்காடர்* | - | திருவண்ணாமலை |
| *கமலமுனி* | - | திருவாரூர் |
| *கருவூரார்* | - | கருவூர் (திருச்சி) |
| *கொங்கணவர்* | - | திருப்பதி |
| *பாம்பாட்டிச் சித்தர்* | - | விருத்தாசலம் |
| *தேரையார்* | - | பொதிகை மலை |
| *பதஞ்சலி* | - | இராமேஸ்வரம் |
| *பொன்னாகீசர்* | - | நாமனேரி |
| *போகர்* | - | பழனி |

| | | |
|---|---|---|
| *மச்ச முனி* | - | திருப்பரங்குன்றம் |
| *காக்கை, புஜண்டர்* | - | வைத்தீஸ்வரன் கோவில் |
| *மந்திராலயம்* | - | இராகவேந்தர் |

*பொதுவாக, சித்தர்களை அமர வைத்து, மேலே நாற் புறமும் சுவர் எழுப்பிச் சமாதி அமைப்பர். அவர்களின் உயிர்ச் சக்தி ஆனது ஒளி வடிவில் பலருக்கும் பலவிதங்களில், பல ரூபங்களில், பல சந்தர்ப்பங்களில் மக்களுக்கு உதவும். இவ்வாறு சமாதி உள்ள கோவிலுக்குச் சக்திகள் அதிகம் உண்டு என்பர்.*

*நம் முன்னோர்கள் குலதெய்வங்களை வழிவழியாக வழிபடுவார்கள். அவர்கள் செய்த கர்மவினைகளுக்கேற்ப முக்தி அடைவார்கள். அவ்வாறு முக்தி அடைந்தவர்கள் குல தெய்வ கோவிலில் உள்ள தெய்வத்தின் உருவில் படிந்து விடுவார்கள். மேலும் அவர்களின் இஷ்ட தெய்வம் அல்லது இஷ்டக் கோவிலில் உதாரணத்திற்குத் திருப்பதி என்றே வைத்துக்கொள்வோம். அதில் உள்ள தெய்வச் சிலையில் உறைந்து விடுவார்கள். தன் வாரிசுகளும் சந்ததியர்களும் அங்கு வந்து பூஜை செய்து வணங்குவதைப் பார்த்துச் சந்தோஷம் அடைந்து, பலவிதங்களில், பல ரூபங்களில் நமக்கு உதவு வார்கள்; நமக்கு வழிகாட்டியாகவும் அமைவார்கள் என்று ஆவி ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்துள்ளனர்.*

*பொதுவாக ஒரு கல்லுக்கு உயிர் உண்டு என்பார்கள். மலைகள் வளர்கின்றன என்று படித்துள்ளோம்.*

*அக்கல்லானது ஆண் கல் என்றும் பெண் கல் என்றும் அலிக் கல் என்றும் பிரிக்கப்படுகிறது. ஆண் கல்லை ஆண் தெய்வமாகவும், பெண் கல்லைப் பெண் தெய்வமாகவும் வடிப்பார்கள். சிலையின் அடியில் எந்திரங்களை வைத்து அச்சிலைக்குச் சக்தியூட்டி வணங்குவார்கள்.*

*சிலையைப் பிரதிஷ்டை செய்து அதற்கு உயிர் கொடுப் பதற்கும் சக்தி கொடுப்பதற்கும் யாகங்கள் செய்து, மந்திரங் களை ஓதி அதற்குச் சக்தியைத் தருவார்கள். மந்திரங்களின்*

ஒலி ஆகாயத்தில் பதிந்து, மீண்டும் ஒலி அலைகளாகக் கோவிலின் கோபுரத்தில் பதிந்து, சிலையில் மேல் பதிவாகும். மேலும், தினமும் செய்யும் மந்திர ஒலிகளால் (அர்ச்சனை) கடவுளின் வடிவாக இருக்கும் சிலைகளின் மூலம் மக்களை ஒலி அலைகளாக வந்தடைந்து அவர்களுக்கு நன்மைகளைத் தருகிறது.

கோவில்கள் பழங்கால நாகரிகத்தையும் நம் முன்னோர்கள் வாழ்ந்த வாழ்க்கை வழிமுறைகளையும் தெரிவிக்கின்றன. கற்களில் செதுக்கி வைத்த உருவங்களையும் கதைகளையும் வைத்து இதை அறிந்து கொள்ள முடிகிறது.

தீர்த்த யாத்திரை செல்லும்போது மனச்சுமைகள் மறக்கப் படுகின்றன. பல தரப்பட்ட மனிதர்களைப் பார்க்கமுடிகிறது.

பல விதமான நாகரிகங்களை அறிய முடிகிறது. மனம் இலேசாகி வீடு வந்ததும் புத்துணர்ச்சியோடு வேலைகளைக் கவனிக்க முடிகிறது. வருடம் ஒரு முறையேனும் வெளியூரில் உள்ள கோவில்களுக்குக் குடும்பத்துடன் சென்று வரவேண்டும்.

இயற்கை அனைத்திலும் அழகு உள்ளது. சில இடங்களில் காணப்படும் இயற்கையின் சூழ்நிலைகளும் அழகும் நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும். அமைதியான சூழ்நிலை மனதை ஈர்க்கும். சில இடங்களைக் கண்டால் அங்கேயே தங்கி விடலாமா என்று எண்ணத் தோன்றும். மனத்தகத்து மேலான எண்ணத்தை ஊட்டுவதற்கும் அத்தகைய அழகு பயன் படுகிறது. உயர்ந்த எண்ணங்களை எண்ணுவதற்கு அழகிய இடங்களும் அமைதியான இடங்களும் பயன்பட்டு வருகின்றன.

முனிவர்களுக்கும் சித்தர்களுக்கும் ஓரிடத்தில் அமர்ந்து தவம் செய்து உதித்த உயர்ந்த எண்ணமானது பிறகு அந்த இடத்தில் குவிந்து புதிய அருள் சக்தியை அளிக்கின்றது. அந்த இடத்தில் தியானம் என்கின்ற தவத்தைச் செய்துகொண்டு இருப்பார்கள். அதனால் ஓரிடத்தில் உதித்த உயர்ந்த எண்ணம் அழியாமல் அங்கேயே தங்கிவிடுகிறது. அவர் எண்ணிய உயர்ந்த எண்ணமும் இயற்கையின் பொலிவும் ஒன்று சேர்ந்து

அந்த இடத்தைப் புண்ணிய ஸ்தலமாக்குகின்றன. புண்ணிய ஸ்தலத்திற்கு மூலமகிமை இவ்வாறு அமையும்.

தபஸ்விகளும் முனிவர்களும் சித்தர்களின் அருள் எண்ணங் களின் வலிமையால் அவர்களுடைய வாசஸ்தலங்கள் புண்ணிய சேஷத்திரங்களாக அமைகின்றன.

முக்தி அடைய இருப்பவர்களுக்கும் மேலான எண்ணங் களைக் கொண்டு உயர முயன்றவர்களுக்கும் அந்த இடங்கள் பெரிதும் பயன்படுகின்றன.

சித்தர்கள் சமாதி அடைந்த இடத்தைக் கோவிலாக மாற்றி இருப்பதால்தான் இன்னமும் அவர்களைப் பற்றி அறிந்து அவர்கள் காட்டிய பல வழிமுறைகளைக் கையாண்டு, நாம் இன்னும் பல துறைகளில் முன்னேறி வருகிறோம். ஆலயங் களை இவ்வாறு கட்ட வேண்டும் என்று ஆகமங்கள் கூறுகின்றன. பெரிய பிரகாரம் ஒன்றையடுத்து அதற்கு வாயில் வைக்கப்படுகிறது. அந்த வாயிலின் உயர்ந்த கோபுரம் இராஜ கோபுரம் எனப்படுகிறது. கோவிலின் உள்ளே இருக்கும் கோபுரங்களைவிட இது பெரிதாக இருக்கும்.

வெகு தொலைவிலிருந்தே நாம் இக்கோபுரத்தைப் பார்க்கலாம். பலருக்கும் கடவுளை வணங்க இக்கோபுரம் நினைவுபடுத்தும். இராஜகோபுரத்தின் அருகில் நின்று பார்த்தால் கணக்கற்ற சிலை வடிவங்கள் அதன்கண் அமையப் பெற்று இருக்கும். அதில் மானிட வடிவங்களை அதிகம் காணலாம். அவர்களுடைய வாழ்க்கை முறை அதில் விளக்கப்பட்டு இருக்கும்.

தேவர்களின் செயல்கள் இராஜகோபுரத்தில் அமைந்து இருக்கும். உதாரணமாக மந்தார மலையைக் குடையும் நிகழ்ச்சி, கண்ணன் லீலைகள் போன்ற நிகழ்ச்சிகள், சித்தர்கள், ரிஷிகளின் செயல்கள் ஆகியவை இராஜகோபுரத்தில் அமைந்து இருக்கும். பறவைகளும், மற்ற உயிரினங்களும் விலங்குகளும் இருக்கும். பிரபஞ்சத்தில் அனைவருக்கும் இடம் உண்டு என்பதை இது உணர்த்தும்.

'தொட்ட கல்லும் சுட்ட மண்ணும் தெய்வமாகலாம்' என்பது பழமொழி. கும்பகோணத்திலுள்ள ஐராவதீஸ்வரர் கோவிலில் பரதநாட்டியக் கலையைப் பிரதிபலிக்கும் சிலைகளைச் செதுக்கி வைத்துள்ளனர். அக்காலத்தில் பரதத்தின் மூலம் இதிகாசங்களையும் புராணங்களையும் கதைகளாக அமைத்து, மக்கள் பண்பாட்டை மறவாமலிருக்க இன்றும் காத்து வருகின்றனர். எல்லோராக் குகைக் கோயில் உலக பிரசித்திப் பெற்றது. நம் முன்னோர்கள் மூடர்கள் அல்லர். அறிவு பூர்வமாக, சிந்தித்து, கோவில்களை உருவாக்கி வைத்தனர் என்பதை உணர்வோமாக. பூம்புகார் கடலில் மூழ்கிக் கிடந்தாலும் இன்றும் அழியாமல் இருக்கின்றது. அக்கால நாகரிகத்தைச் சிலைகள் செதுக்கிய கல்தூண்களின் மூலம் அறிய முடிகிறது. பெரும்பாலான கோவில்களின் கர்ப்ப கிரகம் இருட்டாகத்தான் இருக்கும். மின் விளக்கு இருக்காது. தீப ஒளியில்தான் தெய்வத்தை வணங்க முடியும். ஆகமவிதிகள் அதை மாற்றம் செய்ய இடம் தருவதில்லை.

கர்ப்பக் கிரகத்தின் அருகில் சென்று தரிசனத்திற்காகப் பக்தன் காத்திருக்கின்றான். திரை மூடப்படுகிறது. சிறிது நேரத்தில் மணியோசை கேட்கிறது; திரை நீங்குகின்றது. உள்ளே கற்பூர ஆராதனை நடக்கிறது. அதன் வெளிச்சத்தில் தெய்வத்தைப் பக்தன் தரிசிக்கிறான். இது வெறும் கல்தான், சிலைதான் என்று அவன் மனதில் தோன்றுவதில்லை. தெய்வத்தையே நேரில் தரிசிப்பதாக உணர்கிறான். பின் நைவேத்தியம் படைக்கின்றனர். அதன்பிறகு அர்ச்சனை, ஸ்தோத்திரம் போன்றவற்றைத் தெய்வத்தின் முன் அர்ச்சகர்கள் கூறுவார்கள். அதைக் கேட்டு நாம் கடவுளைப் போற்றுகின்றோம்; ஆராதிக்கின்றோம். இதன் மூலம் நமக்கு மனமகிழ்ச்சி ஏற்படும். மன நிம்மதியும் கிட்டும். இதை நாம் தொடர்ந்து செயல்படுத்தும்போது நம் வாரிசுகளும் அதைப் பின்பற்றி ஒழுக்கமுடன் வாழ ஏதுவாகிறது. 'கோவில் இல்லாத ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்பது பழமொழி. மனஅமைதிக்குக் கோவிலே பல வழிகளிலும் ஏதுவாக அமைகிறது.

அரசர்களும் முன் காலத்தில் வாழ்ந்த மக்களும் கோவில் களைப் பல இடங்களில், பல ஊர்களில் கட்டி வைத்தனர். அவை அக்கால நாகரிகத்தையும் அவர்கள் வாழ்க்கை முறை களையும், சிற்பம், ஓவியம், நடனம், பாட்டு, பாடல்கள், கதைகள் என்ற பல கலைகளையும் நமக்குத் தெரிவிக்கின்றன.

கோவிலுக்குச் சென்று இறைவனை மட்டும் தொழுவது மட்டுமல்லாமல் பல கலைகளையும் பற்றி அறிந்து கொள் கிறோம். இரண்டாயிரம், மூவாயிரம் ஆண்டுகளாக வழிவழியே அறிந்து அதன்படி வாழ்ந்து வருகிறோம்.

இத்தகைய காரணங்களால் நாம் இன்றும் பண்பாட்டு டன் வாழ்ந்து வருகிறோம். எகிப்து, கிரேக்கம், அட்லாண்டிக், ஹரப்பா, மொகஞ்சாதரோ, பூம்புகார் மற்றும் இந்தியா முழுவதிலும் பல இடங்கள் பூமியில் புதையுண்டு, சிதைந்தும் கடலில் அழிந்தும் கூட கல்வெட்டுகளினால் இவற்றை யெல்லாம் நாம் அறிந்து கொள்ள முடிகிறது.

எனவே நம் முன்னோர்கள் மூடர்கள் அல்லர். அறிவிற் சிறந்தவர்கள். அவர்கள் கோவிலை உருவாக்கினார்கள் என்றால் பல அறிவியல் காரணங்கள் நமக்குத் தெரிந்தும் தெரியாமலும் பொதிந்து கிடக்கும். நாம் அதை அலட்சியப்படுத்தாமல், முடிந்தால் பழுது அடைந்த கோவில்களை நம் முயற்சியால் சீர்படுத்தி அழிய விடாமல் காப்போம். கோவில்களைப் பாது காப்போம். முடிந்த அளவில் கோவிலுக்குச் சென்று நம் வாழ்வை வளப்படுத்திக் கொள்வோம்.

# 2. உருவ வழிபாடு ஏன்?

"உலகம் தோன்றி, பல நூற்றாண்டுகள் கழிந்து விலங்குகள், பறவைகள், ஊர்வன என்று பரிணாம வளர்ச்சி அடைந்து பின் மனிதன் தோன்றினான்" என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர்.

அக்கால மக்களைக் கற்கால மக்கள் என்று கூறுகின்றோம். கிடைத்த காய்கனிகளை உண்டும், விலங்குகளைக் கொன்று பச்சையாக உண்டும், மரக்கிளைகளையும் இலைகளையும், ஆடையாக உடுத்தி, கண்டபடி வாழ்ந்து வந்தனர்.

பின் இயற்கையைப் பயன்படுத்தி, நீரைப் பருகிக் காற்றை சுவாசித்து, நெருப்பில் உணவினைச் சமைத்து, ஆகாயத்தில் உள்ள, பகலில் சூரியனின் ஒளியையும் இரவில் சந்திரனின் ஒளியையும் பயன்படுத்தி வாழ்ந்து வந்தனர்.

அந்த இயற்கையே காற்றாகவும், புயலாகவும், நீராகவும், வெள்ளமாகவும், தீப்பிழம்பாக நெருப்பாக எரியும்போதும், இருட்டில் பல இன்னல்களுக்கு உட்படுவதாலும் அந்த இயற்கையைப் பார்த்துப் பயந்து, கடவுளாக அக்காலத்தில் இயற்கையை மக்கள் கும்பிட்டு வந்தனர். பாம்பு கடித்தால் மனிதன் இறந்து விடுவதால் பயத்தில் அதையும் வணங்கி வந்தனர்.

மேலும் அவர்கள் தமக்குத் தேவையான நிலத்தில் பயிர் செய்து குடும்பம் குடும்பமாக வாழ்ந்து வந்தனர். அவர்களுக்குள் ஒரு தலைவன், அடுத்த தலைவன் சக்கரவர்த்தி என்று தனக்குத் தானே நாகரிகத்தையும், சட்டத்தையும் ஏற்படுத்திக் கொண்டான். அந்த அரசர்களுக்கும், சக்கரவர்த்திகளுக்கும்

சிலை அமைத்து வழிபட்டான். உதாரணமாக எகிப்து நாட்டிலும், பெருநாட்டிலும் மற்றும் மேலை நாட்டிலும் அரசர்களுக்கும், சக்கரவர்த்திகளுக்கும் சிலை வைத்துள்ளனர். நம் நாட்டில் அரசராக விளங்கி இன்றும் தெய்வமாக வணங்கப்படும் இராமருக்கும், கண்ணனுக்கும் கோவில் அமைத்து வழிபட்டு வருகிறோம்.

இதையெல்லாம் மீறிய சக்தியை மனிதன் கண்டு பிடித்து அதற்குக் கடவுள் என்ற பெயரை வைத்தான். அந்தக் கடவுளுக்குத் தன்னைப்போல உருவத்தைச் செதுக்கினான். ஆண் கடவுள் என்றும், பெண் கடவுள் என்றும் பிரித்தான்.

| | | |
|---|---|---|
| *ஞானத்திற்கு* | - | தட்சிணாமூர்த்தி |
| *வீரத்திற்கு* | - | துர்கா |
| *தமிழுக்கு* | - | முருகன் |
| *செல்வத்திற்கு* | - | லஷ்மி |
| *கல்விக்கு* | - | சரஸ்வதி |
| *காக்கும் கடவுள்* | - | விஷ்ணு |
| *படைக்கும் கடவுள்* | - | பிரம்மா |
| *அழிக்கும் கடவுள்* | - | சிவன் |

முதன்மையான கடவுள் கணபதி என்று செய்யும் தொழிலை வைத்துக் கடவுளையும் அதற்குக் காரண கர்த்தா வாக வைத்து வணங்கி வந்தனர்.

நவகிரகக்கோள்களால் நல்லவையும், தீய கதிர் வீச்சால் தீயவையும் நடப்பதால் கோள்கள் மனித வாழ்வில் முக்கியப் பங்கேற்கின்றன என்று அறிந்ததும் அவற்றுக்குச் சந்திரன், சூரியன், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, இராகு, கேது என்ற பெயரை வைத்து, அக்கோள்களை அலசி ஆராய்ந்து அக்கோள்களின் நிறத்தை அக்கடவுளுக்கும் கொடுத்து அவற்றை உருவ வழிபாடு செய்து, தன்னைக் காத்துக் கொள்கிறோம்.

ஒரு கோவிலில் தெய்வ உருவம் இல்லாமல் வெறும் வெறுமையாக இருப்பின் நாளடைவில் வெறுமையைப் பார்த்துப் பார்த்து நாம் தெய்வத்தைக் கும்பிடாமல் கடினத் தன்மை கொண்டவர்களாக மாறிவிடுவோம்.

ஒவ்வொருவரும் தெய்வத்திற்கு ஓர் உருவம் கொடுத்து வணங்கும்போது அந்தத் தெய்வங்கள் செய்யும் தொழிலை எண்ணங்களாக மனதில் பதித்து வணங்குகின்றோம். நாளடைவில் மனதில் பதிந்து எதற்காக எந்தத் தெய்வத்தை எந்தக் காரிய சித்திக்காக வேண்டுகிறோமோ அந்தக் காரிய சித்தி ஏதுவாக முடிகிறது.

| | | | |
|---|---|---|---|
| *(உம்)* | *வீரத்திற்கு* | - | முருகன், துர்கா |
| | *ஞானத்திற்கு* | - | தட்சிணாமூர்த்தி |
| | *படிப்பிற்கு* | - | சரஸ்வதி |
| | *செல்வத்திற்கு* | - | லஷ்மி |

சித்தர்கள், ஞானிகள், மகான்கள், ரிஷிகள் போன்றோர் சமாதி நிலை அடைந்தபின் அவர்களை அமர வைத்துச் சமாதி செய்கிறோம். அதை மூடி, அதன்மேல் அவர்களின் உருவங்களை வடித்து, அவர்களை மறக்காமல் வணங்கி வருகிறோம். (உம்) ஆதிசங்கரர், காஞ்சிப் பெரியவர், இராகவேந்தர், சாய் பாபா, அன்னை ஆகியோர்.

கணபதி என்கின்ற உருவத்தை எடுத்துக் கொள்வோம். மனித உடல், யானைத் தலை, நடைமுறையில் இது ஒத்துக் கொள்ளக்கூடிய விசயம் அல்ல. புராணங்களில் கணபதி மனித உருவில் இருந்தார் என்றும் அதற்கு ஆதி கணபதி என்றும் கூறுவர்.

பார்வதி குளிக்கச் செல்லும்போது, காவலுக்குக் கணபதியை வைத்துச் சென்றதாகவும், அப்போது அங்கு வந்த சிவனைக் கணபதி உள்ளே செல்ல அனுமதி மறுக்க, அதனால் சிவன் கோபம் கொண்டு தலையை வெட்டியதாகவும், பார்வதி,

மண்ணைக் கொண்டு நானே செய்து உயிர் கொடுத்த பிள்ளை இவன், 'நம் மகன்' என்று கூறியதாகவும்,

வெகுநேரம் ஆனதால் வெட்டிய தலையை ஒட்ட வைக்க முடியாமல், தெற்கில் யார் தலை வைத்துப் படுத்து இருக் கின்றாரோ அவரின் தலையைக் கொண்டுவரச் சிவன் கட்டளை யிட, யானையின் தலையைக் கொண்டு வந்து கணபதிக்குப் பொருத்தினர் என்பது கணபதி புராண வரலாறு. இதிலிருந்து என்ன புலப்படுகிறது எனில் அக்காலத்தில் தலை, கை, கால்கள் போன்ற உடல் உறுப்புகளை அறுத்தாலும், அதை மீண்டும் ஒட்டி வாழ வைக்க முடியும் என்பதுதான்.

உக்கிர தெய்வமாகக் காளியையும், பைரவரையும் சாந்தத் திற்கு லஷ்மி, சரஸ்வதி, திருமால் போன்ற உருவத்தையும் வகைப் படுத்தி உருவாக்கினார்கள். தச அவதாரங்களுக்கு உருவத்தைக் கொண்டு தரிசிப்பது நாம் அடைந்த பரிணாம வளர்ச்சியைப் பல காலம் கடந்தாலும் நாம் மறக்காமல் இருப்பதற்குத்தான்.

மனிதன் மனம் போல்தான் நாம் கல்லிலோ மண்ணிலோ உருவம் அமைத்து, ஒவ்வோர் உருவத்திற்கும் ஒரு பெயர் கொடுத்து, அதன் குணங்களையும், தொழிலையும் நாமே அவ்வுருவத்திற்குத் தந்து, அதற்கெனச் சில ஆயுதங்களையும் தந்து நாம் காலங் காலமாக வழிபட்டு வருகிறோம்.

ஆதியும் அந்தமும் இல்லாதவன் கடவுள், ஒளிவடிவம் பொருந்தியவன் இறைவன் என்று பலருக்கும் உணர்த்த, சிவனை உருவகப்படுத்தாமல் இலிங்க வடிவில் பல கோவில் களில் வைத்திருக்கின்றனர்.

அக்னி பகவானுக்கு இரண்டு முகங்கள் உண்டு. அதைக் காணும்போது, "இப்படிக்கூட உருவம் உண்டா?" என்பதை நம்பாமல் பக்தியுடன் பார்ப்போம். ஆனால், பத்திரிகைகளில் அவ்வாறு இரண்டு தலையுடன் ஒட்டிப் பிறந்தது மட்டுமில்லா மல் சிலர் பெரியவர்களாகி வாழ்ந்து கொண்டிருக்கின்ற னர் என்பதைப் படிக்கும் போது உண்மை என்பது புலனாகிறது.

அதேபோல பிருங்கி முனிவர்க்கு மூன்று கால்கள் என்று கல்வெட்டில் காணப்படுகிறது. அதேபோல் மூன்று கால்களை உடையவர்களைச் செய்திகளில் அறிய முடிகிறது.

இப்படியும் மனிதர்கள் பிறந்து, நம்பிக்கையுடன் வாழ்ந்து, வாழ்க்கையில் மேன்மை அடைந்துள்ளார்கள் என்று நமக்கு உணர்த்தவே கல்வெட்டில் அம்மாதிரியான உருவத்தைச் செதுக்கி வைத்தனர்.

''கோவில்களிலும் மலைக்குகைகளிலும் தெய்வங்கள், தேவதைகள், நடனப் பெண்மணிகள், முனிவர்கள் என்று பல உருவங்களைப் பதிப்பது ஏன்?'' எனில், புயலாலும், நீராலும் பூகம்பத்தாலும் இவை அழிவதில்லை. காலங்கள் கடந்தாலும், நம் முன்னோர்கள் அறிவுடன் உலகம் ஆங்காங்கே அழிவதையும் அதிலிருந்து மீண்ட மனிதர்கள், பின் வாழ்வதையும் தெரிந்து கொண்டு, பின்வரும் சந்ததியர்கள் எவ்வாறேனும் அறிந்து கொள்ளக் கூடும் என்று யூகித்து, உருவங்களைச் செதுக்கி வைத்துள்ளனர்.

மேலும், அக்காலத்தில் கணவன் இறந்ததும் மனைவி உடன்கட்டை ஏறிவிடுவாள். அதுபோல் உள்ள பெண்ணிற்கும் அவளின் கணவருக்கும் அதே இடத்தில் சிலை அமைத்து, கோவிலைக் கட்டி, தலைமுறை தலைமுறையாக வழிபட்டு வந்தனர். (உம்) கண்ணகி, திரௌபதி இன்னும் பல பெண் கற்பரசிகளுக்கும் அக்காலத்தில் சிலை அமைத்து வழி பட்டார்கள்.

போர்கள் ஏற்படும்போது இறக்கின்ற அரசர்கள், அமைச்சர்கள், தளபதி மற்றும் தத்தம் உறவினருக்கும் பொது இடங்களிலோ தம் சொந்த இடங்களிலோ, சிலை அமைத்து, தொடர்ந்து வழிபட்டனர்.

நாளடைவில் அச்சிலையே ஐயனாராகவும் கருப்பண்ண சாமியாகவும் முனீஸ்வராகவும் பெயரிடப்பட்டு சிலை அமைத்து வழிபாட்டினைச் செய்து வருகின்றனர்.

இராமர் யாகம் செய்யும்போது மனைவியுடன் தானம் இடவேண்டும் என்று யாகம் செய்பவர்கள் கூறினார்கள். இராமரின் மனைவி சீதை முக்தி அடைந்திருந்தாள். எனவே இராமர் பொன்னால் ஆன சீதையின் உருவத்தைச் செய்து பக்கத்தில் அமர வைத்து யாகத்தைச் செய்து முடித்தார் என்பது இராமாயண வரலாறு.

பிருதிவிராஜனின் சிலைக்கு மாலையிட்டுக் காந்தர்வ மணம் செய்து கொண்டாள் சம்யுக்தை.

அரசர்களும் தம் முன்னோர்களைச் சிலையாகவும் கல் வெட்டாகவும் செதுக்கி வைத்துள்ளனர். மதுரையில், நாயக்கர் அரசரும், அரசியும் கடவுளை எப்போதும் வணங்குவதைப் போல் சிலை அமைத்து இருப்பார்கள். கும்பகோணத்திலுள்ள இராமர் கோவிலிலும் அரசனும் அரசியும் கும்பிடுவதைப் போல அமைத்து இருப்பார்கள். தான் இவ்வுலகில் மறைந்தாலும் தன் சிலை மூலமாவது எப்போதும் கடவுளைக் கும்பிட்ட மாதிரி இருக்க வேண்டும் என்ற நோக்கத்தில் அரசர்கள் கோவிலில் தம் உருவத்தைச் செதுக்கி வைத்தனர்.

முன்னொரு காலத்தில் ஓர் அரசர் (அ) கேரளாவின் ஒரு பகுதியை ஆண்டு வந்தார். அவரை யாராலும் போரில் தோற் கடிக்க முடியவில்லை. பக்கத்திலுள்ள பகை அரசன் (ஆ) இந்த இரகசியத்தை அறிய ஒற்றர்களை அனுப்பி வைத்தான். ஒற்றர் களும் அந்த நாட்டிற்குச் சென்றனர். அந்த நாட்டின் அரசர் (அ) ஒரு விக்கிரகத்தைக் (உருவ வழிபாடு) கும்பிடுவதாகவும், அதனால்தான் யாராலும் அவரை வெல்ல முடியவில்லை என்றும் கூறினார்கள்.

பகை அரசன் (ஆ) திறமையான ஒற்றனைப் பக்கத்து அரசன் (அ) நாட்டிற்கு அனுப்பி எப்படியாவது அச்சிலையைக் கடத்தி வரும் படி உத்தரவிட்டான். ஒற்றன் பலவாறு முயன்று அரண்மனைக்குப் பூஜை செய்யப் பூக்கள் தரும் மூதாட்டியைக் கிறுக்கனைப்போல நடித்துப் பிடித்துக் கொண்டான். மூதாட்டி கூடவே தினமும் அரண்மனைக்குச் சென்று வந்தான்.

பூக்களை இனி தான் சென்று கொடுப்பதாகவும், தாங்கள் வீட்டு வேலையைச் செய்யுங்கள் எனக் கூறிவிட்டான். மூதாட்டியும் தளர்ச்சியின் காரணமாகச் சரி என்று கூறிவிட்டாள். ஒற்றன் பூக்கள் கொடுத்து விட்டு, காய்ந்த பூவை ஒரு கூடையில் நிரப்பி வெளியே எடுத்துக் கொண்டு வருவான். வரும்போது, திடீரென்று தான் அந்தச் சிலையை எடுத்துச் செல்வதாகக் கத்திக் கொண்டே ஓடுவான். சிப்பாய்கள் ஓடி வந்து கூடையை அலசி ஆராய்வார்கள். ஒன்றுமில்லை என்றதும் திரும்பி விடுவார்கள். ஒற்றனும் இந்நிகழ்ச்சியை அடிக்கடி செய்து வந்தான். அதனால், சிப்பாய்கள் அலட்சியமாக அவன் பேச்சைத் தட்டிக் கழிக்க ஆரம்பித்தார்கள். ஒரு நாள் உண்மையாகவே பூஜை அறையிலுள்ள விக்கிரகத்தை எடுத்து, கத்திக் கொண்டே வந்தான்.

சிப்பாய்கள் அலட்சியமாக எப்போதும்போல் வேடிக்கை காட்டுகிறான் என்று விட்டுவிட்டார்கள். ஒற்றனும் பக்கத்து நாட்டிற்குச் சிலையைக் கொண்டு வந்தான். பின் பக்கத்து நாட்டு அரசனை (அ) பகை அரசன் (ஆ) போரிட்டுத் தோற்கடித்தான் என்று நடந்த இக்கதையை வாய்வழிக் கூற்றாய்க் கூறுவர்.

**உருவ வழிபாட்டின் நன்மைகள்:**

1. உருவ வழிபாட்டிற்காகக் கோவிலைப் பொது இடங்களில் அமைப்பர். இதனால் பல இன மக்களும் ஒரே இடத்தில் கூடுவர். ஒருவருக்கொருவர் நட்பு மலர வாய்ப்பான இடமாகக் கோவில் அமைகிறது.

2. பலரது கூட்டு வழிபாட்டில் பயன்களை அதிகமாகப் பெற ஏதுவாகக் கோவில் அமைகிறது.

3. உருவமான கடவுளிடம் மனம் விட்டு மனத்தளவில் தனக்கு ஏற்படும் இன்னல்களையும் தடைகளையும் குறைகளையும் பேசுவதால் மனபாரம் குறைந்து, மனநிம்மதி ஏற்பட்டு மனச் சுமை குறைகிறது.

4. இஷ்ட தெய்வத்தை உருவ வடிவில் வணங்குவதால் தனக்கு ஒரு பக்கபலமான, ஒரு துணை இருப்பதாக எண்ணி மன தைரியம் உண்டாகிறது.

# 3. கடவுள்

கடவுள் என்பவர் யார்? அவருக்கு உருவம் உண்டா? என்ற கேள்விக்கு உலகத்தில் மனித உயிர்கள் தோன்றிய காலத்திலிருந்தும், மனிதனுக்கு அறிவு மேம்படத் தொடங்கிய காலத்திலிருந்தும் இக்கேள்விகள் தொடர்ந்து கொண்டேதான் இருக்கின்றன.

சிலர் கடவுள் உண்டு என்பார்கள்; வேறு சிலர் இல்லை என்பார்கள். உலகம் இருக்கும்வரை இம்மாதிரியான விவாதங்கள் தொடர்ந்து கொண்டேதான் இருக்கும்.

அகத்தியர் முதல் பல சித்தர்கள் வரை, முனிவர்கள் முதல் தேவர்கள் வரை, ஆவிகள் முதல் ஆராய்ச்சியாளர்கள் வரை 'கடவுள் என்பவர் ஒரு பேரொளி ஆகும்' என்றார்கள். கடவுள் என்பவர் பல அணுக்களின் சேர்க்கை என்றும் அதிலிருந்து சிறிய அளவில் அணுக்கள் தோன்றி, சக்திகளின் வடிவாகப் பூமிக்கு வந்து உயிர்கள் தோன்றக் காரணம் என்றும் கூறினார்கள். இந்தப் பூமியில் உயிர்கள் தோன்றக் காரணமான சக்தியைத்தான் நாம் கடவுள் என்கின்றோம்.

''கடவுளுக்கு உருவம் இல்லை, ஒளிவடிவமே கடவுள்'' என்று பல மதங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது. தவஞ்செய்த யோகிகளும் ஞானிகளும் சித்தர்களும், ''கடவுளுக்கு உருவம் கிடையாது அவன் பேரொளியானவன்'' என்று கூறி இருக்கின்றனர்.

அவர்களின் ஞானத்திற்கு அக்கருத்துகள் ஏற்புடையதே.

இறைவன் என்கின்ற பேரொளியானவன் உயிர்களுக்கு உருவம் தந்தான்.

மனிதன் தன் எண்ணத்தில் இறைவனுக்குப் பல உருவங் களைப் படைத்து வணங்குகின்றான். அதில் மகிழ்ச்சியும் நிம்மதியும் அடைகின்றான்.

மெய்ஞ் ஞானத்தை அறிந்த ஞானிகள் கடவுளுக்கு உருவம் இல்லை என்று கூறினால், நாத்திகவாதிகளுக்குக் கொண்டாட்டமாகப் போய்விடும். உலகில் பல அதர்ம நிகழ்ச்சி களெல்லாம் மிக அதிகமாக நடக்க ஆரம்பித்துவிடும்.

உடலில் மனம் மறைந்துள்ளது மனதில் ஆன்மா மறைந்து உள்ளது. ஆன்மாவில் உயிர் மறைந்துள்ளது உயிரில் தெய்வம் மறைந்துள்ளது.

எவ்வாறு, மனதை உணர்வதன்றிப் பார்க்க முடியாதோ அவ்வாறு எண்ணம், ஆன்மா, தெய்வம் ஆகியவற்றை உணர மட்டுமே முடியுமே அன்றிப் பார்க்க முடியாது.

மனம் என்ற ஒன்று இருப்பதாலேயே கருணை பிறக்கின்றது.

ஆன்மா இருப்பதால் உயிர் இருக்கின்றது. அதுபோல், உயிர் இருப்பதால் உடல் உண்டாகிறது. தெய்வம் இருப்பதால், இவை அனைத்தும் தோன்றுகிறது. மனதாலும், உடலாலும் நம்மைக் கொடுமைப்படுத்துபவர்களைப் பார்த்து நாம் பேச்சு வழக்கில் "உனக்கு மனசென்று ஒன்று இருக்கின்றதா?" என்று கேட்போம்.

காற்றைச் சுவாசிக்கின்றோம். சுவையை உணர்கின்றோம், மணத்தை நுகர்கின்றோம். இவற்றிற்கு எல்லாம் உருவம் இல்லை. இதனால் இவை இல்லை என்று ஆகிவிடாது. அது போல் கடவுளை உணர முடியும்; பார்க்க முடியாது. பார்க்க முடியாத காரணத்தினால் கடவுளே இல்லை என்று ஆகி விடாது.

"பூஜியத்துக்குள்ளே ஒரு இராஜ்ஜியத்தை ஆளவந்து, புரியாமலே இருப்பான் ஒருவன்; அவனைப் புரிந்து கொண்டால்

அவன்தான் இறைவன்'' என்று கவிஞர் கண்ணதாசன் எழுதியுள்ளார்.

கடவுளின் அருளானது நமக்கு எவ்வாறு கிட்டும்? உலகில் எவ்வளவு உயிர்கள் உள்ளன? அவ்வுயிர்கள் அனைத்திற்கும் கடவுள் நேரடியாக உதவமுடியாது. எனவே, நமக்குத் தாய், தந்தை, குரு என்றும், உறவினர்கள், நண்பர்கள், மற்றும் தெரிந்த வர்கள் என்றும் நமக்கு வழிகாட்டியாக விளங்குவார்கள். அவர்கள் மூலமாக கடவுள் நமக்கு அருளை வழங்கி உதவி செய்வார்.

முன்பின் தெரியாதவர்கள் பல விதங்களிலும், பல உருவங் களிலும் உதவலாம். எந்த ஒரு நிகழ்ச்சியையும் கடவுளின் கருணையாக நடப்பவை அனைத்தும் நல்லதற்கே என்று எண்ணினால் துன்பம் குறையும். வாழ்வும் மலரும், வழியும் பிறக்கும்.

குருஜீ ஞான வள்ளல் பரஞ்சோதி மகான் அவர்களின் ''நான் கடவுள்'' என்கின்ற நூலைப் படிக்கும்போது, இக்கருத் தானது மெய் என்று உணர வைக்கும். கடவுளின் மிக மிகச் சிறிய அணுவே நாம், அதாவது நீருற்றிலிருந்து புறப்படும் நீரானது நதியாகி, ஆறாகி, மரம், செடி, விலங்கு, பறவை, மனிதன் ஆகியவற்றிற்குப் பல விதங்களில் உதவுகிறது.

அதே நீரானது சில துளிகள் ஆண்டவனின் அபிஷேகத் திற்கும் பயன்படுகிறது. மேலும் பல வழிகளிலும் பயன் படுகிறது. நீரானது எதனால் பயன்பட்டது? எதற்காகப் பயன் பட்டது? என்பதைக் கொண்டுதான் அது புனிதத் தன்மை அடைகிறது.

அதுபோல், கடவுளிடத்திலிருந்து உண்டான நாம், நல்லவர் களாகவும் வாழ்கின்றோம், தீயவர்களாகவும் வாழ்கின்றோம். இதில் ஆயிரத்தில், இலட்சத்தில், ஒருசிலரே ஒழுக்கமுடனும் கட்டுப்பாட்டுனும் ஆண்டவனை வணங்கி அவனை அடை கின்றனர்.

நாம் அனைவரும் கடவுளிடமிருந்து வந்ததால், நாம் ஒவ்வொருவரும் கடவுளே, ஆனால், மாயையில் மூழ்கி நாம் திசை திரும்பி விடுவதால் கீழ்நிலைக்குத் தள்ளப்படுகின்றோம். நம்மை நாம் அறிந்து, இறைவனை உணர்ந்து, அவனை நாம் அடையும் போது, நாமும் கடவுளே. புண்ணியங்கள் நிரம்பச் செய்த ஆத்மாவே கடவுள் ஆகும்.

அகப்பேய்ச் சித்தர்:-

1. *தன்னை அறிய வேண்டும் அகப்பேய் சாராமல் சார வேண்டும்.*
*பின்னை அறிவதெல்லாம் அகப்பேய்,*
*பேய் அறிவு ஆகும்.*
*தன்னை அறிந்த ஒருவன்*
*கடவுளை அறிவான் என்றார்.*

2. *ஒப்பனை அல்லவடி அகப்பேய்*
*உன் ஆணை சொன்னேனே*
*அப்புடன் உப்பெனவே அகப்பேய்*
*ஆராய்ந்திருப்பாயே உன்மேல்*
*ஆணையிட்டுச் சொன்னால்*
*நீருடன் உப்பு இருப்பது போல*
*உன்னுடன் இறைவன் இருக்கின்றான்*
*அதை நுட்பமாக நீ அறிந்து*
*ஆனந்தமாக வாழ்வாய் என்றார்.*

பகவத் கீதையில் நன்றாக வளர்ந்த நெருப்பானது எப்படி விறகுகளை எரித்துச் சாம்பலாக்கிவிடுமோ, அப்படியே ஞானம் என்கின்ற அக்னியானது எல்லாக் காமங்களையும் ஆசைகளை யும் சாம்பலாக்கி விடும் என்று கூறியுள்ளது.

கடவுள் மீது பக்தி கொண்டு தியானம் செய்ய நம் ஆன்மா நமக்கே தெரியும் என்றும் அந்த ஆன்மாவை யாரோ ஒருவனே ஓர் ஆச்சரியவஸ்துவைக் காண்பதைப் போல் காண்பான் என்கின்றது. பகவத் கீதை.

**சமண மதம்:**

*பரமாத்மா ஒன்று. அதன் தோற்றங்களாக வந்திருப்பவை ஜீவாத்மாக்கள், ஜீவாத்மாக்கள் எண்ணிக்கையில் அடங்கா, அவை சூட்சுமமாயிருக்கும். மனதிலும் ஸ்தூலமாயிருக்கும். உடலிலும் கட்டுண்டு இருக்கும். அவற்றுக்குப் பிறப்பும் இறப்பும் உண்டு. பல பிறவிகள் எடுத்தபின் ஜீவாத்மாவிற்குச் சலிப்புத் தட்டுகிறது. அது உலகப் பற்றை நீக்கிவிட்டு, தன் நிஜ சொரூபமாகிய ஆத்மாவை அடைய முயல்கிறது. பலவீனப் பட்டுள்ள மனதுக்கு எது உலகாகத் தோன்றுகிறதோ அதே பொருள் சுத்த மனமுடையவனுக்குத் தெய்வமாகக் காட்சி கொடுக்கிறது. ஆக, உலகம் வேறு, தெய்வம் வேறு அன்று என்று சமணமதம் கூறுகின்றது. 'உடம்பிலே உறுபொருள் கண்டேன்' என்று கூறுகிறது திருமந்திரம்.*

*எல்லா மதங்களும் கடவுளிலிருந்து நாம் தோன்றி உள்ளோம் என்றும், நில உலகில் பிறந்த நாம் நல்லதை நினைத்து நல்லதையே செய்து இறைவனை வணங்கி எங்கிருந்து வந்தோமோ அங்கே அவனிடத்தில் கலப்போம் என்ற கருத்தைத் தான் வலியுறுத்துகின்றன. "குறையை நிவர்த்திக்கக் கோரிய குரல் கடவுள், குறையை நிவர்த்தித்த உருவச்செயல் கடவுள்" என்று கூறினார் ஞானவள்ளல் பரஞ்சோதி மகான் அவர்கள்.*

**திருவள்ளுவர்:**

*"அகர முதல எழுத்தெல்லாம் ஆதி*
*பகவன் முதற்றே உலகு" - என்றார் திருவள்ளுவர்.*

*எழுத்துக்கள் எல்லாம் அகரத்தை அடிப்படையாகக் கொண்டு இருக்கின்றன. அதேபோல உலகம் கடவுளை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன என்றும்,*

*கற்றதனாலாய பயனென்கொல் வாலறிவன் நற்றாள்*
*தொழா அர் எனின்.*

*"தூய அறிவு வடிவமாக விளங்கும் இறைவனுடைய நல்ல திருவடிகளைத் தொழாமல் இருப்பாரானால் அவர் கற்ற*

கல்வியினால் ஆகிய பயன் என்ன?'' என்று திருவள்ளுவர் திருக்குறளில் கூறியுள்ளார்.

*1. கடவுளை நம்புகிறவர்கள் - ஆத்திகர்கள்*

*2. கடவுளை நம்பாதவர்கள் - நாத்திகர்கள்.*

இருள் - ஒளி, பகல்- இரவு, இன்பம் - துன்பம், ஆண் - பெண், விருப்பு - வெறுப்பு என்பனபோல் உலகம் தோன்றிய திலிருந்தே ஆத்திகர்களும், நாத்திகர்களும் உண்டு.

**சித்தர்கள் கடவுளைப் பற்றிக் கூறுவதைக் காண்போம்:-**

*சென்றேனே ஆதி என்ற கடவுள்*
*காணேன் சிறப்பான வெகு*
*மகிமையானும் கண்டேன்*
*நின்றதொரு தேவாதி தேவர்,*
*நாமும் நெகழ்ச்சியுடன் பதாம்*
*புயத்தைத் தவம் செய்வாரே*
*தானான கைலாசபதியில் தானும்*
*சட்டமுடன் தேவாதி தேவர்*
*தானும் கோனான கடவுளின்*
*பதாம்புயத்தைக்*
*கொற்றவர்களும் மாண்பவர்களும் கண்டதில்லை*

என்று *போகர் கூறுகிறார்.* *(போகர் - ஏழாயிரம்)*

*பொன்னொப்பானை பொன்னிற்*
*சுடர் போல்வதோர் மின்னொப்பானை*
*விண்ணோரும் அறிகிலார் - அப்பர் (திருக்குறுந்தொகை)*

*மூவரும் முப்பத்து மூவரும்*
*மற்றொழிந்த தேவரும் காணாச்*
*சிவபெருமான்-மாணிக்கவாசகர்(திருவெம்பாவை)*

*எங்கள் தேவர் உங்கள் என்று*
*இரண்டு தேவரோ அங்கும்*
*இங்கும் ஆகி நின்ற ஆதிமூர்த்தி*

*ஒன்றவே* - *சிவவாக்கியர்*
*ஒன்றே குலம் ஒருவனே தேவன்* - *(திருமந்திரம்)*

பகவத் கீதை:-

*அழிவில்லாததும் குறிப்பிட்டுச்*
*சொல்ல முடியாததும்*
*வெளிப்படையாக இருப்பதும்*
*எங்கும் பரவியதும் நினைத்துப் பார்க்க முடியாததும்*
*எல்லோருக்கும் பொதுவானதும்*
*அசையாததும் நிலையானதுமான*
*பரம்பொருளை யாவர்*
*வழிபடுகின்றனரே என்று கூறுகின்றது.*

1. *இருள் சேர் இருவினையும் சேரா*
   *இறைவன் பொருள்சேர் புகழ் புரிந்தார் மாட்டு*
2. *பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்*
   *இறைவனடி சேராதார் - திருவள்ளுவர்.*

ஆன்மா வேறு; பிரபஞ்சம் வேறு. பிரபஞ்சம் அழியும் தன்மை கொண்டது. ஆன்மா அழியாது. வீடும் வீட்டில் குடியிருக்கும் மனிதனும் வெவ்வேறானவர்கள். குடியிருக்கும் மனிதன் தன்னையும் தான் குடியிருக்கும் வீட்டையும் அறிய முடியும். அவ்வாறு தன்னை அறியும் பாங்குடையது ஆத்மா. அது அழிவில்லாதது; ஆனந்த நிலை கொண்டது. நாம் ஆத்மா என்பதற்கு அத்தாட்சி நாம்தான்.

நம் உடலோ ஒரு ஜடப்பொருள். நாம் தூங்கும்போது உடல் தன்மைதான் அறிய முடியாது. குடியிருப்பதற்குத் தகுதி அற்ற உடலை ஆத்மா புறக்கணித்துவிடும். அப்போது உடலை வெறும் சடலம் என்று கூறுகிறோம். எனவே ஆத்மா நிரந்தர மானது. அது என்றுமே அழியாதது.

சித்தர்கள், முக்தர்கள், முனிவர்கள் அவர்களது பொன் மொழிகள், "எந்த வடிவங்களிலும் ஆண்டவன் உங்களிடம்

வருகின்றான்; மனதைச் சுத்தப்படுத்தி வைத்தால் அவன் சாதாரண உருவிலும் வந்து நமக்கு உதவி அளிப்பான்'' என்று கூறுகின்றன.

கடவுளைப் பற்றி அடியார்கள் என்ன கூறுகிறார்கள் என்று பார்ப்போம். நால்வர்க்கு, ஆலின் கீழ் உரைத்த அறவனை அறவன் சேவடி அடைந்தனம் என்று தேவாரம் தட்சிணா மூர்த்தியைப் பற்றிப் பாடியுள்ளது.

*அங்கண் அந்தணனாய் அறை கூவி*
*வீடருளும் அருங்கருணை வார்கழல்*
*மாயப் பிறப்பு அறுக்கும் மன்னன் அடி''*
*என்று திருவாசகத்தில் கூறப்பட்டுள்ளது.*
*''கடல் கடந்தேன் கரையடைந்தேன்*
*கண்டு கொண்டேன் கோயில்*
*கதவு திறந்திடல் பெற்றேன்*
*காட்சியெல்லாம் கண்டேன்*
*சுடர் கடந்த திரு அமுதுண்டருள்*
*ஒளியால் அனைத்தும் அறிந்து*
*தெளிந்து அறிவுருவாய்*
*அறியாமை அடைந்தேன்''" - என வள்ளலார்*
*கடவுளைப் பற்றிக் கூறுகின்றார்.*

அகத்தியர்:

*''ஒளி படைத்த கண்ணானாய்,*
*கண்டுருகும் அக்காலனைக் கண்டேன்,*
*இந்த உலகத்தை இயக்குகின்ற*
*காலன் இருக்கின்றான், அவனைக் கண்டேன்*
*அவன் ஒளி பொருந்தியவன்,''*

என்று கடவுளை அகத்தியர் வர்ணிக்கின்றார்.

ஈரமுள்ள களிமண்ணைச் சூரியனுடைய வெப்பம் இறுக செய்யும்; மெழுகை உருகச் செய்யும். அதுபோல், கடவுள் ஒவ்வொரு ஆன்மாவையும் அதனதன் தன்மைக்கு ஏற்றவாறு இயங்கச் செய்வார்.

மேகங்களால் மறைக்கப்பட்ட நிலாவின் ஒளி மனிதனுக்குப் பயன்படாது. ஆனால் சந்திரன் தன் நிலையி லிருந்து மாறுபடாது. அதுபோல், அறியாமையால் கடவுள் மறைக்கப்பட்டாலும், அவன் இடத்திலுள்ள ஆன்மா அவனுக்குப் பயன்படாவிட்டாலும், அது தன் தன்மையில் கெடாமல் இருக்கும். அந்த ஆன்மாவே இறைவன் என்ப தாகும்.

*''யான் எனது என் உயிரை மாய்த்துக்*
*கோதில் அமுதானாம் அம்மால்*
*முதல் வானவர்க்கு அப்பால் செல*
*அன்பர்க்கு ஒக்கும் சிவன்''*
*என்று மாணிக்கவாசகர் கூறுகிறார்.*
*''கடவுள் ஒரு நாள் உலகைக்*
*காணத் தனியே வந்தாராம்,*
*கண்ணில் கண்ட மனிதர்களையெல்லாம்,*
*நலமா? என்றாராம். ஒரு மனிதன்,*
*வாழ்வை இனிமை என்றான்,*
*ஒருமனிதன் அதுவே கொடுமை என்றான்.*
*படைத்தவனோ உடனே சிரித்து விட்டான்.''*

என்று வெகு அழகாகப் பாடியுள்ளார் கவிஞர் கண்ணாதாசன்.

இறைவனின் படைப்பில் நாம் தாயின் வயிற்றில் கருவாக இருந்து குழந்தைகளாக ஒரே மாதிரித்தான் பிறக்கின்றோம். ஆண், பெண் என்ற பேதத்தைத் தவிர அனைவரின் பிறப்பும் ஒன்றேதான்.

ஆனால் நாம் பிறந்த சூழ்நிலை, வளரும் சூழ்நிலை, வாழும் சூழ்நிலை, பேசும் சூழ்நிலை, நாம் மற்றவரிடம் நடந்து கொண்ட விதம் ஒரு சூழ்நிலை என மனித வாழ்க்கை அமையக் காரணமே அன்றி, கடவுளின் தவறு அல்ல. ஒருவன் நல்ல வனாக வாழ்வதும், கெட்டவனாக மாறுவதும் அவன் வாழும் சூழ்நிலையின் காரணமாகும்.

வாழ்க்கையில் மிகவும் கஷ்டப்படுபார்கள், ''கடவுள் என்பதே இல்லை; இருந்தால் எல்லாரையும் ஒரே மாதிரியாகத் தானே படைக்க வேண்டும். ஏன் ஒருவனைப் பணமுள்ள வனாகவும் மற்றொருவனை ஏழையாகவும் படைக்க வேண்டும்?'' என்று வாதாடுவார்கள். மிக்க பணமுள்ளவர்கள் பணத்தினால் எதையும் சாதிக்கலாம் என கடவுளை வணங்க மாட்டார்கள். இடையிலுள்ள நடுத்தர மக்களே கடவுளை வணங்குவார்கள்.

நாம் இம்மையிலும் மறுமையிலும் நலமுடன் இருக்கவும். நம் வாரிசுகளும் சந்ததியர்களும் நல்ல முறையில் வளரவும் கடவுள் நம்பிக்கையும் பக்தியும் மிகவும் அவசியம். 'கடவுளை நம்பினோர் கைவிடப்படார்' என்பது முதுமொழி. பலரின் வாழ்க்கையில் இதை நன்கு காணலாம். கடவுள் உண்டு. நம்மை மீறிய ஒரு சக்திக்கு நாம் கடவுள் என்று பெயர் வைத்து உருவத்தையும் கொடுத்து வணங்கி வருகின்றோம். அந்தச் சக்தியைத் தொழுது நாம் வாழ்வில் வளம் பெறுவோம்.

# 4. பக்தி

தன் குடும்பத்தாரிடமும், சுற்றத்தாரிடமும் குழந்தைகளிடமும் காட்டும் அன்பு பாசம் எனப்படும். தன் கணவரிடம் காட்டும் அன்பு காதல் எனப்படும். தன் குருவிடம் காட்டும் அன்பு மரியாதை எனப்படும். தமக்குத் தெரிந்தவரிடம் காட்டும் அன்பு சேவை எனப்படும். கடவுளிடம் காட்டும் அன்பு பக்தி எனப்படும்.

கடவுளிடம் காட்டும் பக்தியானது இன்பமானது, மகிழ்ச்சி தரவல்லது, மன தைரியத்தைக் கொடுக்கக்கூடியது. அம்மையாய், அப்பனாய், உற்ற தோழியாய், தோழனாய் தன் மனதில் உள்ள மனக்குறையை யாரிடமும் கூற முடியாத இரகசியங்களையும் வேதனைகளையும் மனச்சந்தோசங்களையும் கடவுளிடம் பகிர்ந்து கொள்ளும்போது, மனம் இலேசாகி, தயங்கும் செயல் களின் தடைகளைத் தகர்த்தெறிந்து வெற்றி கொள்ள முடிகிறது.

பூஜை செய்யச் செய்ய. த்யானம் செய்யச் செய்ய கடவுளிடம் மனதை செலுத்தச் செலுத்த கடவுளே நம்மிடம் ஒன்றிவிடுவதைப் போல ஓர் உணர்வு ஏற்படுகிறது.

அறிவில்லா மூடனாக, ஊமையாக இருந்த காளிதாசன், காளியின் மேல் கொண்ட மிகுந்த பக்தியினால், காளி அருள் பெற்றுக் கவிகாளிதாசனாக மாறினார். பல பாடல்களையும் நூல் களையும் இயற்றினார்.

ஆதி சங்கரரின் ஆழ்ந்த பக்தியினால் அன்னை ஆதிபரா சக்தியே அவர் முன்னால் தோன்றி வழிநடத்திச் சென்றாள்.

காரைக்கால் அம்மையார் எனப்படும் புனிதவதியார் கணவன் கொடுத்தனுப்பிய மாம்பழத்தைச் சிவனடியார்க்கு

உணவாகப் படைத்தாள். கணவன் மதிய உணவிற்கு வீட்டிற்கு வந்து உணவு அருந்தும்போது மாம்பழத்தைக் கேட்கச் செய்வதறி யாது திகைத்த புனிதவதியார் (காரைக்கால் அம்மையார்) இறைவனிடம் கொண்ட பக்தியால் இறைவனை வேண்டி இன்னொரு மாம்பழத்தைப் பெற்றுக் கணவரிடம் கொடுத்தார்.

சிவனிடம் காரைக்கால் அம்மையார் கொண்ட மிகுந்த பக்தியால், ஆதியும் அந்தமும் இல்லாத சிவபெருமான் தாயே இல்லாத தனக்கு காரைக்கால் அம்மையாரைத் தன் தாயாக ஏற்று அவரின் பக்திக்குப் பெருமை சேர்த்தார்.

''இளமையாகத் திருமணவயதில் இருந்த ஔவையார் இறைவன் கணபதியின் மேல் கொண்ட பக்தியால் தான் கடவுளிடம், 'தொண்டு செய்ய முதுமை பெறவேண்டும்' என்று கணபதியிடம் வேண்ட அவ்வாறே ஔவையார் முதுமை வடிவம் பெற்றார்'' என்பது வரலாறு.

நம்மாழ்வார்களும் நாயன்மார்களும் பக்தியால் பல சாதனைகளைப் புரிந்தனர்.

திருநாவுக்கரசர் ஒரு நாட்டின் அரசர். அவர் துறவியாகிப் பல இடங்களுக்குச் சென்று இறைவன் நாமத்தைப் பாடி, பக்தியைப் பரப்பினார். ஓர் இல்லத்திற்குச் சென்றபோது அவ்வில்லத்தின் குழந்தை அரவம் (பாம்பு) தீண்டி இறந்தது.

திருநாவுக்கரசர் சிவபெருமானிடம் வேண்டி, கடித்த நகத்தைத் திரும்ப வரவழைத்து விசத்தை எடுக்கச்செய்து குழந்தையைக் காப்பாற்றினார்

சுந்தரருக்காகச் சிவபெருமான் காதலுக்குத் தூதராகச் சென்றார். திருஞான சம்பந்தர் இறந்த உயிர்களை மீட்டார். இவையெல்லாம் இறைவனின் மேல் அவர்கள் மாறாத பக்தி கொண்டதால் ஏற்பட்ட நிகழ்ச்சிகள் ஆகும்.

திருமணம் நடக்கும் சமயத்தில் பாம்புதீண்டி மணமகனின் உயிர் பிரிந்தது. அதைப் பார்த்த மணப்பெண் கதறினார். அந்தக்

கதறல் ஞானசம்பந்தரை உருக்கியது. ''அழாதே பெண்ணே, கருணையே உருவான சிவபெருமானின் திருவடிகளை நம்பு!'' என்று கூறினார்.

*திருஞான சம்பந்தர் சிவபெருமானை நோக்கி.*
*''சடையா எனுமால் சரண் நீ எனுமால்*
*விடையா னெனுமால் வெருவா விழுமால்*
*மடையார் குவளை மலரும் மருகல்*
*உடையாய் தகுமோ இவள் உன் மெலிவே''*

என்று பாடியதைக் கேட்ட இறைவன் அவரின் வேண்டு கோளுக்குச் செவிசாய்த்து மணமகனுக்கு உயிர் கொடுத்தான். அதைக் கண்ட அந்த இளம்பெண் பெரும் வியப்பும் மகிழ்வும் எய்தினாள். அங்கேயே இருவருக்கும் மணமுடித்துவைத்து ஞானசம்பந்தர் ஆசீர்வாதம் செய்தார்.

தன்னைத் தேடி வந்த சிவபக்தர்களை உபசரிக்கப் பொருள் தேடிப் புறப்பட்ட சுந்தரர் ஏதும் கிடைக்காமல் களைத்து, மனம் வெறுத்து, நன்னிலத்திலுள்ள அக்னீஸ்வரர் ஆலயத்தில் படுத்து உறங்கி விட்டார். மறுநாள் விழித்துப் பார்த்தால் பக்கத்தில் இருந்த செங்கற்கள் பொன்னாக மாறி இருந்தன. அக்னீஸ்வரர் காட்சியளித்து, ''இதை நான் உனக்கு அளிக் கின்றேன். நீ முன் போல் சிவபக்தர்களுக்குச் சேவை செய்து வா என்று அருளியதாக வரலாறு.

பாண்டிய மன்னன் நெடுமாறன் இந்து மதத்திலிருந்து சமண மதத்திற்கு மாறினான். பின் அவரை வெக்கைநோய் தாக்கியது. பாண்டிமாதேவி மங்கையர்க்கரசி திருஞானசம்பந்தரை வேண்ட, அவர் சிவனை வணங்கிப் பக்திப் பாடலால் மன்னனின் வெக்கை நோயை நீக்கினார். மன்னனும் மனம் மாறி, மீண்டும் இந்து மதத்திற்கே மாறினான்.

திருடர்களுக்குக் கூட மதுரையில் திருமால் காட்சி தந்து, அவர்களை ஆட்கொண்டார். அதனால், மதுரையில் 'கள்ளழகர்' என்ற பெயரில் திருமால் அருள் வழங்கிக் கொண்டிருக் கின்றார்.

பாண்டவர்கள் கண்ணன்மேல் மிகுந்த பக்தி கொண்டிருந்த காரணத்தால், பல சூழ்நிலைகளில், கண்ணன் பாண்டவர்களுக்கு உதவினான், பாரதப் போர்களில் தனி ஒருவனாக ஆயுதம் ஏதும் ஏந்தாமல் தன் மனபலத்தைக் கொண்டு பாண்டவர்களுக்கு வெற்றி தந்து, அரசாட்சியில் அமர வைத்தான்.

பக்தி பல வகைப்படும். அவை பூஜை செய்தல், மந்திரம் கூறல், இறைவனின் நாமத்தைத் துதி செய்து பாட்டுப் பாடுதல், கோவிலுக்குச் சென்று இறைவனை வழிபடுதல், உறவினரைப் போல் பாவித்து இறைவனிடம் மனதை ஒன்றிப் பக்தி செலுத்துதல், த்யானம் என்ற தவம் செய்தல் இவ்வாறு இறைவனின் மேல் பக்தியைச் செலுத்தலாம்.

**பூஜைசெய்தல்:** காலையில் அல்லது மாலையில் பூஜை அறையில் அமர்ந்து தனக்குத் தெரிந்த வகையில் கும்பிடுவது.

**மந்திரம்:** கடவுளிடம் அந்த அந்தத் தெய்வ மந்திரங்களை எந்தக் காரியத்திற்கான. ஜெயம் தேவையோ அந்த மந்திரங்களைக் கூறி வணங்குவது.

**பாடல்:**

தன் இஷ்ட தெய்வங்களின் புகழைத் துதிப்பாடி அனைத்து இடங்களிலும் பரவச் செய்வது. நாயன்மார்கள், ஆழ்வார்கள் இவ்வாறு கோவில் கோவிலாகச் சென்று இறைவனை துதித்து அவரின் புகழைப் பரவச் செய்தனர். தியாகராஜர், அன்னமாச் சாரியார் போன்ற மகான்களும் இறை புகழைப் பாடினார்கள்.

**பஜனை:**

பஜனையின் மூலம் இதிகாசங்கள், புராணங்கள், தெய்வங் களின் வாழ்க்கை முறை, அவர்களின் கருணையால் நேர்ந்த சம்பவங்கள், கடவுளின் உயர்வு மற்றும் புகழைப் பரப்பி, தம் பக்தியை வெளிப்படுத்தினார்கள்.

## கோவிலுக்குச் செல்லல்:

செவ்வாய்க்கிழமைகளில் இராகுகாலத்தில் விளக்கு ஏற்றுதல், வெள்ளிக் கிழமைகளில் நெய்விளக்கு ஏற்றுதல், பழனி, திருப்பதி, மதுரை, காசி, இராமேஸ்வரம், திருச்செந்தூர் என்று பல கோவிலுக்குச் சென்று இறைவனைத் தரிசித்து, மன அமைதி அடைவார்கள். ஒவ்வொருவரும் வாரம் ஒரு நாள் கோவிலுக்குச் செல்வர். சிலர் தினமும் கோவிலுக்குச் செல்வதன் மூலம் இறைவனிடம் பக்தியைச் செலுத்து கின்றனர். இவர்கள் உடலுக்கு உடற்பயிற்சியும் மனத்திற்கு அமைதியும் கிட்டும், சந்தோசமும் கிடைக்கிறது.

## பண்டிகை:

நம் பாரத நாட்டில் இல்லாத பண்டிகைகள் இல்லை. ஒவ்வொரு பண்டிகையும் ஒவ்வொரு விதம். ஒவ்வொரு பண்டிகைக்கும் ஒவ்வொரு விதமான நைவேத்தியம் என்று செய்து, வீட்டைச் சுத்தம் செய்து, உடலையும் சுத்தம் செய்து, மகிழ்வுடன் குடும்பத்தோடு கடவுளை வணங்குவோம். இது ஒரு வகைப் பக்தி ஆகும்.

உறவினரைப்போல் பாவித்துப் பக்தி செலுத்துதல்:- வள்ளி முருகனைக் கணவனாக நினைத்துப் பக்தி செலுத்தி முருகனை மணந்தாள். இராதையும் ருக்மினியும் கண்ணனைக் கணவராக நினைத்துப் பக்தி கொண்டு மணந்தனர்.

மீரா அரசர்க்கு வாழ்க்கைப் பட்டாலும் தன் கணவனாக, சிறு வயதில் தன் மனதில் கண்ணனை நினைத்து, பக்தியைத் தீவிரமாக செலுத்தி வந்தாள். திருமணம் ஆன பின்பும் பக்தியைக் கண்ணனின் மேல் செலுத்தி, கண்ணனின் நினை வாகவே வாழ்ந்து மறைந்தாள். கண்ணனை யசோதா தாயைப் போல் சீராட்டிப் பாராட்டி வளர்த்தாள்.

ஆண்டாள் அரங்க நாதனை மிகுந்த பக்திகொண்டு தன் மணாளனாக மணந்தாள். இதனால், ஆண்டாளுக்குச் சூடிக் கொடுத்த சுடர்க் கொடி என்ற பெயரும் உண்டு.

பாண்டவர்களுக்கும் கண்ணனுக்கும் நட்பு ரீதியில் உறவுகள் இருந்தன.

இராகவேந்தர் தம் பக்தியால் மகானாக உருவெடுத்து இன்றும் நமக்கு அருள் பாலிக்கின்றார்.

சாய்பாபா இறைவனிடம் பக்தி செலுத்தி, ஞானியாகி, மனித நேயமும் கருணையும் கொண்டு மக்களை இன்றும் வழிநடத்தி வருகிறார்.

தேசத்தின்மேல் கொண்ட பக்தியால் காந்தியடிகள் மகாத்மாவாக இன்றும் மதிக்கப்படுகிறார். பாண்டிச்சேரி அன்னை மக்களுக்கு வழிகாட்டியாகக் கருணை பொழிகிறாள்.

**யாகங்களின் மூலம் பக்தியை வளர்த்தல்:**

யாகங்கள் பலவகைப்படும். யாகங்களால் செய்ததன் மூலம் அரசர்களும் மக்களும் பயன்பட்டு வந்தனர்.

இராஜசூய யாகம், அஸ்வமேத யாகம், சோம யாகம் இந்த யாகத்திற்கு மூலம் கடவுள் தட்சிணாமூர்த்தியாகும். சோமக் கொடியின் சாற்றினை எடுத்து ஆஹுதி செய்தால் மழை வரும் என்று பழைய நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது. கணபதி ஹோமம், சிவ ஹோமம், துர்க்கா ஹோமம், சண்டி ஹோமம், நவசக்தி ஹோமம், காமேஷ்டி யாகம், நவக்கிரக ஹோமம், கிரகங்களின் தீய பலன்களிலிருந்து விடுபட, தன ஆகர்ஷண ஹோமம், செல்வம் பெருக. குழந்தை வேண்டி ஹோமம், தசரதன் இந்த யாகத்தைச் செய்து. இராமர், இலட்சுமணன், பரதர், சத்ருக்கனர் என்ற நால்வரைக் குழந்தையாக அடைந்தார். பாண்டிய மன்னன் யாகம் செய்து மீனாட்சியைக் குழந்தை யாகப் பெற்றான்.

அஸ்வமேத யாகம் செய்து பல அரசர்கள் இழந்த அரசை மீட்டனர். மிருத சஞ்சீவினி ஹோமம், நோயில் வீழ்ந்து எழுந்து நடக்க முடியாதவர்களும் செய்தால் நோய் குணமாகி எழுந்து நடக்கலாம். கண்டங்கள் விலகி இறப்பைத் தடுக்கும்.

''யாகம் செய்கின்ற காலத்தில் எழுகின்ற புகையானது பலவித மூலிகைகளால் காற்றைவிடக் கனமான வாயுவாக மாறி, மூச்சின் வழியே உள்ளிழுக்கப்பட்டு, நம் உடம்பிலுள்ள நோயை நீக்குகின்றது. மேலும், மனதில் தைரியமும் நிம்மதியும் உண்டாகிறது. மேலும், வான் வழியே சென்று வான மண்டலத்தைச் சுத்தம் செய்கின்றது'' என்று விஞ்ஞானிகள் கண்டுபிடித்து உள்ளனர்.

யாகங்களில் சேர்க்கப்படும் மூலிகைகளும் நெய் மற்றும் பழங்கள், சந்தனக்கட்டை, அகில், தேவதாரு, அறுகு மற்றும் திப்பிலி, சித்தரத்தை, வெள்ளை மிளகு மற்றும் மருத்துவப் பொருட்கள் கலந்து பயன்படுத்துவதால் அதைச் சுவாசிக்கும் நமக்கு உள்ளத்திற்கும் உடலுக்கும் புத்துணர்ச்சி ஏற்படுகிறது.

ரஷ்ய விஞ்ஞானிகள், ''யாகத்தின்போது அந்த அந்தத் தேவதைகள் வந்து எந்தப் பொருளை ஆகுதியாக அளிக்கின்றனரோ, அப்பொருளை ஏற்றுக்கொண்டு நமக்கு அருள் பாலிக்கின்றனர்'' என்று ஆராய்ச்சிகளின் மூலம் கண்டுபிடித்து உள்ளனர்.

நம் முன்னோர்களின் பெருமையைக் கண்டுகொண்டனர். யாகம் காற்று மண்டலத்தில் ஓசோன் படலத்தைச் சுத்தம் செய்வதையும் அறிந்து கொண்டனர்.

**விரதம்:**

பண்டிகையின்போது ஏகாதசி, சஷ்டி. வெள்ளிக்கிழமை விரதம், செவ்வாய்க்கிழமை விரதம், பிரதோசம், மௌன விரதம் என்று பல வகையில் விரதம் இருக்கும்போது, ஒரு வேளை அல்லது இருவேளைகளில் உண்ணாநோன்பு மேற்கொள்வார்கள். மாதத்தில் ஒரு முறையோ, வாரத்தில் ஒரு முறையோ உண்ணா நோன்பு மேற்கொள்ளும்போது உடலானது தூய்மை அடைந்து, கசடுகள் வெளியேறுவதால் உடல் தூய்மை அடைகிறது. மனம் சாந்திகொள்கிறது.

தானதர்மம் செய்வதன் மூலம் பக்தியை வெளிப்படுத்து வதால் ஏழைகள் பயன்படுவார்கள். தானதர்மம் வழங்குபவர் களுக்கும் மனமகிழ்ச்சி ஏற்படுகிறது. தானம் வழங்குபவர் களுக்கும் இம்மையில் வளமையும் மறுமையில் முக்தியும் கிட்டும். இவர்களின் வாரிசுகள் நன்கு வாழ்வார்கள்.

சப்தரிஷி மண்டல அருட்பிரவாகத்தின் துணையுடன் அவற்றைப் பூமிக்கு ஈர்க்கும் ஆன்மீக காந்தமாக நித்ய வழிபாட்டுப் பலன் திரவியங்களில் ஐந்து பொருட்கள் மிக அத்யாவசிய ஆன்மீகக் கிரியா ஊக்கியாகச் சிலவற்றைக் குறிப் பிட்டுள்ளது.

அவை மிக எளிய பொருட்களானாலும் அவற்றின் பலன் அளிக்கும் திறன் அளவிடற்கரியது என்கின்றனர் மகரிஷிகள்.

அவை:- 1. சந்தனம், 2. நறுமணம் கமழும் ஊதுபத்தி 3. பச்சைக் கற்பூரம் கலந்த வாசனா தீர்த்தம், 4. நெய்தீபம் 5. மணமுள்ள மலர் 6. கற்பூரம்.

1. விக்கிரகங்களுக்குச் சந்தனம் சார்த்துதல் பிருதிவி பூத ப்ரீதிக்கான ஆகுதியாகும்.

2. நறுமண ஊதுபத்தி காட்டுதல், வாயு பூத ப்ரீதிக்கான ஆகுதியாகும்.

3. சுகந்த நீரால் நிராஞ்சனம் செய்தல் நீர்பூத ப்ரீதிக்கான ஆகுதியாகும்.

4. நெய் தீபம் காட்டல் அக்னி பூத ப்ரீதிக்கான ஆகுதி யாகும்.

5. இறுதியில் கற்பூரம் காட்டுதல் இறைவன் ஒளி வடிவினன்; அந்த ஒளியில் நாமும் ஐக்கியமாக வேண்டும் என்று பொருள்.

விலங்குகள், பறவைகள்கூட இறைவனிடம் பக்தி கொண்டு முக்தி பெற்றுள்ளன. திருவானைக்காவில் சிலந்தி சென்று கடவுளின் உருவத்தில் வெயில் படாமல் இருக்க

அதன்மேல் சிலந்தி வலையினைக் கட்டி வைத்தது. அங்கு வரும் யானை அதை தூசி என்று கலைத்துவிட்டு, பூஜை செய்து விட்டுச் செல்லும். மறுநாள் சிலந்தி வலையினை அமைக்கும்; யானை திரும்பவும் கலைக்கும். கோபம் கொண்ட சிலந்தி, யானையின் துதிக்கையின் வழியே உள்ளே சென்றது.

இதனால் யானை இறந்தது. துதிக்கையின் உள்ளே சென்ற சிலந்தியும் துதிக்கையின் உள்ளே அகப்பட்டு இறந்தது. யானை சோழபரம்பரையில் அரசனாகவும் சிலந்தி பக்தராகவும் பிறந்து இறைவனைத் தொழுதனர் என்பது வரலாறு.

திருக்கழுக்குன்றத்தில் கழுகு வடிவில் முனிவர்கள் (பூஷா - விருந்தா) மலைக் கோயிலில் வலம் வந்து அருகிலுள்ள பாறைகளில் நாள்தோறும் அமுதுண்டு இறைவனை வழிபட்டு வருகின்றனர். கழுகுகளுக்கு அமுதூட்டும் செயல்கள் ஆயிரம் ஆண்டுகளாக நடைபெறுகின்றன என்கின்றன நூல்கள்!

இமயத்திலுள்ள மானசரோவர் ஏரி 15,000 அடி உயரத்தில் கடல்போல் உள்ளதாம். இரவில் இந்த ஏரியில் ஓர் அற்புதம் நடக்கிறதாம். நள்ளிரவு அல்லது அதிகாலை 3 மணிக்கு மேல் கயிலை மலையை நோக்கி வானிலிருந்து பெரிய நட்சத்திரம் ஒன்று பறக்கிறதாம். இன்னும் சில நட்சத்திரங்கள் அதைப் பின் தொடர்கின்றனவாம். பின்பு ஏரியிலிருந்து மேலே போகின்றன. இந்த நட்சத்திர விளையாட்டு சுமார் 20 நிமிடங்கள் நீடிக்கின்றன என்று நூல்களில் படித்தேன்.

ஆம் பாரத நாட்டில் இவ்வாறு அறிவுக்குப் புலப்படாத வினோத அறிவியலுக்கு எட்டாத எத்தனையோ சம்பவங்கள் நடை பெறுகின்றன.

காஞ்சி அருகே ஒரு திருமால் கோவில் உள்ளது. அங்கு ஒரு மூதாட்டி இறைவனுக்குத் தொண்டு செய்து வந்தாள். தளர்ச்சியின் காரணமாகக் கஷ்டப்படுவதைக் கண்ட கணிக் கண்ணன் (திருமழிசை யாழ்வாரின் சீடன்) இறைவனை வேண்டிப் பாடல் ஒன்று பாடினான். ஆச்சரியம்படும்படி

மூதாட்டி இளங்குமரியாக மாறினாள். இதைக் கேட்ட பல்லவ மன்னன் தனக்கும் அதே போல் பாடி இளமை தரும்படி கேட்க, கணிக்கண்ணன் மறுத்து விட்டான்.

உடனே அவனை நாடு கடத்துகிறான் மன்னன். கணிக் கண்ணனும் அவனது குரு திருமழிசை ஆழ்வாரும் நாட்டை விட்டுக் கிளம்ப. ஆண்டவனின் அடியார்க்கு இந்த நாட்டில் இடம் இல்லையேல் நானும் இங்கு வாழேன் என்று கூறி ஆலயத்தின் பெருமாளையும் தன்னுடன் வரும்படி அழைத்தார்.

*''கணிக்கண்ணன் போகின்றான் காமுறு பூங்கச்சி*
*மணிவண்ணா நீ கிடக்க வேண்டாம் - துணிவுடைய*
*செந்நாப் புலவனும் போகின்றான் - நீ உன்தன்*
*நாகப்பாய் சுருட்டிக் கொள்.'*

என்று பாடினார்.

இறைவன் பக்தரின் பக்திக்குச் செவி சாய்த்து, அவர் களுடன் கிளம்புகிறான். இதை அறிந்த மன்னன் இருவரின் கால்களிலும் வீழ்ந்து மன்னிப்புக் கேட்டு, தாங்களும் இங்கேயே தங்கிச் செல்லுமாறு வேண்ட மீண்டும் திருமழிசை ஆழ்வார் இறைவனை அந்த நாட்டிலேயே இருக்கப் பாடுகின்றனர். இறைவனும் பக்தரின் பக்திக்குப் பணிந்து அங்கேயே தங்கி அருள் பாலித்தார் இறைவன் காஞ்சியில் தங்க,

*''கணிக்கண்ணன் போக்கொழிந்தான் காமுறு பூங்கச்சி*
*மணிவண்ணா நீ கிடக்க வேண்டும் - துணிவுடைய*
*செந்நாப் புலவரும் போக்கொழிந்தேன் - நீ உன்தன்*
*பைநாகப்புலவரும் படுத்துக் கொள்''*

என்று பாடுகிறார்.

இதிலிருந்து பக்தரின் பக்திக்கு இறைவன் கட்டுப்படுவார் என அறிய முடிகிறது. இதிலிருந்து இறைவனிடம் எவ்வாறு பக்தி செலுத்தலாம்?

1. இறைவனின் குணங்களைக் காதாரக் கேட்டல்.
2. இறைவனைப் போற்றிப் பாடி வணங்குதல்.

3. பூக்களாலும் இலைகளாலும் அர்ச்சித்தல். (அர்ச்சனை செய்தல்).

4. திருவுருவத்தைப் பூஜித்தல் அதாவது உருவ வழிபாடு அல்லது விக்கிரகங்களின் வழிபாடு.

5. தியானித்தல் அல்லது தவம் செய்தல்.

6. பகவானுக்குத் தன்னையே அடிமையாக்குதல்.

7. பகவானைத் தன் உற்ற நண்பனாகவும் உறவினராகவும் பாவித்தல்.

8. பகவானுக்குத் தன்னை முழுமையாக அர்ப்பணித்தல்.

9. ஆலயப்பணிகள் செய்வதன்மூலம் இறைவனிடம் பக்தி செலுத்தல்.

10. கற்பூர ஆரத்தி மூலம் இறைவனிடம் பக்தி செலுத்தல்.

கற்பூர ஆரத்தியின் தத்துவம் இறைவன் ஜோதிமயமான வன் என்றும் நம் உயிரும் அவனிடமிருந்து வந்த ஒரு அணுதான், அவை வாழ்ந்து, வளர்ந்து, முடிவில் கற்பூரத்தைப்போல் எரிந்து அடங்குவது என் ஆசைகள் அனைத்தும் அழிந்து மறை யட்டும். கற்பூர ஒளியில் என் வாழ்க்கையில் எனக்கு உயர்ந்த குறிக்கோள் என் வாழ்க்கை ஒளி காட்ட வேண்டும் என்று வேண்டிக் கொள்ளவேண்டும். இதுவே கற்பூர ஆரத்தியின் தத்துவம்.

பலவகைகளில் கடவுளிடம் மக்கள் நம்பிக்கையுடனும் தெளிவான சிந்தனையுடனும் பக்தியைச் செலுத்தினாலும் ஒவ்வொன்றிலும் ஒரு விஞ்ஞான பூர்வமான செயல் விளங்கு கின்றது.

பக்தியின் மூலமாகவும், த்யானம், ஞானம் யோகம் மூலமும் நாம் நினைத்ததைச் சாதித்து வாழ்வில் வளம் பெறுவோம்.

*கலையாத கல்வியும் குறையாத வயதுமோர்*
*கபடுவாராத நட்பும்*
*கன்றாத வளமையும் குன்றாத இளமையும்*
*கழுபிணியிலாத உடலும்*

*சலியாத மனமும் அன்பகலாத மனைவியும்*
*தவறாத சந்தானமும்,*
*தாழாத கீர்த்தியும் மாறாத வார்த்தையும்*
*தடைகள் வாராத கொடையும்*
*தொலையாத நிதியமும் கோணாத கோலும் ஒரு*
*துன்பமில்லாத வாழ்வும்*
*துய்ய நின் பாதத்தில் அன்பும் உதவிப் பெரிய*
*தொண்டரொடு கூட்டு கண்டாய்*
*அலையாழி அறிதுயிலும் மாயனது தங்கையே!*
*ஆதி கடவூரின் வாழ்வே.*
*அமுதீசர் ஒரு பாகம் அகலாத சுகபாணி*
*அருள் வாமி அபிராமியே-*

என்றார் அபிராமபட்டர் அவர் வழிநின்று வணங்கி வாழ்வோமாக!

# 5. யந்திரங்களும் அதன் பயனும்

தெய்வங்களைப் பூஜிக்க உருவமாகவும் சித்திரமாகவும் வடித்து, கோவிலில் சென்று வழிபடுகிறோம். அதேபோல் யாகங்களின் மூலம் சக்தி வாய்ந்த சப்த உச்சாடனங்களிலும வெளிப்படுத்தி மந்திரங்களாக ஓதி வழிபடுகிறோம்.

இதில் பீஜ அக்ஷரங்கள் மூலம் சக்தியை உருவாக்கும் வித்துக்கள் எழுத்து வடிவில் உச்சாடனமாகவும் இடம் பெறு கின்றன. இந்த இரண்டுக்குமிடையே வருவதுதான் சக்கரம் அதை யந்திரம் என்றும் சொல்லலாம்.

ஒவ்வொரு தெய்வத்திற்குரிய சக்கரத்தை அமைப்பதன் மூலம் அந்தந்தத் தெய்வத்தை நாம் வணங்கலாம். எதற்காக வேண்டி எந்தக் காரியசித்திக்காக வேண்டி வழிபடுகிறோமோ அதற்காகவும் வழிபடலாம்.

யந்திரம் வைத்துக் கும்பிடும்போது நேரடியாக அந்தத் தெய்வத்தின் வடிவம் மனதில் எழுகிறது. ஸ்ரீசக்கரத்தின் மூலம் ஞானிகள் ஒளிபொருந்திய கதிர்கள் சக்கரத்தைச் சுற்றிப் பிரகாச மாக ஒளி வீசுவதைக் கண்டுள்ளார்கள். சப்தங்களின் மூலம் தேவதைகளை அழைப்பது மந்திர சாஸ்திரம். யந்திரங்களின் மூலம் தேவதைகளை அழைப்பது யந்திர சாஸ்திரம். மந்திரம் யந்திரம் இரண்டையும் உபயோகித்து, தேவதைகளை அழைப்பது தந்திர சாஸ்திரம்.

மந்திரங்கள் மனதுக்குரியவையாக உள்ளே நினைவில் இடம் பெறுகின்றன. யந்திரம் வெளியே பூஜைக்குரியதாக அதாவது புறவழிபாடாக இடம் பெறுகிறது.

உருவ வழிபாட்டைக் காட்டிலும் இது உருவ எல்லைகளைக் கடந்த ஒன்றாகக் கருதப்படுகிறது. சக்கரம் என்பது மந்திரத்தைப் போலத் தெய்வீக உருவத்தைச் சிந்தையில் நிலைநிறுத்தச் செய்கிறது.

கடவுளின் உருவத்தை மனத்திரையில் நினைத்து, எழுதி வைத்து அதாவது பாவனை செய்து, அதை நினைப்பது மந்திரத்தின் பொருளாகும்.

வழிபாடு செய்வதற்காக மந்திரம் சொல்வது வேறு. ஒரு தேவதையை உபாசித்து மந்திர சித்தி பெறுவது வேறு.

வழிபாடு செய்பவர்கள் எதற்கு என்ன பலன்களை நாம் அடைய வேண்டுமோ அதற்கான மந்திரத்தையும் அந்த மந்திரத்தின் தேவதையின் யந்திரத்தையும் அமைத்துக் கூறவேண்டும். தன் இஷ்ட தெய்வத்தையும் வணங்கலாம்.

சில மந்திரங்களை நடைமுறையில் விடாது கடைப்பிடித்துக் கூறினால்தான் நாம் நினைத்த காரியங்கள் சித்தியாகும்.

அஷ்டமா சித்தி பெறுவோர் அதற்குரிய தேவதையையும் எந்திரத்தையும் வழிபட்டு வந்தால் அதற்குரிய மந்திர சக்தியை அடைவார்கள். இதனால் பல அதிசயமான அற்புதமான சித்திகளைப் பிறருக்கும் செய்து காட்டலாம். அவர்களுக்கு இதன் மூலம் நன்மையும் பெறச் செய்யலாம்.

நமக்கும் பிறருக்கும் நன்மை அளிக்கக்கூடிய மந்திரங்களைப் பிரயோகிக்கச் சாந்த வடிவிலான தெய்வங்களான திருமால், லஷ்மி, பார்வதி, சரஸ்வதி, கணபதி, சிவன், முருகன் என்னும் பல தெய்வங்களைக் கும்பிடலாம். நல்ல மந்திரங்கள் எப்போதும் நன்மை தரக் கூடியவை.

சில தெய்வங்களை நல்ல பலனுக்கும் கும்பிடலாம். தீய பலனுக்கும் (செயலுக்கும்) கும்பிடலாம். தீய மந்திரத்தை உபாசனை செய்பவர்களையும் அவர்தம் குடும்பத்தாரையும் அது மிகுந்த கொடூர முறையில் தாக்கும்.

மந்திரம் என்பதன் பொருள், 'நினைப்பவரைக் காப்பது' என்பது ஆகும்.

*மந்* - நினைத்தல்
*திரம்* - காத்தல்

மந்திரமாவது தன்னை நம்பிப் பயன்படுத்துவர்களைக் காத்து அருள் புரியக்கூடியது.

யந்திரம் என்றால் நாம் சொல்லும் மந்திரத்தை இயக்கும் கருவி என்று பொருள். இந்த யந்திரத்தில் அட்சரங்கள் பீஜங்கள் வரைந்து, அந்த அந்தத் தேவதைக்குரிய மந்திரங்களை யந்திரங் களில் பதித்து, ஜெபம் செய்து வேண்டி, பயன் பெறலாம்.

மந்திரம் உயிர் எனில் யந்திரம் மூச்சுக் காற்று. மந்திர அட்சரங்களை யந்திரத்தில் எழுதி அம்மந்திரங்களை உச்சரித்தும் அந்த அந்தத் தெய்வங்களுக்கான மந்திர யந்திர உபாசனை களால் வேண்டி, பலன்கள் அடையலாம்.

சித்தர்களும் யந்திரத்தை வரைந்து மந்திரங்கள் கூறி அதற்குச் சக்தியூட்டி வழிபட்டு வந்தனர். பல கோவில்களிலும் குகைகளிலும் வரைந்துள்ளனர். சேலத்திலுள்ள ஊத்துக்காடு மலையில் (கோவிலில்) அகத்தியர் சக்கரத்தை வரைந்து வழி பட்டார்.

அகத்தியர் பல இடங்களுக்குச் சென்று இறைவனை வழி பட்டு வந்தார். ஆங்காங்கே தங்கும்போது தம் வழிபாட்டில் குறை ஏற்படாமல் இருக்க, தாம் தங்கும் இடத்தில் யந்திரத்தை வரைந்து வழிபட்டார். ஊத்துக்காடு என்கின்ற மலையில் அகத்தியர் வந்து தங்கியதாகவும் அப்போது மலையின் பாறையில் சக்கராதேவியை யந்திரமாக வரைந்து வழிபட்டதாகவும் அங்குள்ளவர்கள் கூறுவார்கள். பாறையில் யந்திரமும் பக்கத்தில் குகையும் நீர்ச் சுனையும் உள்ளன.

ஆதிசங்கரரும் தான் செல்லும் இடங்களில் எல்லாம் யந்திரம் வரைந்து வழிபட்டதுமல்லாமல் சில கோவில்களிலும்

யந்திரம் பதித்து அதற்கு மந்திர சக்தியை ஊட்டி வழிபடும் முறையையும் அங்குள்ளவர்க்கு அருளினார். இன்றும் பல இடங்களில் வழிபாடுகள் நடந்து வருகின்றன.

சித்தர்களும், ரிஷிகளும் பாறைகளிலும் ஓலைச் சுவடி களிலும் குரு வழியிலும் மந்திர யந்திர கலை சித்தி பெறவும், நாம் உபாசிக்கும் அந்த யந்திரங்களின் தேவதைகளின் அருள் ஆசியைப் பெறவும் பற்பல வழிகளைக் கூறி உள்ளனர்.

1. யந்திரத் தகடு செய்யவும், மந்திரத்தைச் சொல்லவும், எதனால், என்ன காரிய சித்திக்காகத் தேவை என்பதை நன்கு அறிந்த குருவிடம் தெரிவித்தால் அவர் குற்றங்கள் இல்லாமல் செய்து அதற்குரிய மந்திரத்தைத் தெரிவிப்பார்.

2. யந்திரத் தகடு கசங்கி மெல்லிய தகடாக இருக்கக் கூடாது.

3. யந்திரத் தகடு சுத்தமாக, துவாரங்கள் சிறிதும் இன்றி இருக்க வேண்டும். கசங்கிய தகட்டையோ துவாரங்கள் உள்ள தகட்டையோ பயன்படுத்தக் கூடாது.

4. யந்திரமானது அச்சுப்பதித்து இப்போது பல இடங்களில் விற்பனைக்கு வருகின்றன. அவ்வாறு அச்சுப்பதித்து எடுத்த தாக இருக்கக்கூடாது. அச்சு மூலம் பதித்த யந்திரங்களைப் பயன்படுத்தக் கூடாது.

5. யந்திரங்களை வெள்ளி, தங்கம், செம்பு என்று எந்தத் தகட்டில் செய்யச் சொல்லி உள்ளதோ அதில் செய்வது தான் சிறப்பானது.

6. யந்திரங்களில் எழுதும் எழுத்துக்கள் பிழையின்றி இருப்பது மிகமிக அவசியம். (உ.ம்) க்லீம் என்பதை ச்லீம் என்று பிழைபட எழுதிவிடக்கூடாது.

7. யந்திரங்களுக்காக வரையும் கோடுகள் நேராக இருக்க வேண்டும். விட்டு விட்டுக் கோடு போடக்கூடாது. கோடுகளின் இணையானது இடைவெளி இன்றி சரியாக இருக்க வேண்டும்.

*8. யந்திரத்தை நமக்குக் கொடுக்கும் குரு யாரோ அவரே போட்டுத் தருவது சாலச்சிறந்தது. அவரே நாளும் கிழமையும் ஓரையும் பார்த்து நமக்கு எது நன்மை அளிக்கக்கூடிய காலமோ அக்காலத்தில் அவரே எவ்வாறு யந்திரத்தை வைத்து எவ்வாறு மந்திரத்தைக் கூறிப் பூஜை செய்வது என்பதைச் சொல்லித் தருவார். அதன்படி நாமும் பூஜை செய்வது நமக்கு நல்லது. யந்திரம் பூர்த்திஆன பின்பு, குருவே அந்த யந்திரத்திற்கு ஜீவப் பிரதிஷ்டை, பிராணப் பிரதிஷ்டை அமைத்துக் கொடுப்பார்.*

*9. யந்திரத்தையும் அதைச் சொல்லிக் கொடுத்த குருவையும் அலட்சியம் செய்யக்கூடாது. யந்திரமும் மந்திரமும் தேவதை களாகும். அதைப் பய பக்தியோடு சுத்தப்படுத்திக் கும்பிடும் போது பூஜை செய்யும் மனிதனின் சக்தி மந்திர சக்தியோடு ஒன்றுபடுகிறது. அப்போது தேவதா சக்தி பக்தனைக் கை தூக்கி விடுகிறது.*

*10. எந்த யந்திரத்தையும் தர்ம வழியில் நன்மைக்கே பயன் படுத்துங்கள். நீங்கள் அதனால் வாழுங்கள்; மற்றவர்களையும் வாழவிடுங்கள்.*

*11. யந்திரம் எழுதும் போது எழுதிய எழுத்தின்மேல் மறுமுறை எழுதக்கூடாது.*

*12. தங்கள் குடும்பத்தின் முன்னேற்றத்தையும் தன் முன்னேற்றத்தையும் இதன் மூலம் உயர் நிலையில் வைத்துக் கொள்ளலாம்.*

### யந்திரத்தைப் பயன்படுத்துவது எப்படி?

*1. அபிஷேகம் செய்ய வேண்டும்.*

*2. நிவேதனப் பொருளாக எது வேண்டுமானாலும் வைக்கலாம், பால், பழம், சாதம், நீர் என்று வைக்கலாம்.*

*3. அர்ச்சனைப் பொருட்களாகப் பூக்கள், குங்குமம் எடுத்துக் கொள்ளலாம்.*

*4. அந்தந்த தெய்வத்திற்குரிய பூக்கள் அல்லது மல்லிகைப்பூ.*

5. ஆராதனைப் பொருட்களாகச் சாம்பிராணி தூபம், ஊதுவத்தி, கற்பூரதீபம் ஆகியவை பயன்படுத்திக் கொள்ளலாம்.

யந்திரங்களையும் மந்திரங்களையும் கொண்டு வாழ்க்கையை வளப்படுத்திக் கொள்ளலாம்.

கணபதி யந்திரம் வரும் வினைகளையும் தடைகளையும் தகர்த்தெறியும், காரிய சித்தி ஏற்படும்.

சரஸ்வதி யந்திரம் சகல கலைகளையும், படிப்பையும், புகழையும் தந்து மேதை ஆக்கும் தன்மை கொண்டது.

துர்க்கா யந்திரம் தீவினைகளை அகற்றி, பயத்தை நீக்கும், சத்ருக்களின் தொல்லைகளை நீக்கும்.

சுப்பிரமணியர் யந்திரம் வரும் தொல்லைகளை அகற்றும் துஷ்ட தேவதைகள் அணுகாது.

திருமணத் தடை நீக்கும் எந்திரம்.

மக்கட் பேறு அடைய யந்திரம்.

சாப நிவர்த்தி யந்திரம், கடன் நீங்க யந்திரம், நவக்கிரக யந்திரம் அந்தந்தக் கிரகங்களின் யந்திரத்தை வரைந்து மந்திரம் சொன்னால், நாள் ஆகஆகக் கிரகங்களின் தொல்லை நீங்கி, வளம் பெறலாம்.

விபத்துகள், ஆபத்து, அகால மரணங்களிலிருந்து காப்பாற்றும் யந்திரம் ஒன்றும் உள்ளது.

கோவில்களில் சிலையின் அடியில் அதற்குரிய தெய்வத் தின் கீழே யந்திரத்தைப் பதியவைத்து, 48 நாட்கள் அதாவது ஒரு மண்டலம் பூஜையும் மந்திரங்களையும் அர்ச்சனைகளையும் செய்து, அந்தத் தெய்வத்தின் பலத்தையும் சக்திகளையும் யந்திரத் திற்குள் வரும்படி செய்வார்கள்.

பின்னர், கோவில் அர்ச்சகர் மந்திரம் சொல்லச் சொல்ல, யந்திரத்தில் சக்தி இருந்து கொண்டே இருக்கும். பிரபஞ்ச சக்தி அதில் பதிவதால் கும்பிட வருவோர்க்கு நன்மை ஏற்படுகிறது.

யந்திரம் என்பது பொன், வெள்ளி, செம்பு, தாமிரம், பஞ்சலோகம் போன்ற உலோகத் தகடுகளில் எழுதப்படும். அதற்கு அபிஷேகம் செய்து நைவேத்தியம், தாம்பூலம், தூபம், தீபம் காட்டி வழிபட வேண்டும். சிறிது கஷ்டமாக இருந்தாலும் பலன் அதிகம். குறிப்பிட்ட தெய்வத்திற்கு உரிய யந்திரம் எழுதி, மந்திரங்கள் சொல்லிப் பூஜிப்பதால் அந்தத் தெய்வத்தின் அருள் நமக்குக் கிட்டும். நம் வாழ்வும் சிறக்கும். வளம் பெருகும், மன நிம்மதி கிடைக்கும்.

# 6. மந்திரங்களும் ஒலியின் செயல்களும்

முதன் முதலில் ஒலி வடிவத்தில் சப்தப் பிரபஞ்சம் ஆகாயத்தில் தோன்றியது. பின்னர் ஒலி வடிவத்தில் கண்ணால் பார்க்கின்ற பிரபஞ்சம் தோன்றியது. ஆகாயத்தில் உலகத்தில் உள்ள அனைத்து சப்தங்களும் இருக்கின்றன. இதைத்தான் 'அண்டத்தில் உள்ளது பிண்டத்திலும் உள்ளது' என்று சித்தர்கள் கூறினார்கள். இந்த ஆகாயத்தின் ஒலிசக்தி மனிதனின் இதயத்திலும் உள்ளது.

யோகிகள் சமாதி நிலையில் இந்த ஹிருதயாகாசத்தை அனுபவிக்கிறார்கள். அப்போது அவர்களுக்கு அனைத்தும் ஒன்றாகி விடுகிறது. இந்த நிலையில் யோகிகளுக்கும், ரிஷி களுக்கும் த்யானத்தின் மூலம் மனதை அடக்கி ஆகாயத் திலுள்ள சப்தங்களைக் கிரகிக்க முடிகிறது. அவற்றால் உலக நன்மைக்காக அமைக்கப்பட்ட சப்த கோவைகளே வேத மந்திரங்கள் ஆகும்.

யாரும் இதை உருவாக்கவில்லை யார் மிக்க தவம் செய்து ஆகாசத்தில் உள்ள மந்திரங்களை அறிந்து உலகுக்குத் தெரிவித் தார்களோ அவர்களின் பெயர்களில் மந்திரங்கள் இயற்றியதாக அறியப் படுகிறது.

கடவுளின் மூச்சு வேத மந்திரங்கள் ஆகும். 'ரிஷா' என்றால் 'மந்த்ர த்ரஷ்ட்' அதாவது மந்திரத்தைக் கண்டு பிடித்தவர் என்று பொருள்.

முதன் முதலில் பிரபஞ்சமானது இருட்டாகவும் ஒலி யில்லாமலும் இருந்தது. சில காலம் கழித்து ஒளி தோன்றியது.

பின் ஓங்கார ஒலி தோன்றியது. அதிலிருந்து 'ஓம்' என்ற ஒலி ஏற்பட்டது. பின் பலவகை ஒலிகள் ஏற்பட்டு ஒலி அலைகள் ஏற்பட்டன. அணுக்கள் உண்டாயின. ஓரணுவிலிருந்து ஆரம்பித்து விலங்குகள், பறவைகள், மரங்கள், மனிதர்கள் ஆகியவை தோன்றின. அவை அனைத்திற்கும் ஒலி அலைகள் மூலம் பேச்சுத் திறன் ஏற்பட்டது. மனிதனின் அறிவால் பேச்சுத் திறன் வளர்ந்து ஆராய்ச்சிகளும் படிப்படியாக நாகரிகங்களும் வளர்ந்தன.

கதை எழுதவும் கவிதை எழுதவும் ஒலி அலைகளை கொண்டு பாடவும் தெரிந்து கொண்டான். "தான் யார்? எங்கிருந்து வந்தோம்? தான் இறந்த பின் எங்கே செல்கிறோம்?" என்று சிந்திக்க ஆரம்பித்தான்.

மனிதன் தன்னை மீறிய இயற்கை சக்தியினால் பாதிக்கப் பட்டு அவற்றிற்குப் பயந்து அதனை வழிபட ஆரம்பித்தான். தான் ஏதோ ஓர் இடத்திலிருந்து பிறக்கிறோம் என்றும் இறந்த பின் எங்கோ செல்கிறோம் எனத் தீர்மானிப்பவர் ஒருவர் இருக் கின்றார் என்றும் அவருக்குக் கடவுள் என்றும் பெயர் வைத்தான்.

அந்தக் கடவுளை எப்படித் தொழுவது என்று சிந்தித் தான். பலகாரங்களைக் கடவுளுக்குப் படைத்தான். உயிர்ப் பலி கொடுத்தான், பூஜை செய்தான், நன்கு சிந்தித்துச் சிந்தித்து கடவுளைப் போற்றிக் கும்பிட மந்திரம் என்னும் ஒலி வடிவங் களைக் கண்டுபிடித்தான். அவற்றை உச்சரித்து உச்சரித்து, அவற்றிற்கு வலிமையைக் கொடுத்தான்.

விஞ்ஞானிகளோ, "ஆகாயத்தில் ஒலி வடிவில் நிகழ் காலம், இறந்தகாலம், எதிர்காலம் என்ற அனைத்தும் பதிவாகி உள்ளன. அதன்படிதான் உலகம் இயங்குகின்றது என்று கண்டுபிடித்து உள்ளனர்.

## மந்திரம் என்பது என்ன?

ஒரு சொல்லையோ (ஓம்) அல்லது பல சொற்கள் அடங்கும் ஒரு தொகுப்பையோ (உ-ம் காயத்ரீ மந்திரம்)

திரும்பத் திரும்பச் சொல்லும்படி அமைந்திருப்பது 'மந்திரம்' எனப்படும்.

கல்லுக்கு என்று பல தனி சிறப்புகள் உண்டு. ஆண்கல் என்றும் பெண்கல் என்றும் அலிக்கல் என்றும் பலவகை உண்டு. ஆண்கல்லைக் கொண்டு ஆண்தெய்வத்தையும், பெண்கல்லைக் கொண்டு பெண் தெய்வத்தையும் செய்வர். கல்லுக்கு ஒலியை வாங்கித் திருப்பிச் செலுத்தும் திறன் உள்ளது. சில கற்களைத் தட்டிப் பார்த்தால் ஒலி உண்டாகும். மதுரை மீனாட்சி கோவிலில் ஏழு சுரங்கள் உண்டாகும் கல் தூண்கள் ஏழு தனித்தனியே உள்ளன.

நாம் கோவிலுக்குச் செல்கிறோம். சுவாமிக்கு அர்ச்சனை செய்கிறோம். அந்த அர்ச்சனை சுவாமிக்கு அல்ல தானும் தன் குடும்பமும் நன்றாக இருக்க, அவர்கள் மந்திர ஒலியில் கடவுளிடம் அர்ச்சனை செய்யும்போது அந்த ஒலியானது நம் மேல் படரும். நாமும் நம் சிந்தனையால் கடவுளை வேண்டும் போது, நம் சிந்தனைகள் கடவுளின் உருவத்தின் மேல் பட்டு, ஒலி அலைகளாகவும் சிந்தனை அலைகளாகவும் நமக்கு வந்து சேரும்.

ஒரு வீடு வாங்கும்போதும் நிலம் வாங்கும்போதும் அதை, ''முன்னர் வைத்திருந்தவர்கள் எப்படி வாழ்ந்தார்கள்?'' என்று விவரம் தெரிந்தவர்களிடம் விசாரித்து, திருப்தி ஏற்பட்ட பின் வாங்குவார்கள். ஏன் தெரியுமா? அங்குள்ளவர்கள் வாழ்ந்த வாழ்க்கையும் அவர்கள் குடும்பத்தில் உள்ளவர்கள் ஒருவரோடு ஒருவர் பழகிய விதமும் வீட்டின்மேல் பதிவாகிறது.

அவை, ஒலி அலைகளால் திரும்பத் திரும்ப அந்த வீட்டிற்கு வரும். அந்தச் சொத்தை வாங்குபவர்கள்மீது அந்த அலைகள் படியும். நல்ல முறையில் வாழ்ந்தால். சொத்தை வாங்குபவர்கள் நன்றாக இருப்பார்கள். இல்லையேல், முன்னர் வீட்டிலுள்ளவர்கள் எவ்வாறு வாழ்ந்தார்களோ, அவ்வாறே, அடுத்து வாங்குபவர்களையும் அவ்வலைகள் பாதிக்கும்.

கோவிலில் மந்திரத்தினால் யாகம் அடிக்கடி செய்வார்கள். அவை ஆகாயத்தில் படிந்து கலசங்கள் மூலமாகக் கடவுள் சிலையை வந்தடையும்.

அக்கோவிலில் உள்ள தெய்வத்தைக் கும்பிடுபவர்களின் மீது மந்திர ஒலி அலைகள் படியும். தொடர்ந்து கோவிலுக்கு வரும்போது அந்த அலைகள் படிந்து படிந்து கூடவே இவர்களின் சிந்தனைகளும் பலப்பட்டு, பலருக்குக் கோவிலுக்கு வந்த காரியம் சித்தி அடையும். அதனால்தான் 48 நாட்கள் பூஜையைச் செய்ய வேண்டும் என்று நம் முன்னோர்கள் கூறுவார்கள்.

நம் தமிழ்நாட்டிலுள்ள சித்தர்களும், முனிவர்களும், துறவி களும், மந்திரத்தைத் தமிழில் எழுதி வைத்தனர். வட நாட்டிலும் மற்ற இடங்களிலும் சமஸ்கிருதத்திலும் பழைய மொழியான கிரந்தங்களிலும் எழுதி வைத்தனர்.

மந்திரங்களினால் நல்ல வாழ்க்கையையும் அமைத்துக் கொடுத்தனர். எதிரிகளை அழிக்கவும் மந்திரத்தைப் பயன் படுத்தினர். புலவர்கள் அறம் பாடி எதிரிகளை அழிப்பர்.

**மந்திரங்கள்**

நல்ல வழியில் பயன்படுத்துதல் தீய வழியில் பயன் படுத்துதல்.

நல்ல மந்திரங்களைப் பயன்படுத்தினால் தனக்கும் தன் குடும்பத்தாருக்கும் நல்லது விளையும். தீயவழியில் பயன் படுத்தினால் யாரை நோக்கிச் செலுத்தினோமோ ஜாதக ரீதியாக அவர்களுக்குப் பாதிப்பு இருப்பின் பாதிக்கும் இல்லை யேல், பாதிக்காது. தீய மந்திரத்தை யார் தீய வழியில் பயன்படுத்தி னார்களோ, அவர்களை அது திரும்பச் சென்று தாக்கும் தீயதை நினைத்தவரின் குடும்பமே பாதிக்கும்.

*'முற்பகல் செய்யின்*
*பிற்பகல் விளையும்'*

என்றும், 'தாய் தந்தை செய்தது மக்கட்கு' என்றும் கூறினார்கள். தாய் தந்தை தர்ம சிந்தனையுடன் நல்ல மனத்தோடு வாழ்ந்து வந்தாலும் பிறருக்கு நன்மை செய்து வந்தாலும் அவர்களின் குழந்தைகளுக்கும் பின்வரும் வம்சா வழியாக வரும் வாரிசுகளுக்கும் அது பயன்படும்.

ஓம் என்னும் நாத வடிவில் இறைவன் உள்ளான்.

*'நாத விந்து கலாதீ - நமோ நம*
*வேத மந்த்ர சொரூபா நமோ நம*
*ஞான பண்டித சாமீ நமோ நம வெகுகோடி'*

என்று கூறுகிறது திருப்புகழ்.

ஒலியின் மூலமாக மந்திரங்களைக் கூறி அவனை வழிபடுகிறோம்.

'நாத பிரம்மமே மந்திரம்' என்று கூறப்படுகிறது. ஒலி வடிவமாக, நாத வடிவமாக இயங்கும் கடவுளை நாம் மந்திரமாகப் போற்றுகிறோம்.

மந்திரம் என்பது நினைப்பவரைக் காப்பது என்பது பொருள்.

*மந்* - நினைத்தல்
*திரம்* - காத்தல்

மந்திரமாவது தன்னை நம்பிப் பயன்படுத்துபவர்களைக் காத்து அருள் புரியக்கூடியது.

ஒரு முறை யாகம் செய்யும்போது ஆங்கில விஞ்ஞானிகள் கூடி, பலவிதங்களில், பல கோணங்களில் யாகம் செய்யும் (அக்னி குண்டம்) இடத்தைப் படம் பிடித்தனர். புகைப் படத்தைக் கழுவிப் பார்த்ததும் அதில் ஒன்றும் தெரியவில்லை. பின்னர் சிவப்பு நிறக் கண்ணாடித்தாளை லென்ஸ் முன்னால் கட்டி, மீண்டும் படம் எடுத்தபோது அதில் படம் தெரிந்தது.

எந்தத் தெய்வத்தைக் குறித்து நாம் யாகம் செய்கிறோமோ அந்தத் தெய்வ உருவம் நாம் கொடுக்கும் ஆகுதியை வாங்கிக் கொள்கின்றன என்றும் அறிந்து கொண்டோம். (நன்றி:- விக்கிரம ரவிச்சந்திரன் அவர்கள்)

அதாவது யாரைக் குறித்து மந்திரம் கூறி, யாககுண்டத்தில் நைவேத்யம் அர்ப்பணிக்கிறேமோ அந்த மந்திரத்திற்குரிய தெய்வம் நைவேத்யத்தை ஏற்று, நமக்கு ஆசீர்வாதம் செய்து விட்டுச் செல்கின்றது என்று கண்டு பிடித்தனர். அதைப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நம் முன்னோர்கள் அறிந்து உள்ளனர் என்று புராண வரலாறு கூறுகிறது.

தசரதன் குழந்தை வேண்டி யாகம் செய்து, அக்னி பகவான் அளித்த பாயசத்தைத் தன் மனைவிகளான கோசலை, கைகேயி, சுமத்திரை ஆகியோர்க்குப் பங்கிட்டுக் கொடுத்தான். அதை அருந்தி அவர்கள் இராமர், இலட்சுமணன், சத்ருக்னர், பரதர் என்று நான்கு மகன்களைப் பெற்றார்கள் என்று இராமாயணத்தில் அறிகிறோம்.

மதுரைப் பாண்டியன் குழந்தை வேண்டி யாகம் செய்து, மதுரை மீனாட்சியைக் குழந்தையாக அடைந்தான் என்று படித்து அறிந்துள்ளோம்.

மந்திரத்தை உருவேற்ற உருவேற்ற அதனுடன் மனமும் ஒன்றுபட்டு, நாம் எண்ணும் காரியங்கள் வலிமை அடைந்து, நமக்குக் காரியசித்தி கிட்டுகிறது.

அபிராமி பட்டர் அம்பிகையின் அருளைப் போற்றி அவளின் அருளைப் பெற்றார்.

திருநாவுக்கரசின் மந்திர ஒலிக்குக் கட்டுப்பட்டு, கடித்த நாகம் மீண்டும் விஷத்தைத் தானே வந்து ஏற்றது என்றும், திருமறைக் காட்டுக் கோவிலின் வாசல் கதவு மந்திர ஒலிக்குக் கட்டுப்பட்டுத் திறந்தது என்றும் படித்து அறிந்துள்ளோம்.

இடைவிடாது மந்திரங்களை ஜெபிக்கும்போது, அங்கே நம்மைச் சுற்றி ஓர் ஆகர்ஷண அலைசக்தி ஏற்படும். அது

நம்மைப் பல சூழ்நிலைகளிலிருந்தும் காப்பாற்றும் சக்தி வாய்ந்தது.

உயர்ந்த மனநிலை கொண்டு உருவேற்றி வந்தால் நமக்கு நன்மை கிட்டும்.

மந்திரங்கள் எதுவாயிருப்பினும் இடைவிடாது சொன்னால் அங்கே விஞ்ஞான ரீதியாக ஒரு சக்திஅலை பரவுகிறது என்று ஆங்கில விஞ்ஞானிகள் கண்டுபிடித்து உள்ளனர்.

நாயன்மார்களும் ஆழ்வார்களும் எவ்வளவோ சாதனைகள் படைத்துள்ளனர்.

பிணி போக்க மந்திரம், விஷக்கடி நீங்க மந்திரம், திருமணம் நடைபெற மந்திரம், மக்கட்பேறு அடைய மந்திரம், வியாபாரம் நன்கு அமைய மந்திரம், தீயசக்திகள் நம்மை அணுகாமல் இருக்க மந்திரம், மழை வேண்டி மந்திரம், என்று பலவகைப்பட்ட மந்திரங்கள் உள்ளன. அதைப் பயபக்தி யோடு சொல்லி, பயன் அடைந்தவர்கள் அதன் சக்தியை உணர் வார்கள்.

108 முறை ஒரு மந்திரத்தைச் சொன்னால் அது 'அஷ்டோத்ர மந்திரம்' எனப்படும். 1008 தடவை சொன்னால் அது 'சகஸ்ர நாம'மாகும்.

காயத்ரீ மந்திரத்தை இயற்றியவர் விசுவாமித்திரர். காய்த்ரீ என்ற சமஸ்கிருதச் சொல்லுக்குத் தன்னைப் பாடுபவனை, அதாவது, தன்னை ஜெபிப்பவனைக் காப்பாற்றுவது என்று அர்த்தம்.

காயந்தம் + தராயத இதி = காயத்ரீ

சூரியனைப் பல பொருளாக வைத்துச் செய்யப்படும் மந்திரம் "ஆதித்ய ஹ்ருதய ஸ்தோத்திரம்" ஆகும். அகத்திய முனிவர் இந்த மந்திரத்தை இராமனுக்கு உபதேசித்தார். இந்த மந்திரத்தை இராம பிரானே ஓதி இராவணனை வெல்லக் கூடிய ஆயுதங்களையும் சக்தியையும் பெற்றார்.

ஔவையார் 'விநாயகர் அகவல்' என்னும் மந்திரம் கூறினார்.

விநாயகரைத் தொழுவதால் அறிவு மேம்படும் தீவினைகள் அகலும், தடைகள் நீங்கும்.

ஸ்ரீகணேச த்வாதச நாம ஸ்தோத்திரம் இது நாரதரால் கூறப் பட்டது. நாரத புராணத்தில் இந்த மந்திரத்தை ஓதினால் அருளும் பொருளும் சந்தான விருத்தியும் கிட்டும் என்றும் அனைத்து விக்கினங்களும் நீங்கும் என்றும் கூறப்பட்டுள்ளது.

**ஸ்ரீ கனகதாரா ஸ்தோத்ரம்:** இந்த மந்திரத்தை ஆதிசங்கரர் பிரம்மசாரியாக இருந்தபோது வீடுதோறும் சென்று பிட்சை ஏற்று உண்டு காலம் கழித்து வந்தார்.

ஒரு நாள், ஓர் ஏழை அந்தணர் வீட்டுக்குப் பிட்சை எடுக்கச் சென்றார். அந்த வீட்டு ஏழைப் பெண்மணி பிட்சை யிட ஏதும் இல்லாது மனம் வருந்தினாள்.

தேஜோமயமாகப் பிரகாசிக்கும் இந்த மகா முனிக்குத் தம்மால் பிட்சையிட முடியவில்லையே தம்மிடம் எந்தப் பொருளும் இல்லையே என்று வருந்தினாள்.

வீடு முழுவதும் தேடி, ஒரே ஒரு நெல்லிக்கனி இருப்பது கண்டு, இதையாவது தரலாம் என்று உவகையோடு ஆதிசங்கர ராகிய பிரம்மச்சாரிக்கு நெல்லிக்கனியை அளித்தாள். அவளின் வாழ்விற்குக் கனகதாரா ஸ்தோத்ரத்தைக் கூறி லஷ்மியின் அருளால் பொற்காசுகள் வீட்டில் மழையாக விழவைத்தார்.

**ஸ்ரீ ஸகந்த நாமம்:** ஸ்ரீ மகாபாரதத்தில், ஸ்ரீ மார்க்கண்டே யரால் பாண்டவர்களுக்கு உபதேசிக்கப்பட்ட மந்திரம் 'ஸ்ரீ ஸகந்த நாமம்'. இதைப் படித்தால் சகல சௌபாக்யமும் உண்டாகும். வீரத்தின் கடவுள் முருகன். நம் எதிரிகளை ஜெயிக்க 'கந்த சஷ்டி' கூறலாம். செவ்வாய்க்கு அதிபதி முருகன், செவ்வாய் தோசத்தால் ஏற்படும் கஷ்டங்கள் நீங்கவும், தடைகள் நீங்கவும் இம்மந்திரத்தைக் கூறலாம்.

ஆதி சங்கரர் அருளிய ஸ்ரீ சுப்ரமண்ய புஜங்கம் வேல் மாறல், கந்த சஷ்டி போன்ற மந்திரங்களையும் கூறிப் பயன் அடையலாம்.

'துர்க்க ஸீக்த மந்திரம்' யஜுர் வேதத்தில் உள்ளது. இது மிகவும் சக்தி வாய்ந்த மந்திரமாகும்.

மகாகவி காளிதாசன் 'சியாமளா தாண்டகம்' இயற்றினார். இது துர்க்கை பற்றியது. இதனால் அறிவுக் கூர்மை, சௌ பாக்யம் கிட்டும். இன்னல்கள் நீங்கும் தன்மை கொண்டது.

மகிஷாசுர மர்த்தினி ஸ்தோத்ரம். துர்க்கையைச் சாந்தப் படுத்தி அவளைப் போற்றக்கூடியது. இதனால், சகல நன்மையும் நமக்குக் கிட்டும்.

மந்திரத்தின் அர்த்தத்தைவிட சப்தத்திற்குத் தான் முக்கியம் தரப்படுகிறது. ஒருவன் எதிரிக்கு மந்திரத்தின் மூலம் பில்லி சூன்ய மந்திரத்தைச் சொல்லும்போது சப்தத்தில் வேறுபாடு காணப்பட்டால் அதை எய்தவனையே தாக்கிவிடும். அதனால் தான் பில்லி சூன்யம் வைக்கிறவர்களின் பல்லைத் தட்டி விடுவார்கள் என்று கேள்வி. 'பல் போனால் சொல் போயிற்று' என்ற பழமொழி உண்டு.

பல் போனால் அவர்களின் பேச்சில் சொல் மாறுபடும். அவர்கள் ஜெபிக்கின்ற மந்திரங்களில் சப்த தோஷம் ஏற்பட்டு அதன் பலன் கிட்டாமல் போகும். 'உச்சாடணம்' அதாவது உச்சரிக்கும் சொல் சுத்தமாக இருந்தால், அக்ஷரங்கள் பலன் தரும். சப்தங்களுக்கே இப்படிச் சக்தி இருப்பதைப் புரிந்து கொண்டோமானால் அப்புறம் எந்த மந்திரம் எந்த பாஷையில் உள்ளது. அதை வேறு மொழியில் மாற்றலாமா என்கின்ற எண்ணம் ஏற்படாது. மொழி வேறுபாட்டால் சப்தங்கள் மாறி விடும். எனவே, அந்தந்த மொழியில் மந்திரத்தைக் கற்பது சாலச் சிறந்தது ஆகும்.

தானாகப் புத்தகத்தைப் படித்து, பிழைபட மந்திரங்கள் கூறாமல் குருவின் மூலமாக அறிந்து அதைத் தவறில்லாமல் மனத்தூய்மையோடு கூறவேண்டும்.

பிறருக்காக மந்திரங்கள் ஜெபிப்பவர்கள், குருவிடம் தீட்சை பெற்ற பின்பே செய்ய வேண்டும். 'ஓம்' என்பது மந்திரத்தின் மூலக்கருவாகும். ஓம் என்று கூறி மந்திரத்தை ஜெபிப்பது மிகவும் உத்தமம். ஓம் கணேசாய நம: எனத் தொடர்ந்து பூஜை செய்யப் போவதாக முடிவு செய்தபின்தான் மந்திர ஜெபம் செய்ய வேண்டும். அவ்வாறு செய்ய இயலாது என்னும் பட்சத்தில் நாம ஜெபமே போதுமானது.

நல்ல மந்திரம் சொல்பவரின் முகத்தில் கனிவும் பிரகாச மும், அழகும் கருணையும் மிகுந்து இருக்கும்.

தீய மந்திரம் சொல்பவரின் முகம் கடுமையாக மாறி இருக்கும். அவர்கள் மற்றவர்களைப் பார்க்கும் பார்வை மற்றவர் களை நடுங்க வைக்கும்.

தீய மந்திரம் சொல்பவர்களை வீட்டில் அனுமதிக்க மறுப்பது மிகவும் நன்மையைத் தரும்.

பிறர் காதுகளுக்குக் கேட்கும்படி மந்திரத்தை ஜெபிப்பது அதமம் எனப்படும். நம் காதுகளுக்கு மட்டும் கேட்குமாறு ஜெபிப்பது மத்திமம். மனத்தளவில் சொல்வது உத்தமம். இதை 'மானஸம்' என்றும் கூறுவர்.

மனதில் சலனங்கள் இல்லாமல் அமைதியாக மந்திரங் களைச் சொல்ல வேண்டும். மனதில் சலனங்கள் ஏற்பட்டால் மந்திரத்திலும் சலனங்கள் ஏற்படும்.

நல்ல மனதோடு, பிறருக்குத் தீமை எண்ணாது சொல்ல வேண்டும். இல்லையென்றால் நல்ல மந்திரமும் தீயவர்களுக்கு உதவாது.

1. *மந்திர நான்மறை ஆகிவானவர் சிந்தையுள் நின்றவன்*
   *- என்றார் திருஞானசம்பந்தர்.*
2. *மந்திரமும் தந்திரமும்*
   *மருந்தும் ஆகி* *- என்றார் திருநாவுக்கரசர்.*

3. *வேத மந்த்ர சொரூபா*
*ஆன தனி மந்த்ர*
*ரூப நிலை கொண்டது*
*ஆடு மயில்* - *என்றார் அருணகிரிநாதர்.*

4. *மந்திரம் பெற்ற வழிமறை மாலங்கன்*
*இந்திரன், சோமன், பிரம்மன், உருத்திரன்*
*கந்துரக் காலாங்கு கஞ்ச மலையனோடு*
*இந்த எழுவரும் என் வழியாமே*
- *என்றார் திருமூலநாயனார்.*

அதர்வண வேத மந்திரத்தின் சக்திகளை இப்போது பார்ப்போம். எதிரிகளை மாய்க்கவும் வீழ்த்தவும் மனிதன் ஏவல், பில்லி சூன்யம் என்று ஏவி விடப்படும் தவறான பிரயோகங்களைத் தடுத்து, அதனால் ஏற்படும் கெட்ட விளைவு களையும் துன்பங்களையும் நீக்கி நிவர்த்தி செய்வதற்கே அதர்வண வேத மந்திரங்கள் பயன்படுகின்றன.

உடல் நோய் மட்டும் அன்றி மனோவியாதிகளுக்கும் குணமளிக்கக்கூடிய சக்தி இந்த வேத மந்திரங்களுக்கு உண்டு என்று அறிந்தோர் கூறினர். நமது வேத நூல்களில் உள்ள இரகசியமான நுட்பங்கள் பலவற்றையும் பயன்படுத்தி இருக்கின்றனர்.

நம் உடம்பின் தோலைப் பிளக்காமலேயே குணமளிக்கக் கூடிய நுட்பங்களை அதர்வண வேதம் கூறுகின்றது.

ஆயுள் ஹோமம் செய்யும் வேத மந்திரங்களின் மூலம் நோயாளியின் நெருங்கிய உறவினரான கணவன், மனைவி அல்லது மகன், மகள் போன்றவர்களைக் கொண்டு பிரார்த் தனை செய்து, மந்திரப் பிரயோகத்தால் நோயாளிக்கு முழு பலம் தந்து ஆயுளை நீடிக்கச் செய்ய முடியும்.

கர்ப்பப்பை பழுதடைந்தால் அறுவைச் சிகிச்சை இல்லாமல் அதற்கு ஆரோக்கியத்தை அளிக்கவல்ல மந்திரங்கள் அதர்வண வேதத்தில் உள்ளன.

எலுமிச்சம் பழம், நீர், பால் அல்லது தேங்காய் போன்ற வற்றில் இந்த மந்திரங்களைப் பிரயோகம் செய்து, பிரசாதமாக அளித்து பல சிக்கலான நோய்களைக் குணப்படுத்தலாம்.

அறுவைச் சிகிச்சை மூலம் மட்டுமே குணம் ஆகும் என்ற நோய்களைக்கூட மந்திரங்களின்மூலம் பல இடங்களில் பலருக்குக் குணப்படுத்தி உள்ளார்கள்.

நம் முன்னோர்கள் சித்தர்களும் முனிவர்களும் இவற்றுக்கு எழுத்து வடிவாகவும், வாய்மொழியாகவும் சொல்லி அதே ஒலி அளவில் அந்தந்தச் சக்தியுடன் எடுத்துச் சொல்லிப் பிரயோகித்துப் பயன்படுத்திக் கொள்ளச் செய்தனர்.

1. மந்திரங்களைத் தவறாகப் பயன்படுத்தக்கூடாது. மற்றவர்களை வீழ்த்தவோ அழிக்கவோ பயன்படுத்தக் கூடாது.

2. நல்லதற்கு மட்டுமே தூய்மையான மனதுடன் சொல்ல வேண்டும்.

3. உடலிலும் மனதிலும் சுற்றுப் புறத்தையும் தூய்மை யாக வைத்துக் கொண்டு சொல்ல வேண்டும்.

4. மந்திரத்தின் சப்தமும் உச்சரிப்பும் பிரயோகமும் சரியாக இருக்க வேண்டும்.

5. மந்திரங்களை நமக்குச் சொல்லித் தரும் குருவானவர் நல்ல ஞானம் கொண்டவராகவும் நல்ல குணங்கள் கொண்டவ ராகவும் இருக்கவேண்டும்.

இசையானது மந்திர ஒலியைச் சார்ந்ததுதான். ஆகாயத்தில் உள்ள ஒலியைக் கொண்டு ராகங்களைக் கண்டுபிடித்துப் பாடலாக இசைத்தவர். நந்திகேசர்தான்.

'ச-ரி-க-ம-ப-த-நி' என்றும் ஏழு சுரங்களைக் கண்டு பிடித்துக் கூறினார். அதுவே பின்னர், வழிவழியே வரத் தொடங்கியது. இசையில் சரஸ்வதி, இராவணன், அகத்தியர் மற்றும் பலர் மேன்மை பெற்று விளங்கினர். இசையைக் கொண்டு பிறந்தது நடனம். இதில் முதன்மையானவராகச் சிவபெருமானைக் கூறுவர். இதனால்தான் சிவனை 'நடராசர்' என்கின்றனர்.

இசையானது பல விதங்களில் நமக்கு உதவக் கூடியது. மழையைத் தருவிக்க ஒரு ராகம், நோயைத் தீர்க்க ஒரு ராகம், மன அமைதிக்கு ஒரு ராகம் என்று எல்லாவற்றிற்கும் ராகங்கள் உண்டு. இசையால் இறைவனையும் கவரலாம் என்றும் மலையைக் கூடக் கரைக்கலாம் என்றும் புராணக் கதைகள் மூலம் அறியலாம்.

அகத்தியருக்கும் இராவணனுக்கும் ஒரு முறை இசையைப் பற்றி போட்டி எழுந்தது. இருவரும் வீணை வாசிப்பதில் நிபுணர்கள். இராவணன் இசையால் சிவனை மயக்கி அவரிடமிருந்து பல வரங்களை அடைந்தான். அதனால், இராவணனுக்குக் கர்வம் அதிகம் ஆனது. இராவணனை அடக்க அகத்தியர் எண்ணினார். எவருமே இவர்களின் நடுவில் நின்று தீர்ப்புச் சொல்லத் தகுதிகள் இல்லாமல் ஒதுங்கினார்கள்.

அகத்தியர் ஒரு மலையைக் காட்டி, எவர் இசைக்கு மலை உருகுகின்றதோ அவர்களே முதன்மையானவர் என்று கூறி, இருவரும் இசைத்தனர். முடிவில் அகத்தியர் வென்றார் என்பது அகத்தியர் வரலாறு.

வானில் நிலவிய தெய்வீக ஒலியைக் கேட்டுணர்ந்து அவற்றைத் திருமறைப்பாடல்களாக வடித்துத் தரும் ஆற்றலைச் சித்தர்களும் ரிஷிகளும் பெற்றிருந்தனர்.

ஐன்ஸ்டீன் என்ற விஞ்ஞானி பொருள்களைச் சக்தியாகவும் சக்திகளைப் பொருள்களாகவும் மாற்ற முடியும் என்று விஞ்ஞான பூர்வமாகச் சொல்லி இருந்தார். சக்தி என்பதை அழிக்கவும் புதிதாகப் படைக்கவும் முடியாது. ஆனால், ஒரு சக்தியை மற்றொரு சக்தியாக மாற்றலாம் என்று சர் ஐசக் நியூட்டன் என்ற விஞ்ஞானி கூறியுள்ளார்.

இதைத்தான் ஞானிகள் கடவுளுக்குப் பிறப்பும் இல்லை, இறப்பும் இல்லை, ஆதியும் அந்தமும் இல்லாதவன் எந்த ரூபத்திலும் வருவான், எல்லா இடத்திலும் வியாபித்திருப்பான் என்று கூறியுள்ளார்கள்.

# 7. குரு

குரு என்பவர் யார்? நம் இம்மைக்கும் மறுமைக்கும் முக்திக்கும் வேண்டிய தெரியாத விஷயங்களை, தாம் அறிந்த அனுபவமான விஷயங்களை நமக்குத் தெளிவாக விளக்குபவர் குருவேயாவார்.

நம் நாடு பல்லாயிரம் காலம்தொட்டே சித்தர்களும் தவ நெறியில் சிறந்தவர்களும் நீதி, நேர்மை மற்றும் தர்மத்தில் சிறந்தவர்களும் கற்பிற் சிறந்த பெண்டிரும் என வாழ்ந்தவர் களையும் வாழந்து கொண்டிருப்பவர்களையும் கொண்டது.

பல முனிவர்களும், ரிஷிகளும் பலகாலம் தவத்தைக் கடுமையாக மேற்கொண்டு பல விஷயங்களையும், இரகசியங் களையும் அறிந்து பிறவி என்னும் பெருங்கடலைக் கடக்க இது தான் தோணி என்று எளிதாக விளக்கி நமக்குக் கூறிவிட்டதால் அதற்கு மதிப்புக்கொடுக்காமல் நாம் அலட்சியப்படுத்துகிறோம்.

அதாவது வாழைப்பழத்தை உரித்து நமக்கு ஊட்டுவது போல, நல்ல கருத்துக்களைக் கூறினாலும் நாம் அதனை ஏற்க மறுக்கிறோம். ஆனால், அயல்நாட்டிலுள்ளோர், நம் நாட்டில் நம் முன்னோர்கள் கண்டுபிடித்த தத்துவத்தை அறிந்து வியந்து, அதை மேலும் அறிந்து கொள்ள மிகவும் ஆர்வமும் கடின முயற்சியும் செய்கிறார்கள்.

சூரியனிலிருந்து சந்திரன் ஒளியை வாங்கிப் பூமிக்குப் பிரதிப்பலிக்கிறது. இதனால், சந்திரனுக்கு எந்தவிதப் பலனும் இல்லை. அதுபோல், குருவானவர் கடவுளிடமிருந்து அருளாகிய ஒளியை நமக்கு வாங்கித் தருகிறார். இதனால், குருவிற்குப் பலன் ஏதும் இல்லை. எதிர்பார்ப்பதுமில்லை. இருந்தாலும்

தன்னலம் கருதாது மற்றவர்களும் உய்யவேண்டும் என நமக்குக் கடவுளின் அருளாசியைத் தருபவர் குருவேயாவார்.

ஒரு குழந்தை பிறந்ததிலிருந்து, வளர்ந்து பள்ளியில் சேரும் வரை, அக்குழந்தைக்கு அப்பாவும் அம்மாவும் குருவாக விளங்குவார்கள். படிக்கும் பள்ளியில் ஆசிரியை, ஆசிரியர்கள் ஆகியோர், வாழ்விற்கு வழிகாட்டியாக ஒழுக்கமுடனும் நேர்மையுடனும் நடந்தால் நல்லது நடக்கும் என்றும், தீயவழியில் சென்றால் தீயது நடக்கும் என்றும் கூறுவதாலும் நமக்கு வழி காட்டியாக இருக்கும் பெரியவர்களும் நமக்கு வாழ்வின் குருவாவர்.

தவத்திற்கு, அதாவது தியானத்திற்கு முக்கியப் பங்கு வகிப்பவர் குருவாவார். தொட்டுக் காட்டாத வித்தை சுட்டுப் போட்டாலும் வராது. எனவே குண்டலினி யோகத்தைத் தொட்டுக் காட்ட ஒரு குரு அவசியம்.

தானாகவே புத்தகத்தைப் படித்து, தியானம் செய்பவர்களை அது விபரீதத்தில் கொண்டு நிறுத்தி விடும்.

எந்த மதத்தினருக்கும் குரு என்பவர் உண்டு. குருவின் அனுக்கிரகம் நமக்கு கிடைக்காவிடில் வாழ்க்கை பயன் இல்லாமல் போய்விடும். நம்மையும் நம்முடைய ஆன்மாவையும் மேன்மைப் படுத்துபவர் நம் குருவே ஆவார்.

உலகம் முழுவதும் உள்ள அனைத்து உயிர்களும் நலமாக வாழவேண்டும் என்று நினைத்து, நமக்காகப் பிரார்த்தனை செய்பவர் தான் நமக்குக் குருவாக இருக்கமுடியும்.

ஞானகுருவாக விளங்க அநேக தகுதிகள் வேண்டும். இல்லையேல், மக்கள் அவர்களைக் குருவாக ஏற்றுக்கொள்ள மாட்டார்கள்.

நல்ல திறமைமிக்க குரு ஒருவருக்குக் கிடைத்து விட்டால், அவர்கள் எந்தத் துறையிலும் பேரும் புகழும் அடையலாம்.

குருவாக இருக்க வேண்டியவர்க்கு மிகவும் முக்கியம் ஒழுக்கம் ஆகும். அடுத்து பொறுமை, பேதமில்லாத நெஞ்சம், கருணை உள்ளம், தவறு செய்தவர்களையும் குற்றவாளி களையும் அனுசரித்து அவர்களைத் திருத்தும் குணம், அன்பில் தாயாக, கண்டிப்பில் தந்தையாக, கருணையில் கடவுளாக, பொறுமையில் பூமியாகக் குருவானவர் விளங்க வேண்டும்.

ஒரு தகப்பன் தன் வாழ்வில் ஏற்பட்ட இடையூறுகள், துன்பங்கள் மேலும் அவை நீங்கத் தான் மேற்கொண்ட முயற்சிகள் போன்ற தன் அனுபவ அறிவைக் குழந்தைகளுக்கு கூற அதுபோல் ஏற்படாமலும், தன் வாழ்வில் பிறர் ஏமாற்றா மலும் இருக்க, குழந்தைகள் வழிவகுத்துக் கொள்கின்றனர்.

அதுபோல்தான் குடும்பத்தை நிர்வகிப்பது குறித்து தன் அனுபவத்தைத் தாய் குழந்தைகளிடம் கூற, குழந்தைகளும் மிக எளிதாக அதனைக் கற்றுக் கொள்கிறது.

நன்கு படித்த நல்ல அறிவுடன் தன் அனுபவங்களை ஆசிரிய, ஆசிரியைகள் குழந்தைகளுக்குப் புகட்டப் புகட்டக் குழந்தைகள் உலக அறிவைப் பெற்று வளர்கின்றனர்.

ஒரு மனிதன் இல்லறத்திலும் செல்வத்திலும் படிப்பிலும் மற்றும் பல அனுபவத்திலும் கண்ட பல நன்மைகள் இருந்தாலும், ஏதோ மனத்தேடலில் அலைந்து முடிவில் ஞானகுருவை அடைவான், பல ஞானகுருக்கள் வாழ்வில் கிடைத்தாலும் தன் அனுபவத்திலும் மனநிம்மதியிலும் தனக்கு ஒரு ஞானகுரு கிடைத்தபின், அவன் இதுநாள்வரையில் மனம் அலைக்கழித்து சோர்ந்து போனபின், வெறுமையான அவன் மனது, முற்றிலும் நிம்மதியை அடைகிறது.

ஒரு குருவாக விளங்குபவர் தன் சீடரின் மனதை அறிந்து ஆறுதல் கூறவேண்டும். அம்மனிதன் அவரைத் தேடி வருவது மன ஆறுதலுக்குத்தான், முதலில் அவனுக்கு மன ஆறுதலைக் குருவானவர் தரவேண்டும், பின் அவன் தன் வாழ்வின் பிரச்சினையைக் கூறும்போது, அவனுக்கு வழிகாட்டியாக

விளங்கி அவனுக்குத் தன்னால் முடிந்த அளவில் அறிவுரை கூறி நல்வழிப்படுத்த வேண்டும்.

சீடரின் வாழ்விலே மத உரிமையிலோ, அந்தரங்கத்திலோ குருவாக விளங்குபவர்கள் தலையிடக்கூடாது. குரு சீடரிடம் தன் முறையில் அதாவது தன் வழியில் வருமாறு கட்டாயப் படுத்தவும் கூடாது. குரு சீடரிடம், ''என்னால்தான் உன் வாழ்வு மலர்ந்தது; இல்லையேல் நீ இருக்கும் இடம் தெரியாமல் போய் இருப்பாய், உன் குடும்பம் சீர்குலைந்திருக்கும்'' என்று சொன்னால் அவர் குருவான தகுதியை இழக்கிறார்.

அவ்வாறு இருக்கும் குருவை, பரஞ்சோதி மகான் அறிந்த அறிவையும் பாழ்படுத்தி, மடமையைப் போதிக்க முற்படு பவரே குருக்களாக்கப் பெறுகிறார்கள் என்றார்.

சமுதாய மறுமலர்ச்சிக்கு வித்திடுபவர்கள் குருவே, அவர்கள் நன்கு சிந்தித்து அறிவுரை கூறி வழி நடத்திச் செல்ல வேண்டும்.

குரு இல்லாமல் ஞானதவம் கிடைக்காது. ஞான வள்ளல் பரஞ்சோதி மகான். அவர்கள் அறிவாராய்ச்சி இல்லாத ஞானம், மீசையில்லாத அரசன், ஸ்தனம் இல்லாத பெண், வெளிச்சமில்லா வீடு, ஊற்றில்லாக் கிணறு, தயாளமில்லா நெஞ்சம், கருணையும் கருத்துமில்லாக் கண், விசாரணை இல்லாத் தீர்ப்பு, விலை யில்லாப் பொருள், வீரமில்லாச் சொல், உருக்கமில்லாத் தவம், கேள்வி தெரியாத விடை, ஆடையில்லா உடலழகு, விழிப் பில்லாத் தூக்கம், காலமறியா வன்மை, நம்பிக்கையில்லா அன்பு, விளைவில்லா நிலம், உலகத்தையறியாத் துறவு, செல விலாப் பொருள், அன்பில்லா வாழ்வு, அருளில்லா முகம், குறை யுணரா அறிவு, பயிற்சியில்லாச் சொல், கரு இல்லாத் தவம், ருசியில்லாப் பெரும் பழம், பருவத்தில் அனுபவிக்காத இன்பம், காலத்தில் உதவாத கருணை, உற்சாகத்திற்கு உடன் இல்லாத மனைவி, கருத்துக்கு இசையாத நம்பிக்கை, காலத்தில் விளையாத வேளாண்மை, உயிரில்லா உடல், பொறுப்பில்லாக்

குடும்பத் தலைவன் ஆகிய இவை போன்றதே குருவை அடையாத முடிவும் ஆகும் என்று கூறியுள்ளார். இதை எந்தக் கவிஞரும் புலவரும் அறிவாளர்களும் இவ்வளவு தெளிவாகக் கூறியிருக்க மாட்டார்கள்.

குருக்கள் ஒன்றைக் குறிவைத்தோ பலாபலன்களைக் கருதியோ போதிக்க மாட்டார்கள். அவர்களுக்குத் தேவை உலக மக்களின் அறிவின் பெருக்கம் மட்டுமே. குருமார்கள் மிக மிக அமைதி காக்க வேண்டும். சில அறிவீனர்கள் தம் கருத்து களாலும் செயலாலும் குருக்களை அவமதிப்பர், அப்போது குருமார்கள் கோபம் கொண்டால் அதுவரை அவர்கள் செய்த தவம் குறையும், மீண்டும் முயன்று அதைச் செம்மைப்படுத்த வேண்டும்.

சீடர்கள் குருவின்மேல் மிகுதியான அன்பு நிறைந்த நம்பிக்கையோடிருக்க வேண்டும். அவரிடம் பணிவு காட்ட வேண்டும். சீடர்களின் நல்லொழுக்கம், நல்ல பண்பு இவற்றால் குருவின் உயர்வும் மேலான சிறப்பும் மற்றவர்களுக்குத் தெளி வாகும்.

சீடர்கள் மற்றவர்களிடம் நடந்துகொள்ளும் முறையில் குருவிற்குப் பெருமை சேரும். குருவின் அருட்பார்வையிலும் பெருந்தன்மையிலும் அருளாசியிலும் சீடர்களின் பரம்பரையே சிறப்படையும்.

நமக்குக் குருவாக விளங்கியவர்கள் இந்த உலகத்தை விட்டு மறைந்தாலும் அவர்களின் நல்லாசியும் அருள் பார்வையும் அவர்களின் எண்ணங்களாலும் அருளாலும் நமக்கு எப்போதும் பாதுகாப்பும் ஏற்படும்.

குருபீடம் என்றால் பொறுமையுள்ளது, வல்லமையுள்ளது, ஈசுவரதத்துவமுள்ளது, ஆக்கினை அதாவது கட்டளை பிறப் பிக்கக் கூடியது, கண்டிக்கக்கூடியது தீவினையை அகற்றக் கூடியது, அஞ்ஞானத்தைப் போக்கக்கூடியது என்றும் கொள்ள வேண்டும்.

வாழ்க்கையில் மனிதர்கள் திருவருளை அடையவும், ஞானிகளாகவும், யோகிகளாகவும், ஆச்சார்ய புருஷர்களாகவும் மகான்களாகவும் யுகம் யுகமாய்க் குருவின் துணையுடன்தான் வாழ இயலும்.

முன்காலத்தில் அரசருக்கு அரசகுரு என்று ஒருவர் இருப்பார். அவர் உலக ஞானத்தையும் கருத்தையும் கூறி உண்மையாகவும் நேர்வழியில் நடக்கும்படியும் அரசருக்குப் போதிப்பார்.

அரசரே தவறு செய்தாலும் பயப்படாமல் அரசரை எதிர்த்து நல்வழிப்படுத்த முயலுவார். அரசகுருவுக்கு அக்காலத்தில் மிக்க மதிப்பும் மரியாதையும் இருந்தன. புராணத்தில்கூட தேவரின் குருவாகப் பிரகஸ்பதியும் அரக்கர்களின் குருவாகச் சுக்கிராச்சாரியாரும் இருந்ததாகக் கூறப்படுகிறது.

நல்ல குருவின் புத்திமதிகளைக் கேட்டு அரசாண்ட மன்னர்கள் இன்றும், பேரும் புகழும் பெற்றுப் போற்றப்பட்டு வருகிறார்கள். உதாரணமாக, வீரசிவாஜி, இராஜராஜசோழன்.

அதுவே நல்ல அரசகுரு கிடைக்காமல், கபடம் உள்ளவர் களும், சுயநலம் பிடித்தவர்களும் கிடைத்தால் அரசாட்சியை இழந்து, துன்பம் அடைந்த அரசர்களும் இருந்திருக்கின்றனர்.

நல்ல குருவாகவும் புத்திசாலியாகவும் கருணை உள்ள வராகவும் இராஜதந்திரியாகவும் விளங்கியவர் சாணக்கியர். அவர் அர்த்தசாஸ்திரம் என்ற நூலையும் எழுதியுள்ளார். அரசர்கள் நல்ல அரசை அமைத்து, குடிமக்களிடம் எவ்வாறு நல்ல பெயர் எடுக்க வேண்டும் என்று விளக்கி உள்ளார்.

இராகவேந்திரர், இரமணர், அன்னை அரவிந்தர், சாய் பாபா, வசிட்டர், விசுவாமித்திரர், வால்மீகி, பதினெட்டுச் சித்தர்கள், பரஞ்சோதி மகான், G.K.S., குருஜீ, மகரிசி மற்றும் உலகில் தோன்றிய அவதார புருஷர்கள் அனைவருக்குமே குரு உண்டு.

**என் வாழ்வில் சந்தித்த குருமார்கள்:**

*எங்கள் திருமணம் ஆன பின்தான் என் வாழ்வில் ஞான குருமார்களைச் சந்திக்கும் பாக்கியமும் பழகும் பாக்கியமும் பெற்றேன். என் மனதில் ஏதோ ஒரு தேடுதல் இருந்தது. அது தியானமே என்று பின்னர் அறிந்தேன்.*

*திருமணம் ஆன புதிதில் முதன் முறையாக என் கணவர் திரு. வேதாத்திரி மகரிஷி அவர்களிடம் அழைத்துச் சென்றார். திரு. வேதாத்திரி மகரிஷியிடம் என் கணவர் பழக்கமானவர், எங்கள் இருவரையும் அருகில் அமரவைத்துக் கற்கண்டும் உலர் திராட்சையும் கொடுத்து, "வாழ்க்கையில் இனிப்பும், புளிப்பும் கலந்து வரும். எவை வந்தாலும் நீங்கள் இருவரும் இணைபிரியாமல் வாழ்ந்து வாருங்கள் என் ஆசி என்றும் உண்டு" என்றார். திரு. வேதாத்திரி மகரிஷி அவர்கள் பார்வையிலும் பழக்கத்திலும் அறிவுரை கூறுவதிலும் தாயைப் போன்றவர்.*

*அடுத்து, பரஞ்சோதி மகான் அவர்களை என் முதல் குழந்தை (1½ வயது) சோபனாவுடனும், வயிற்றில் 4 மாதக் கருவுடனும் சந்தித்தேன். என்னைக் கண்டதும் ஒரே துள்ளலும் மகிழ்ச்சியும் களிப்பும் பொங்க அங்கும் இங்கும் ஓடி ஓடி மகிழ்ந்தார். என் கணவரைக் காட்டி, "இவன் என் மகன், இவனை நீ கவனித்துக் கொள், என் அருளாசி உனக்கு என்றும் உண்டு" என்று என்னிடம் கூறினார்.*

*என்னவரிடம், "உன் மனைவியை எனக்குப் பிடித்து இருக்கின்றது. நல்ல பெண்" என்று அடிக்கடி கூறினார். என் மகள் மகானின் காலை விளையாடி படி பற்றியதும் பாரப்பா, உன் மகள் என் காலை வணங்குகின்றாள், நன்றாக இருப்பாள், எனக்குத் தொண்டு புரிவாள்" என்றார். என் வயிற்றிலே உள்ள கருவைப் பற்றிக் கேட்டப் போது, "பையன் பிறக்கட்டும், போதும். இத்தோடு குழந்தைகளை நிறுத்திக் கொள். இருவரையும் நல்ல முறையில் வளர்த்து வா" என்று என்னிடம் கூறினார். அதே போல நல்ல முறையில் வளர்ந்து, நன்கு படித்து, நல்ல படியாக இருவரும் உள்ளனர்.*

குருமார்கள் கூறும் சொற்களுக்கு அப்போது அர்த்தம் தெரியவில்லை என்றாலும் பின், வாழ்வில் அது பலிக்கும். இவர் பழக்கத்தில் குழந்தையைப் போலவும் தந்தையைப் போலவும் நற்குணம் கொண்டவர். சிங்கம் போன்ற கம்பீரத் தோற்றம் கொண்டவர்.

குருஜி C.K.S. அவர்கள் என் நெற்றிக் கண்ணை முதன் முதலில் திறந்து காட்டிய குருவானவர் ஆவார். குருஜி தபஸ் யோகி C.K.S. அவர்கள் அப்போது பொள்ளாச்சி மகாலிங்கம் அவர்களின் அலுவலகத்தில் சேவை செய்து வந்தார்கள்.

குருஜி அவர்களை நான் அடிக்கடி சந்தித்தேன். ஒவ்வொரு மாதமும் இரண்டாவது ஞாயிறன்று, சென்னை சாமியார் மடம் என்ற இடத்தில் தவயோக வகுப்புகளை நடத்தி, தன்னைத் தேடி வரும் நபர்களுக்குத் தமது திருக்கரங்களால் குண்டலினி உபதேசம் செய்து வந்தார். பல கருத்துகளையும் சொல்வார். மேலும் இந்தத் தவம் கடவுளுடன் தன்னை இணைப்பதற்கு இது ஒன்றுதான் வழி என்றும் மற்றும் மக்கள் கேட்கும் சந்தேகங்களுக்கு விளக்கம் அளித்தும் அருள்பாலித்து வந்தார்.

மேலும் விட்டகுறை தொட்டகுறை இருந்தால்தான், இந்தத் தவத்தைக் கற்றுக் கொள்ள முடியும் என்று அடிக்கடி கூறுவார். திரு. குருஜி C.K.S. அவர்கள் பழகுவதிலும் அறிவுரை கூறுவதிலும் கண்டிப்பிலும் தந்தையைப்போல் நற்குணம் கொண்டவர்.

அடுத்துச் சந்தித்தவர் சுவாமிஜி மெய்ஞ்ஞான அருளாளர் என்பவர், இவர் பரஞ்சோதி மகானுக்குக் கூட இருந்து வெகு காலமாகத் தொண்டு செய்தவர். இவர் பழகுவதில் இனிமை யானவர், எளிமையானவர், ஒரு தாயைப்போல அன்பிலும் அறிவுரை கூறுவதிலும் சிறந்து விளங்குபவர்.

அடுத்து திரு. துரைராஜ் அவர்கள் இவர் எனக்கு சித்த வைத்தியராக வந்தவர். பின் எங்கள் வாழ்க்கையில் தந்தையைப் போல் வழிகாட்டிக் கொண்டிருக்கிறார்.

அவரைக் குழந்தைகளும் தாத்தா என்றுதான் கூப்பிடு வார்கள். இவர் எங்களுக்குப் பல விதங்களில் வழிகாட்டியாக இருந்து, ஜோதிடம், காலம், நேரம் பார்த்தல், பரிகாரம் செய்தல், மற்றும் சித்த மருந்துகளைப் பற்றியும், சித்தர்களைப் பற்றியும் பல கருத்துகளைக் கூறியவர். இவரால்தான் இப்புத்தகத்தில் சித்தர்களைப் பற்றிய கருத்துக்களை என்னால் எழுத முடிந்தது. மிக்க பொறுமையுடைய வார்த்தைகளில் அடக்கம் மிகுதியாக நிரம்பி இருக்கும் தாயி தாயி என்றுதான் அன்பாகப் பேசுவார். பெண்களைப் பெற்ற தாயாக எண்ணுபவர். மிக மிக நல்லவர்.

அடுத்து சந்தித்த ஞானவள்ளல் பொறுமையின் சிகரம் திரு. வெங்கட்ராமன் ஐயா அவர்கள், ஜோதிடத்தில் மிக்க நிபுணர். மிகவும் பொறுமையானவர். அறிவுரை சொல்வதிலும் அன்பிலும் தாயைப் போன்றவர். கண்டிப்பில் தந்தையைப் போன்றவர். பொறுமையில் புராணங்களில் வரும் விஷ்ணுவைப் போன்றவர். வாழ்விற்கு ஒரு நல்ல வழிகாட்டியாக விளங்குபவர். கவலை என்ற கடலில் வழிகாட்டியாக விளங்கும் தீபகற்ப விளக்கைப் போன்றவர். இப்புத்தகம் எழுதக் காரணமான காரணகர்த்தா இவர். எனக்கு நன்கு உற்சாகமூட்டி எழுத வைத்தவர்.

## குருவிடம் சீடன் எவ்வாறு இருக்க வேண்டும்?

மிக்க பக்தியுடன், நன்றியுடன், பணிவுடன் பொறுமை யுடன் நம்பிக்கை கொள்ள வேண்டும்.

ஒரு மனிதன் குருவை அடைந்து குருவானவரிடம் கஷ்டங் களைக் கூறும்போது, அவனுக்காகக் குருவானவர் கடவுளிடம் மானசீகமாக, "கடவுளே இம்மனிதனின் கஷ்டங்களைப் போக்கி அவனுக்கு மன ஆறுதலைத் தருவாயாக" என்று மனதார வேண்டிக் கொள்வார். அவனுக்குப் பல வழிகளையும் மன ஆறுதலையும் கூறுவார்.

ஒருவர் குருவாக ஆவதற்குப் பல கட்டங்கள் காரணங் களாக உருவாகின்றன. அதற்குப் பல பயிற்சிகளும் தேவைப்

படுகின்றன. சிறுவயதிலிருந்தே சிலருக்குப் பயிற்சி கொடுப்பது உண்டு. பல புராணங்கள், இதிகாசங்கள் பல மதத்தின் தத்துவங்கள், நீதி நெறிமுறைக் கதைகள், இவற்றை அறிந்து வரும் பக்தர்களுக்கு ஏற்ப, கதைகள் கூறி அவர்களின் மனத்திற்கு ஆறுதல்கள் அளிக்க வேண்டியது குருவின் கடமை.

கடவுளைத் தியானம் செய்து பூஜை, புனஸ்காரம் செய்து அவன் அருள் பெற்று, அவ்வருளைப் பக்தர்களுக்குப் பகிர்ந்து அளிப்பது குருவின் கடமையாகிறது.

உடல்பக்குவம், மனப்பக்குவம், சொல்பக்குவம், எதையும் சீர்தூக்கிப் பார்க்கும் திறன், தைரியம், நீதிநெறிகளில் சிறந்து விளங்குதல், ஞான மார்க்கத்தில் தேர்ச்சி பெற்றிருத்தல், பொறுமை, அடக்கம், ஒழுக்கத்தில் சிறந்து இருத்தல் போன்ற அனைத்திலும் தேர்ச்சி பெற்ற ஒருவரே நல்ல வழிகாட்டும் குருவாக அமைய முடியும்.

# 8. சித்தர்களும் சாகா கலையும்

நம்நாட்டில் நூற்றுக்கணக்கான சித்தர்கள் வாழ்ந்து வந்தனர். அவர்கள் தம் தவ வலிமையால் அண்டத்திலுள்ள அனைத்தையும் அறிவால் அறிந்து மக்கட்குப் பலவிதங்களில் கல்வெட்டுகள் மூலமும் செவிவழி மூலமும் ஓலைச்சுவடி களின் மூலமாகவும் சொல்லி வந்தனர்.

சித்தர்களை, நிபுணர்கள், ஆராய்ச்சியாளர்கள், சித்தத்தைத் தெளிய வைக்கும் சிந்தனையாளர்கள் என்றும் கூறலாம். மூலிகை மூலம் புற்றுநோயைக்கூட அழிக்கும் தன்மையைக் கொண்டு இருந்தனர் என்றும் அறிந்திருந்தனர். அறுவைச் சிகிச்சை மூலம் வெட்டிய உறுப்புகளை மூலிகை மூலமே ஒட்ட வைத்தனர். அவர்கள் அறியாத கலைகள் இல்லை. முக்காலமும் உணர்ந்த ஞானிகள் பிரபஞ்சத்தின் கோள்களை ஆராய்ந்து அவற்றின் தன்மையையும் செயல்பாடுகளையும் கோள்களின் நன்மை, தீமை ஆகியவற்றையும் கூறினார்கள்.

'இராமர் எப்போது பிறந்தார்?' என்றும், 'அப்போது கோள்கள் எங்கு இருந்தன?' என்றும் வால்மீகி, இராமாயணத் தில் கூறியுள்ளார்.

மேலை நாடுகளில் இன்று வான சாஸ்திரம், கணிதம், பௌதிகம், விண்வெளி ஆராய்ச்சிகள் போன்ற நிலைகளில் நிறைய முன்னேற்றம் காணப்படுகிறது. இவற்றுக்குப் பெரும் பாலும் அடிப்படைப் பாலமாக இருப்பவர்கள் மேலைநாட்டு விஞ்ஞானிகள். ஆனால், அவர்களின் முன்னோர்களான சீனர்கள், கிரேக்கர்கள், உரோமானியர்கள் நம்நாட்டிற்கு வந்து பல ரிஷிகளிடமும் சித்தர்களிடமும் பல கலைகளை அறிந்து, தம் நாட்டிற்குச் சென்று தம் சந்ததியர்க்காகச் சேமித்துப் பாதுகாத்து

வந்தனர். அதைத் தற்போது மேலை நாட்டு விஞ்ஞானிகள் அலசி ஆராய்ந்து, இராக்கெட்டைச் செலுத்தி, விண்வெளியை ஆராய்ந்து, தற்போது கண்டுபிடித்துச் சொல்வதைப் போல் சொல்கின்றனர்.

ஆதிகாலத்தில் சூரியனுக்கும், சந்திரனுக்கும் மற்றும் நிலங்கள், சமுத்திரங்கள், தூரங்கள் (தொலைவுகள்) என்று பல வகைகளில் இருக்கும். பேச்சு வழக்கு எதுவாக இருந்ததோ, யாரும் அறியமாட்டோம். பின், வருங்காலத்தில் மதங்கள் மாறும், இனங்கள் மாறும், வார்த்தைகளும் மாறும், மொழி களும் மாறும் என்று சித்தர்கள் அறிந்துதான், சூரியன் என்ற கிரகத்திற்கும் மற்றக் கிரகங்களுக்கும் கதைகள் புனைந்து, வெறும் சொல்லாக, பாடமாகச் சொல்லித் தந்தால் (உம். சூரியன் என்ற பெயரைக் காலப்போக்கில் மறந்து விடலாம் என்று எண்ணி அதற்குப் பதிலாக, கதையாகக் கூறினால், வழி வழியாக மாறாமல் செவி வழியாகவும், கல்வெட்டுகள் மூல மாகவும், ஓலைச் சுவடிகள் மூலமாகவும் உலகம் இருக்கும் வரை இருக்கும் என்று புத்திசாலித்தனமாகச் சிந்தனை செய்து புராணங்களையும், இதிகாசங்களையும், முனிவர்களும் ரிஷி களும் துறவிகளும் சித்தர்களும் வடித்தனர்.

சித்தர்கள் என்பவர் யாவர்? சித்தத்தைத் தெளிய வைப்ப வர்கள். சித்து வேலை செய்பவர்கள் சித்தர்கள்.

நம்மைக் காட்டிலும் ஓர் அற்புத சக்தி இருக்கிறது என்பதைத் தெரிவிப்பதற்காகத்தான் சித்தர்கள் சித்து வேலை செய்வார்கள், தவிர, அவர்களுடைய பிரபாவத்தைக் காண்பிக்க அல்ல, மனிதசக்திக்கு அப்பாற்பட்ட தெய்வீக சக்தி ஒன்று இருப்பதை மக்களுக்குக் காட்டவே அவர்கள் இயங்குவார்கள்.

*''மருவுமிந்த உடலுக்குள் ஒளிநய காட்டி,*
*மாகாதல் கொண்டு அப்பா ஒலியைச் சேர்த்து*
*திருவடியாம் இணையடியைத் தெரிசிக்கத்தான்*
*தேற்றுவோரைச் சித்தரெனப் பகரலாமே''-*

என்று அகத்தியர் கூறுகிறார்.

சித்தர்கள், அக்கால நிபுணர்கள், முக்காலமும் அறிந்தவர்கள், சாகாவரம் பெற்றவர்கள், இன்றும் நமக்கு நல்லதை மட்டுமே செய்பவர்கள், நம் வாழ்விற்கு வழிகாட்டியாக விளங்குபவர்கள்.

சித்தர்கள் பல கலைகளை அறிந்து வைத்துள்ளனர். அதில் சித்துக்கலை என்பதும் சாகாக்கலை என்பதும் அரிய கலையாக விளங்குகின்றன.




**சித்துக்கலை:-** சித்துக்கலை என்பது அஷ்டமா சித்திகளைச் செய்வது, 1. தன்னையும் பொருளையும் மறைத்தல் 2. விஸ்வரூபம் எடுத்தல் 3. விருப்பப்பட்ட பொருளைப் பெறுதல் 4. கனமாக்கும் கணத்தைக் கனமில்லாது எடைகுறையச் செய்தல் 5. விரும்பிய உருவம் எடுத்தல் 6. நினைத்த இடத்தில் நினைத்தவுடன் செல்லல், 7. வசப்படுத்துதல் 8. கூடுவிட்டுக் கூடு பாய்தல் போன்றவற்றால் சித்து வேலை செய்பவர்கள். அதுவும் அடுத்தவர்களுக்குப் பயன் தருவதற்கு மட்டுமே பயன்படுத்துவார்கள். ஆனால், தீய வழியில் செல்பவர்கள் தீயதிற்குப் பயன்படுத்தி அழிவார்கள். மாரீஷன் மாயமானாக மாறி, தீயவற்றிற்குப் பயன்படுத்தியதால் அழிந்தான்.

வாமனர் மகாபலியிடம் தர்மம் கேட்கும்போது சுக்கிராச்சாரியார் வண்டாக மாறி, கமண்டலத்திலுள்ள நீரை வராமல் தடுக்க, கமண்டலத்தை அடைத்தார். வாமனர் தர்ப்பையைக் கொண்டு கமண்டலத் துவாரத்தைக் குத்த, சுக்கிராச்சாரியாரின் ஒரு கண் பழுதானது. இவ்வாறு சித்துக் கலையைத் தவறாகப் பயன்படுத்தினால், அதைப் பயன்படுத்துபவர்களே அழிவர்.

'சித்தரைப் பற்றி வள்ளலார் என்ன கூறுகிறார்?' என்று பார்ப்போம்.

*''என்றும் உள்ளுவாய் எங்கும் ஓர் நிறைவாய்*
*என்றும் விளங்கிடும் என் தனிச் சித்தே!*
*சக்திகள் பலவாய் சித்தர்கள் பலவாய்*
*இத்தகை விளங்கும் என் தனிச்சித்தே!''*

என்று குறிப்பிடுகிறார்.

சித்துக்களை அடைந்தவர்கள் சித்தர்கள் சித்து என்பது இயற்கையின் விளக்கம் என்று தெரிவிக்கிறார் என்று சித்தைப் பற்றிக் கூறுகிறார். சித்து மூன்று வகை என்று வள்ளலார் கூறுகிறார். 1. கருமசிதததி 2. யோகசித்தி 3. ஞானசித்தி

1. **கருமசித்தி:-** அஷ்டமா சித்தியே கருமசித்தி

2. **யோகசித்தி:-** 64 சித்திகளையும் தன் சுதந்திரத்தில் நடத்துவது.

3. **ஞானசித்தி:-** 64,000 சித்திகளையும் தன் சுதந்திரத்தால் நடத்துவது 688 கோடி பேதமாகிய மஹா சித்திகளையும் தம் இஷ்டம் போல நடத்துவது, காலம் கடந்தது, அடிநிலை, முடி நிலை, சுத்தகர்ம, சுத்தயோக, சுத்தஞானசித்தி வல்லபங்களைத் தன் சுதந்திரத்தால் நடத்துவது என்று, மூன்று வகையான சித்திகளை ஞான வள்ளல் வள்ளலார் கூறுகிறார்.

**சித்தர் என்றால் என்ன?**

சித்தம் - என்பதற்கு மனம் என்றும் புத்தி என்றும் பொருள்.

சித்து - புத்தியால் ஆகிற செயல்கள்

சித்தர் - யோகத்தின் மூலமாகவும், தியானத்தின் மூலமாக வும் புத்தியைக் கட்டுப்படுத்திச் செயல்களைச் செய்பவர்கள்.

*''தூங்கும் போது வாங்குகின்ற மூச்சு! அது*
*திசைமாறிப் போனாலும் போச்சு!''*

சித்தர்கள் யோகம், ஞானம், மருத்துவம், இரசவாதம் போன்ற கலைகளில் அணு, அதாவது, உயிர் இயக்கம் முற்றி

ஒளி வடிவம் என்னும் திவ்விய வடிவம் பெற்று, ஞான ஒளி மயமாக்கி, மூல பிராணனோடு உடலைக் கற்பங்கள் தோறும் நிலை நிறுத்தி, சித்து செய்து, காலங்காலமாய், யுகம் யுகமாய் வாழ்பவர்களே சித்தர்கள். சாகாக்கலை கண்டுபிடித்து அதைத் தானும் கடைப்பிடித்து நமக்குக் கூறியவர்கள்தாம் சித்தர்கள்.

தர்மத்திலும் ஒழுக்கத்திலும் சிறிதும் பிறழாது வாழ்ந்து, உணவைக் குறைத்து, நாடிகளைத் தூய்மையாக்கி, உடலிலுள்ள ஒவ்வோர் உயிரணுவையும் தூய்மைப்படுத்தி, மனதை வழி பட்டால் ஒளி வடிவம் கிடைக்கும் என்றும் அந்தத் திவ்விய வடிவம் வளர்ந்து, ஞான ஒளிமயமாகி, நாத தத்துவத்தோடு இணைந்து இறப்பைவெல்லாம் என்று சித்தர்கள் கூறினார்கள்.

*''காலன் எனுங் கொடிதான கடும்ப கையை நாம்*
*கற்பமெனும் வாளினாலே கடிந்து விட்டோம்*
*தால மதிற் பிறப்பினைத் தானும் கடந்தோம்*
*தற்பரங் கண்டோம் என்று ஆடுபாம்பே'' என்றார்*

பாம்பாட்டிச் சித்தர்.

சாகாக்கலைக்கு வாசியோகம் மிகவும் முக்கியமாகும். விஞ்ஞானத்திற்கு அப்பாற்பட்ட ஓர் உலகம் உள்ளது என்பதை விஞ்ஞானம் மூலம் அறிய இயலாது. யோகத்தின் மூலமே அறிய முடியும். அதைத்தான் சித்தர்களும் ரிஷிகளும் கண்டு பிடித்து நமக்கு உணர்த்தினார்கள்.

சித்தர்களில் பதினெட்டுப் பேரை முக்கியமாகக் கூறலாம். அகத்தியர் அனைவருக்கும் முதன்மையானவர். திருமூலர், அண்டைநாதர், கூகைக்கண்ணார், அகப்பேய்ச் சித்தர், இடைக் காடர், கமலமுனி, கருவூரார், கடுவெளிச்சித்தர், கொங்கணவர், கோரக்கர், தேரையர், பதஞ்சலி, போகர், பாம்பாட்டிச் சித்தர், மச்சமுனி, வான்மீகர், காளங்கி நாதர்.

இவர்கள் தம் தவத்தின் மூலம் வான்வெளி நட்சத்திரங் களை வெறும் கண்ணால் கண்டு, ஆராய்ச்சி செய்து, பல கருத்து களை வெளியுலகுக்குக் கூறியுள்ளனர். அறுந்த கைகால்களை

ஒட்டவைக்கும் திறனைக்கூடப் பெற்றிருந்தனர். மேலும் மூலிகைகளைக் கொண்டு உடலில் தோன்றும் அனைத்து நோய்களையும் தீர்க்கும் முறையையும் கூறியுள்ளனர். அறுந்த தலையை ஒட்ட வைக்கும் திறனையும் பெற்றிருந்தனர் என்றால், எவ்வளவு அறிவுத் திறன் அவர்களுக்கு இருந்திருக்கும்?

மேலும், தம் தவ வலிமையால் இறந்த காலம், நிகழ் காலம், எதிர் காலம் என முக்காலத்தையும் அறிந்து கொள்ளக் கூடிய திறன் இருந்தது.

பலரின் உடல் நோயையும் மனநோயையும் தீர்த்து வைத்தனர். அவர்களின் மூலிகை மருந்து உணவோடு ஒத்து வருமாறு இருக்கும், எதிர் விளைவுகள் இருக்காது.

**சித்தர்களும் அவர்கள் கூறிய கருத்துக்களும்:-**

**கூகைநாதர்:-** உலகத்தில் உள்ள அனைத்தும் இருட்டுத்தான். நாம் பிறந்தது இருட்டில்தான், கரு உருவானதும் இருட்டில் தான், இருட்டில் மறைக்கப்பட்டது எதுவோ அது சிறப்புடையது. நம் அவயவயங்களான மூக்கு, நாக்கு, காது, தொப்புள் ஆகியவை இருட்டில்தான் உள்ளன.

இருட்டிலிருந்து வெளிச்சம் வந்தது. அதன் பெயர் வெட்ட வெளி, ஆகாய சக்தி, ஆகாயம் இருட்டில்தான் உள்ளது. கண்ணிலிருந்து ஓர் ஒளி கண்ணுக்குள் இருக்கும் இருட்டி லிருந்துதான் வெளிவருகிறது.

மனது இருட்டில்தான் உள்ளது. அதிலிருந்துதான் சிந்தனை என்னும் எண்ணுதல் அதாவது நினைத்தல் ஏற்படுகின்றது. சூரியனிலேயே கறுப்புப் புள்ளிகள் உண்டு. 'தொப்புளில் ஆரம் பிக்கின்றது இருட்டு' என்று கூறியுள்ளார்.

சப்த ரிஷியை ஆட்டிப்படைத்தவர், இவர். ஒரு மனோ தத்துவவாதி என்றும் புத்தரின் காலத்தவர் என்றும் கூறுவர். சிவயோகம் என்பது சும்மா இருக்கும் யோகம். அதாவது அமைதியான யோகம் என்றார்.

**நந்தீஸ்வரர்:-** இசைப்பாடலுக்கு வித்தானவர். இவர் நாத பிரம்மம் ஆவார். ஏழு ஸ்வரங்களைக் கொடுத்தவர். அந்த ஏழு ஸ்வரங்களை ஒட்டி மூச்சுப் பயிற்சி உள்ளது என்று கூறி யுள்ளார். இதைப் பதஞ்சலியும் ஏற்றுக் கொண்டார். இருட்டி லிருந்துதான் நாதம் அதாவது இசை பிறக்கின்றது. பிரமம் நாதம் வருகின்றது என்று நந்தீஸ்வரர் சொன்னார்.

**கடுவெளிச்சித்தர்:-** கடுவெளிச்சித்தர் நட்சத்திரங்களைப் பார்க்க ஆதாரம் எதுவோ, அதை 21 வயதில் அறிந்தவர். பட்டப் பகலில் இவரால் ஆகாயத்தில் உள்ள நட்சத்திரங்களை அறிய முடிந்தது.

எப்படி விட்டாலும் சுவாசக் காற்றைச் சாதாரணமாக மூச்சை இழுத்து அடக்க வேண்டும். மெல்ல மெல்ல அதிகம் செய்ய வேண்டும். வியர்வை வெளியேறும்வரை செய்யவும், இதைச் செய்தால் நாள் ஆக ஆகப் பகலில் நட்சத்திரம் தெரியும் அளவிற்குக் கண்கள் பிரகாசிக்கும் என்றார். ‘அண்டத்தில் உள்ளதே பிண்டத்திலும் இருக்கும்’ என்றார். எதையும் வெளிப் படையாகப் பேசுவார்.

**அகத்தியர்:-** எல்லோரையும் சமநிலைப்படுத்தி வாழ்ந்தவர், தன்னை அறிந்தவர், தன்னை அறியும்போது ஈசனை அறிந்தவர். பிரம்மத்தை அறிந்தவர், அதை அறிய அறிய ஒளி படைத்ததாக இருந்தது என்றார், ஈசனின் அகத்திலிருந்து தோன்றியவர் என்று புராணங்கள் கூறுகின்றன.

> *“கண்டுருகும் அக்காலனைக் கண்டேன், இந்த உலகத்தை*
> *இயக்குகின்ற காலன் இருக்கின்றான், அவனைக் கண்டேன்*
> *அவன் ஒளி பொருந்தியவன்”*

என்று அகத்தியர் கூறுகிறார்.

## (1) நாடிசுத்தி

| இடது : | வலது : |
|---|---|
| **சந்திரநாடி** | **சூரியநாடி** |
| குளிர்ச்சியானது, | வெப்பமானது, |
| மெதுவாக விடவும். | வேகமாக இழுக்கவும். |

*(2)*

| | |
|---|---|
| *இடது :* | *வலது :* |
| **சந்திரநாடி** | **சூரியநாடி** |
| *குளிர்ச்சியானது,* | *வெப்பமானது,* |
| *வேகமாக இழுக்கவும்.* | *மெதுவாக விடவும்.* |

*அதே போல் வலப் பக்க நாசியை விரலால் மூடி, சந்திர நாடி வழியே, அதாவது, இடது பக்க நாசி அதிகமான காற்றை வேகமாக இழுக்கவும். வலது பக்க நாசி வழியே அதிகமான காற்றை மிக மிக மெதுவாகச் சூரியநாடி வழியே விட வேண்டும். இவ்வாறு மாற்றி மாற்றிச் செய்யவேண்டும் ஆறு முறை போதும், இது நாடி சுத்தி எனப்படும்.*

*அதிகம் செய்தால் உடம்பு மிகவும் உஷ்ணம் அடைந்து விடும். இதன் பயனால் உடலில் தேவையில்லாத வாயுக்கள் வெளியேறும், நோய்கள் குறையும்.*

## (2) கும்பகம்

| | |
|---|---|
| **சந்திரநாடி:** | **சூரியநாடி:** |
| *'ஹம்' என்று மனதில் நினைத்து, சொல்லிக் கொண்டே மெதுவாக விடவும்.* | *'சோ' என்று மனதில் சொல்லிக் கொண்டே, வேகமாக இழுக்கவும்.* |

*நெஞ்சில் சிறிது நேரம் காற்றை இழுக்கவும்.*

*முதலில் சூரியநாடியில் காற்றைச் 'சோ' என்று மனதில் நினைத்து, காற்றை வேகமாக இழுத்து, 3 அல்லது 5 வரை எண்ணிக்கையால் நெஞ்சில சில நொடி நிறுத்தி, பின் இரண்டு மடங்கு காற்றை 'ஹம்' என்று மனதில் நினைத்து, சந்திரநாடி வழியே வெளியே விடவும்.*

| | |
|---|---|
| **சந்திரநாடி:** | **சூரியநாடி:** |
| *'சோ' என்று மனதில் சொல்லிக் கொண்டே வேகமாக இழுக்கவும்.* | *'ஹம்' என்று மனதில் நினைத்துக் கொண்டே மெதுவாக விடவும்.* |

நெஞ்சில் காற்றைச் சில நொடியில் நிறுத்தவும்.

சந்திரநாடி வழியே காற்றைச் 'சோ' என்று மனதில் நினைத்துக் கொண்டே உள்ளிழுத்து, எண்ணிக்கையில் (3 அல்லது 5 வரை) மனதில் சொல்லிக் கொண்டே காற்றை நெஞ்சில் சில நொடிகளில் நிறுத்தி, பின் இரண்டு மடங்கு காற்றை 'ஹம்' என்று மனதில் கூறிக் கொண்டே, சூரிய நாடி வழியே வெளியே விடவேண்டும்.

இவ்வாறு மூச்சை உள்இழுத்து, மூச்சை வெளியே விடுவது 'கும்பகம்' எனப்படும். இதுவும் 6 முறை மட்டுமே செய்ய வேண்டும். முதல் நாள் 2 முறை, அடுத்த நாள் 3 முறை, அடுத்து 4 முறை, பின் 5 முறை, அதன்பின் 6 முறை என்று கொண்டு வரவேண்டும். 6 முறை வந்ததும் நிறுத்திக்கொள்ள வேண்டும். மூச்சை அதிக அளவில் நெஞ்சில் நிறுத்தக் கூடாது. காலையிலும் மாலையிலும் செய்ய வேண்டும். ஆசிரியர் இல்லாமல் தானே எந்தப் பயிற்சியையும் கண்டிப்பாகச் செய்யக் கூடாது.

## (3) சூட்சுமநாடி

நாடிசுத்தியும் கும்பகமும் முதலில் சூரிய நாடியில் ஆரம்பிக்க வேண்டும். ஆனால் சூட்சும நாடி செய்யும் போது சந்திர நாடியில் தொடங்க வேண்டும்.

மூச்சைச் சந்திரநாடி மூலமாக இழுக்கின்றோம், இழுக்கும் போது, 'சோ' என்று சொல்லி, மூச்சை உள்ளிழுக்கவேண்டும். 12 நொடி உள்ளே வைத்து, பின் சூரியநாடியில் மூச்சை விடும் போது 'ஹம்' என்று சொல்லி மூச்சை விடவேண்டும். (2 மடங்காக)

| 1) சந்திரநாடி: | (2) சூரியநாடி: |
|---|---|
| ஹம் | சோ |
| 12 நொடி | 12நொடி |
| நிறுத்தவும் | நிறுத்தவும் |

*அதே போல் சூரியநாடியில் 'சோ' என்று சொல்லி மூச்சை இழுத்து, 12 நொடி நெஞ்சில் நிறுத்தி, சந்திரநாடியில் 2 மடங்காக வெளியே காற்றை ஹம் என்று சொல்லி வெளியே தள்ள வேண்டும். இதைக் கூறியவர் பதஞ்சலி முனிவர், இவ்வாறு செய்தால், நாடியுணர்வுகள் விழிப்படையும், காலையில் செய்யலாம்.*

## (4) சித்தாகாசம்

*சித்தா காசம் என்பதன் அர்த்தம் சித்தம் + சுவாசம் என்று பொருள்.*

*சித்தாகாசம் செய்பவர்கள் புத்தகத்தைப் படித்து விட்டுக் கண்டிப்பாகச் செய்யக்கூடாது. மிக மிக ஜாக்கிரதையாகச் செய்ய வேண்டும், தகுந்த குரு கொண்டே செய்ய வேண்டும். குருவின் மூலமே நாடிசுத்தி, கும்பகம், சித்தாகாசம், சூட்சும நாடி, வாசியோகம் ஆகியவற்றைச் செய்யவேண்டும். தானாகக் கண்டிப்பாகச் செய்ய முயலவேண்டாம்.*

*இதை அனைவரும் தெரிந்து கொள்ளவேண்டும் என்பதற் காகவே எழுதினேன். இப்பயிற்சியை கண்டிப்பாகக் குருவிடம் கற்றுக் கொண்டு செய்யவும்.*

*சித்தாகாசம் செய்பவர்கள் மிக மிக ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். மெல்ல மெல்ல மெதுவாகக் காற்றை 5 நொடிகளில் 10 முறை இழுக்கவும். பின் மெல்ல மெல்ல மெதுவாக அதிகமாக வெளியே காற்றை 15 முறை 7 நொடியில் வெளியே விடவும். இதுவே சித்தா காசம் என்பர்.*

*எதுவுமே சிறிது சிறிதாக (2-3-4-5-6) என்று கூட்டி, 6ஆவது முறை வந்ததும் நிறுத்திக் கொள்ளவும். இல்லையேல் சூடு சம்பந்தப்பட்ட நோய் தாக்கும். மூலநோய் ஏற்படும். 'அளவிற்கு விஞ்சினால் அமுதமும் விஷம்'.*

*சித்தாகாசம் என்பது மூச்சுப் பயிற்சிக்கு ஒரு துணைக் கோளாகப் பயன்படுகிறது. இதைச் செய்யச் செய்ய உன்னுள் இருக்கும் சத்புருஷனை அறியமுடியும்.*

## (5) வாசியோகம்

நாடிசுத்தி 6 முறை செய்துவிட்டு, 2 நிமிடம் கழித்து, சித்தா காசம் 6 முறை செய்து, பின் கும்பகம் 6 முறை, 2 நிமிடம் கழித்து, சித்தாகாசம் 6 முறை. இதுவே, 'வாசியோகம்' இதையே முக்கண்ணார் என்று சித்தர்கள் கூறினார்கள். இராஜ யோகத்தில் வாசியோகமும் ஒன்று, வாசியோகம் செய்தால் அழகிய திருமேனி வரும்.

வாசியோகம் - காலை 4 1/2 மணி முதல் 5 1/2 மணிக்குள் முடிக்கவும். அல்லது சூரியன் மறைந்தபின் செய்யவும்.

வயிற்றில் ஏதும் இருக்கக்கூடாது. (காலியாக இருக்க வேண்டும்.)

அதாவது

| | |
|---|---|
| 1. நாடிசுத்தி 6 முறை 2 நிமி. கழித்துச்<br>சித்தாகாசம் 6 முறை,<br>சிறிது இடைவெளி விட்டு,<br>2. கும்பகம் 6 முறை (2 நிமி. கழித்து)<br>சித்தா காசம் 6 முறை | இதை<br>வாசியோகம்<br>என்று கூறுவர். |

நாடிசுத்தியும் சித்தாசுத்தியும் செய்தால் அது அஷ்டாம யோகம் என்பதாகும்.

*கடினமென்று தள்ளாத வாசியோகம்*
*கண்மூக்கு மத்தியிலே கருவிபாரு*
*துடிமிகுந்த சுழிமுனையோடு தூக்கி*
*சூரியனும் சந்திரனும் ஒன்றாய் போகும்*
*குடியிருப்பு சாக்கிரக்கிரத்தின் கோட்டையாச்சு*
*கோடான கோடி யுகமே வாழலாச்சு*

என்று கடுவெளி சித்தர் கூறுகிறார்.

வாசியோகத்தால் கோபத்தை அடக்குவதை ஔவையார் எப்படிக் கூறுகின்றார் என்பதைக் கவனிப்போம்.

ஔவை மூதாட்டி மதுரைப் பாண்டியனின் திருமணத் திற்கு வருகிறார். நுழை வாயிலில் சேவகன், இவரின் தோற்றத்தையும் உடையையும் பார்த்து உள்ளே விடாமல் தடுத்துத் தள்ளி விடுகிறான். ஔவை துரத்தப்படுகிறாள்.

பக்கத்தில் பட்டி மன்றத்தின் ஓரத்தில் பசியால் வாடி வதங்கிச் சோர்ந்து படுத்துக் கொள்கிறாள். தற்போது அந்த இடம் 'அர்த்த மண்டபம்' எனப்படுகிறது. மற்றப் புலவர்கள், ஔவையைப் பார்த்து "உண்டீரா?" என்று கேட்டனர்.

அதற்கு ஔவையார்,

*"உண்டேன், உண்டேன்,*
*வன் தமிழின் தேர்ந்த வலிது கல்யாணத்தில்*
*உண்ட பொறுக்க உணர்ந்த கேள்!*
*நந்தி நெருப்புண்டேன்,*
*நீர் தள்ளுண்டேன், நீள் பசியால் சுருக்குண்டேன்,*
*சோறு மட்டும் உண்டிலேன், சுவையற்றவாசி யோகத்தால்!"*
*என்றார்.*
*"நெருப்புண்டேன் எனில், மேலும் பசியானேன்" என்பதாம்.*
*"நீர் பசியால் சுருக்குண்டேன் - மிக்க பசியால் மயக்க*
*மடைந்தேன்."*

ஆனால், யார்மீதும் கோபம் வரவில்லை. 'ஏன்?' எனில் வாசியோகம் செய்வதால் எனக்குக் கோபம் வரவில்லை என்று ஔவைப் பிராட்டியார் கூறுகிறார்.

**கடுவெளிசித்தர்:-**

*கலை விழித்த என் முன்னே*
*இரு நாசி எனக்குண்டே*
*ஓதார் உணர்ந்தாற்போல்*
*உணர்ந்தேன் ஒக்கை ரெண்டும்*
*வாசியோகம் தான் பெற்றேன் என்றார்.*

அகப்பேய்ச் சித்தர்:-

*''விந்து நாதமடி அகப்பேய்*
*மெய்யாக வந்ததடி*
*ஐந்து பெரும் பூதம் அகப்பேய்*
*அதனிடம் ஆனதடி'' என்றார்.*

விந்து, நாதம் என்பது, சூரிய சந்திர கலையாகும். இதுவே உண்மையாகும் என்று சொல்லி நிலம், நீர், நெருப்பு, ஆகாயம், காற்று இவை ஐந்தும் சூரிய சந்திர கலையில் உண்டானது என்றார்.

வாசி என்ற முக்கண்ணை அடக்கி, குண்டலினி சக்தியை எழுப்பி யோக வெற்றியைச் சித்தர்கள் அடைந்தனர்.

சித்தர்கள் சித்த மருத்துவத்தில் சிறந்து விளங்கினார்கள். சூரியக் கோளையும், அதைச் சுற்றி வரும் துணைக்கோள் களையும் நன்கு அறிந்தனர். அவை மனிதனுடன் தொடர்பு கொண்டவை என்று நமக்கு எடுத்துக் கூறினார்கள். சாகாக் கலையை அறிந்து, அதை மறைத்து வைக்காமல் நமக்கு எடுத்துக் கூறினார்கள்.

சித்தர்கள் எந்தச் செயலை செய்யலாம், எதைச் செய்யக் கூடாது என்றும், எதிரிகளிடமிருந்து எவ்வாறு தப்புவது என்றும், எதிரியிடம் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்றும் கூறியுள்ளனர். யோகா பயிற்சியையும் தியானப் பயிற்சியையும் நமக்குக் கற்பித்தனர். 'மனிதனிடம் பழகுவது எப்படி?' என்று மனித நேயத்தைக் கற்பித்தவர்கள் சித்தர்கள்.

சித்தர்களின் பல கலைகளில் அரிய கலைகளாக சித்துக் கலையும், சாகாக்கலையும் சிறப்புற்று விளங்குகின்றன.

**சித்துக்கலை**



சித்துக்கலை சாகாக்கலை

சித்துக்கலைகளைச் சித்தர்கள் எட்டு வகைச் சித்திகளாக அறிந்து வைத்திருந்தார்கள். அவை

| | | |
|---|---|---|
| 1. | அனிமாசித்தி | தோற்றத்தில் பெரிய பொருளைச் சிறியதாக ஆக்குவது, |
| 2. | மகிமாசித்தி | தோற்றத்தில் சிறிய பொருளைப் பெரியதாக ஆக்குவது (உம்) விஸ்வரூபம் |
| 3. | லகிமாசித்தி | சுமையுள்ள பொருளை மிகவும் இலேசான பொருளாக ஆக்குவது. |
| 4. | கரிமாசித்தி | இலேசான பொருளை மிகவும் சுமையுடைய பொருளாக ஆக்குவது. |
| 5. | பிராத்தி | எவ்வுலகத்திலும் எந்த இடத்திலும் தடையில்லாமல் சஞ்சரிப்பது-நாரதர் |
| 6. | பிரகாமியம் | பிறர் உடலில் நுழைந்து நினைத்தவாறு தோன்றுவது- சங்கரர் |
| 7. | ஈசத்துவம் | ஐந்து தொழிலையும் நடத்துதல் |
| 8. | வசித்துவம் | தேவன், மானிடன், பறப்பன, விலங்குகள், ஊர்வன, மரம் போன்ற வற்றைத் தன் வயப்படுத்துதல் |

1. **அனிமாசித்தி:-** பிருங்கி முனிவர் சிவனை மட்டும் வணங்க வேண்டும் என்ற எண்ணம் கொண்டவர். தினமும் வண்டு ரூபத்தில் சிவன், பார்வதி ஒன்றாக இருந்தாலும், சிவனை மட்டும் வணங்கி, பார்வதியை வணங்காமல் வலம் வருவார். மனித ரூபத்திலிருந்து சிறிய வண்டாக மாறியது அனிமா சித்தி யாகும்.

2. **மகிமாசித்தி:-** மகாபாரதப் போரின் போது, தன் உறவினரிடமே போரிடுகிறோமே என்று மனம் கலங்கி நிற்கும் போது, அர்ச்சுனனுக்கு, கிருஷ்ணன் விஸ்வரூபம் எடுத்து,

''உலகில் உள்ள அனைத்து உயிர்களும் நானே, நானே நீ, நீயே நான்,'' என்று எடுத்துக் கூறி உணர்த்தினார்.

வாமனர் அவதாரத்தில் திருமால் சிறியவனாக வந்து மூன்று அடி நிலம் கேட்டு, ஓர் அடிக்கு விண்ணையும், மற்றோர் அடிக்கு மண்ணையும் அளந்து மூன்றாவது அடிக்கு மாபலியின் தலையில் அடி வைத்து முக்தி கொடுத்தான். இச்செயல் அதாவது விஸ்வரூபம் எடுத்தது மகிமா சித்தியாகும்.

3. **லகிமாசித்தி:-** திருநாவுக்கரசரைச் சமயப் பகையின் காரண மாக, கல்லில் கட்டி, கடலில் எறிந்த பின்னும் சுமையான கல்லானது, இலேசான மிதவையாகி வந்தது லகிமா சித்தியாகும்.

4. **கரிமாசித்தி:-** கண்ணன் மேல் கொண்ட அன்பில் பாமாவை விடத் தானே சிறந்தவள் என்று ருக்மினி வாதாட, அவள் கொண்ட கர்வத்தை ஒடுக்க, கண்ணன் தராசின் மேல் அமர, ருக்மினி தன் செல்வம் அனைத்தையும் வைத்தாள், ஆனால், கண்ணன் அமர்ந்த தட்டுத் தாழவில்லை. பின், கண்ணன் ஒரு தட்டிலும் மறு தட்டில் பாமா, சிறிது துளசி இலையை ஒரு தட்டிலும் வைத்தாள். இரு தராசும் சமமாக ஆயிற்று. இருந்த கர்வத்தில் ருக்மினி வெட்கித் தலை குனிந்தாள். கண்ணனிடம் மன்னிப்புக் கேட்டு வருந்தினாள். துளசிக்காகத் தராசைத் தாழச் செய்தது கரிமா சித்தியாகும்.

ஒரு புறாவின் எடைக்காகத் தன் தசையைத் தருவதாகக் கூறி, சிபி மன்னன், இறுதியில் தானே தராசில் ஏறி அமர்ந்தான். பின் தராசு, தட்டு புறாவின் எடைக்குச் சமமானது என்று சிபிச் சக்கரவர்த்தியின் கதையால் அறிய முடிகிறது. இச்செயல் கரிமா என்ற சித்தியில் இலேசான எடையுள்ள புறா மிகவும் சுமை யுடைய பொருளாக மாறியது.

5. **பிராத்தி:-** கிருஷ்ணன், சூரன், இராவணன் மற்றும் கடவுள்கள் அனைவரும் நினைத்த இடத்தில், நினைத்த தோற்றத்தில் தோன்றக் கூடியவர்கள் என்று புராணத்தில் அறிய

முடிகிறது. ரோமாபுரி, சீனா, மற்றும் பல இடங்களுக்குப் போகர் பிரகாயப் பிரவேசமாகச் சென்று வந்தார். அவ்வாறு போகர் ஆகாய மார்க்கமாக மேருமலைக்கு வடபுறம் செல்லும் போது வெள்ளை யானை, சிவப்பு நிறக் கொக்கு, வெள்ளைக் காக்கை, மரகதப் பாறை, இரத்தினப் பாறை போன்றவற்றைக் கண்டதாகக் குறிப்பிடுகிறார்.

6. **பிரகாமியம்:-** இல்லற வாழ்க்கை பற்றி அறிந்து கொள்ள ஆதிசங்கரர் இறந்து, ஓர் அரசனின் உடம்பில் புகுந்து இல்லற வாழ்வை அறிந்தார்.

ஔவையார் இளமையிலேயே முதுமை அடைந்தது, திருமூலர் இடையரின் உடம்பில் புகுந்தது ஆகியவை பிரகாமியம் ஆகும்.

7. **ஈசத்துவம்:-** திருஞானசம்பந்தர் பூம்பாவைக்கு உயிர் கொடுத்தது, சிவன் கல்யானைக்கு உயிர் கொடுத்துக் கரும்பை உண்ணச் செய்து அடியார்க்கு உதவியது, கோரக்கர் என்ற சித்தர் சிதறிய உடம்பை ஒன்றாக்கி உயிர் கொடுத்தது ஆகிய செயல்களெல்லாம் ஈசத்துவம் ஆகும்.

8. **வசித்துவம்:-** தன் பக்தியாலும், தவத்தாலும், மந்திரத் தாலும் தேவர், இறைவன், மனிதன், மிருகம், பறப்பன, ஊர்வன, மரம் போன்றவற்றை வசப்படுத்தி, தன் சொற்படி நடக்க வைப்பது 'வசித்துவம்' என்று பெயர்.

## சாகாக்கலை

பிராணாயாமம் மூலம் பலப்பல பயிற்சிகளைக் குருவின் மூலம் அறிந்து, கூடுவிட்டுக் கூடு பாய்வது போன்ற கலை களையும் அறிந்து, அதன் மூலம் இன்னும் பிறவற்றின் மூலமும் சாகாமல், அதாவது, உடல் அழிந்தாலும் அழியா விட்டாலும் வேறு பிறவி எடுக்காமல், ஆத்மாவை நிலை நிறுத்தி, தம் எண்ணங்களைப் போல் வாழ்ந்து கொண்டிருப்பது சாகாக்கலை ஆகும்.

முதலாவதாக, சித்தர்கள் தங்கள் உடலை விட்டு வேறு இடங்களுக்கு செல்கின்றபோது, உடலை இந்த உலக பரிமாணத்திலேயே விட்டுச் செல்வார்கள். அதாவது ஓரிடத்தில் தங்களது ஸ்தூல உடலைக் கிடத்திவிட்டு, அந்த உடல் இயங்கக்கூடிய அளவு மட்டும் ஆற்றலை அந்த உடலுக்கு அளித்து விட்டு, மீதி ஆற்றலுடன், அரூப நிலையில், கண்ணுக்குத் தெரியாமல் செல்வார்கள். இதை 'ஆதிசங்கரர், திருமூலர்' மற்றும் சித்தர்களும் விக்கிரமாதித்தன் என்ற அரசனும் இன்னும் பலரும் செய்ததாக வரலாறு கூறுகிறது.

அவ்வாறு சென்று வரும்வரை, ஸ்தூல உடலுக்கும் அவர் களது சூட்சும உடலுக்கும் இடையில் ஒளிக்கம்பி போன்ற தொடர்பு இருந்து கொண்டே இருக்கும். மூச்சுக்காற்று வெளியில் வராமல் சிறிய சுழற்சியாக உள்ளேயே சுற்றிக் கொண்டிருக்கும். இதனால் உடலுக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பு இருந்து கொண்டிருக்கும். அந்த ஒளிக்கம்பியில் தடை ஏற்பட்டால் மீண்டும் உடலுக்குள் புகமுடியாமல் போய்விடும் சாத்தியம் உண்டு. இந்த அனுபவம் திருமூலருக்கு ஏற்பட்டது.

இரண்டாவது வகையானது உடலைவிட்டு நீங்கும்போது, ஒருவிதமான சக்தி வளையத்தை அந்த உடலுக்கு அளித்து உடலை அதிலேயே நிலை பெற்றிருக்கச் செய்துவிட்டு அரூபமாகவே பரிமாணங்களுக்குள் சென்று விடுவார்கள். பின் எத்தனை நாட்களோ, மாதங்களோ, வருடங்களோ ஆனாலும் உடல் கெடாது. அவர்கள் திரும்பி வரும்போது அந்த உடலைத் தம் வசம் எடுத்துக் கொள்வார்கள். அதனால்தான் இன்றும் பல மகான்களின் சமாதியில் சக்தி உண்டு என்றும், அங்குச் சென்றபின் நாங்கள் பயன் அடைந்தோம் என்றும் மக்கள் கூறுவார்கள்.

நேபாளத்தில் ஒரு புத்த பிட்சுவின் உடம்பை ஒரு கண்ணாடிப் பேழையில் இன்னும் கெடாது வைத்து இருக்கின்றனர். இராகவேந்திரர், சாய்பாபா, பாண்டிச்சேரி அன்னை போன்றவர்களின் முக்தி இடங்களில் மிக்க சக்தி இருப்பதை

உணர முடியும். பல இடங்களில் சமாதி என்று அறியாமல் சந்தர்ப்ப சூழ்நிலையில் அவ்விடத்தைத் திறந்துவிட்டாலோ, நகர்த்தி விட்டாலோ வேறு பல காரணங்களாலோ அதில் உள்ள சக்தி அதாவது உயிர் பக்கத்தில் இருப்பவரைப் பற்றிக் கொண்டு விடும். அவர்களும் திடீரென்று மயக்கநிலைக்குத் தள்ளப்பட்டு விடுவார்கள். செய்யும், வழிகாட்டும் சக்தியாக மாறி வாக்குக் கூறி, பயன்பட வைக்கும், அதை, ''அருள் வாக்குக் கூறல்'' என்றும் கூறுவர்.

ஆதியும் அந்தமும் இல்லாத ஆன்மாவை ஆறு நிலைகளிலும் ஆறு வகைகளிலும் ஆண்டவராகச் சென்று பல்லாயிரம் யுகங்கள் அழியா நிலை பெறச் செய்தவர்கள்.

இறவா நிலையெனும் சாகாக்கலையை அறிந்து இன்றும் அன்றும் என்றும் எங்கும் மன இருளை அகற்றக் கூடியவர்கள்.

சித்ததத்தினைச் சிவமயமாக்கி, மெய்யறிவு பெற்று, சீரிய அன்பினால் சிவகதி பெற்று, 64 சித்திகளையும் அறிந்து, மரண மில்லாப் பெருவாழ்வினை அடைந்தவர்களே சித்தர்கள், அதையும் நம்மிடம் மறைக்காமல் கூறியவர்கள்.

*''சாகாத நிலையடைந்தும்*
*சகசமாய்ப் பழகுவார்*
*ஏகமாய் அன்பிலே*
*எளியோர்க்கும் அருளுவார்*
*குருட்டினை நீக்குகின்ற குரு*
*நெறியைக் காட்டுவார்*
*அருளடைந்த சித்தராம் தெருள் நெறியாளரே''*

என்று ஸ்ரீகாகபுஜண்டர் கூறுகிறார்.

கிழக்காசிய நாடுகளில் கராத்தேக் கலை அவர்களின் கலையாகக் கருதப்படுகிறது. இக்கலையின் நுட்பங்களைப் போகர், 'சித்தர் சாஸ்திரங்களில்' எழுதியுள்ளார்.

மனிதனின் உடம்பிலிருந்து உயிர் பிரிந்த அடையாளமாக நாடித்துடிப்பு நின்று விடுகிறது. மருத்துவர்கள் இனிமேல்

ஒன்றும் செய்யமுடியாது என்று கைவிட்டு விடுகிறார்கள். ஆனால், சுமார் பதினைந்து நிமிடங்களுக்கு உயிர் உடலிலேயே சுழன்று கொண்டிருக்கும். ஆனால், அவ்வாறு நின்ற உயிருக்கும் உயிர் கொடுத்தனர். பலகாலம் முன்னமே இறந்த பின்னும் அவ்வுயிரை மீண்டும் உயிர்ப்பித்துக் கொடுத்தனர்.

அவர்கள் காலமில்லாத நிலைக்குத் தன் உணர்வு நிலையுடன் செல்லக்கூடிய வல்லமை பெற்றுள்ளதால் அங்கிருந்து பாய்ச்சப்படும் சக்தி, அந்த நிலையைத் தன்னுள் கொண்டு இருக்கும். அதை உடலில் செலுத்துவதால் பூலோக அதிர்வுகள் மாறி மேல் உலகத்திலிருந்து வரக்கூடிய அதிர்வுகளைப் பெற்று, தன்னிலை சிறிதும் மாறாமல் இருக்கும். இதனைச் சித்தர்கள் தத்தம் நிலைக்குத் தகுந்தவாறு கையாள்வார்கள்.

மூன்றாவதாக மிகவும் முன்னேறிய நிலையில் இருப்பவர்கள் தங்கள் உடம்பிலுள்ள பஞ்ச பூத அணுக்களைத் தம் தவ வலிமையால் ஒளித்துகள்களாக மாற்றிவிடுவார்கள். சாதாரணமாகப் பார்ப்பதற்கு இவர்கள் உடலைக் கொண்டு இருப்பது போல் தெரியும். ஆனால், உண்மையில் உடல் இருக்காது. சித்தர்கள் அதனால்தான், 'அண்டத்தில் உள்ள அனைத்தும் பிண்டத்தில் உள்ளது'' என்று கூறியுள்ளார்கள்!

உடல் தேவைப்படும்போது இவர்கள் தம் ஒளியுடம்பில் அணுக்களின் சுழற்சியினை மாற்றி, உடலாக அமைத்துக் கொள்வார்கள். தம் வேலை முடிந்ததும் மீண்டும் ஸ்தூல உடம்பிலிருந்து மறைந்து, தம் ஒளியுடம்பிற்குச் சென்று விடுவார்கள். இவர்கள்தாம் காலத்தின் இரகசியத்தை, முக்கியமாக, முழுமையாக உணர்ந்தவர்கள், இவ்வாறுதான் சாகாக்கலையை அறிந்து இருந்தனர்.

இவர்களின் உதவியைப் பெற்றவர்கள் அவர்கள் திடீரென்று மறைந்ததும், கடவுள்தான் நமக்கு உதவினார் என்று நம்புவார்கள். அகத்தியர், கடுவெளிச்சித்தர் மற்றும் பல சித்தர் இவ்வாறு பலருக்கும் உதவி உள்ளார்கள்.

சித்தத்தைச் சிவமாக்கி, அதனால், அன்பே வடிவமாகி அறிவே நிலையாகி அழியா நிலையெனும் அரியதோர் நிலையை அனுபவமாக்கி அக்காலத்தில் உள்ளவர்களுக்கு அருளிய கருணை மிக்கவர்களும், ஆற்றலும் அருளும் பெற்றவர்களும் சித்தர்கள்.

போகர், நாவுக்கரசர், ஞானசம்பந்தர் போன்ற சித்தர்களும், சிவனடியார்களும் சாம்பலையும் எலும்பையும் வைத்தே உயிர் கொடுத்தனர் என்று அறிய முடிகிறது. அவ்வாறு, இப்போது உள்ள விஞ்ஞானிகளால் செய்ய முடியாது என்று உறுதியாகக் கூறலாம்.

சித்தர்கள் பல துறைகளில் நிபுணர்கள், முற்றும் துறந்த முனிவர்கள், சாகாக்கலையை அறிந்த அறிஞர்கள், விண்ணைப் பற்றிய அனைத்தும் உணர்ந்த விஞ்ஞானிகள், முக்காலமும் உணர்ந்த தெய்வங்கள், சித்தர்களுக்கும் ஞானிகளுக்கும் உயிரில் வேறுபாடு கிடையாது. அத்தகைய பெருமை வாய்ந்த சித்தர் களைச் சிரம் தாழ்த்திப் பணிந்து வணங்கி வாழ்வில் வளம் பெறுவோம்.

# 9. தியானம்

## தியானம் என்றால் என்ன?

தியானம் என்பது, மனிதன் இறைவனை அடைவதற்குச் செல்லும் வழியே தியானம் என்பதன் பொருளைத் தவம் என்றும் எடுத்துக்கொள்ளலாம். தியானமானது ஒரு மனிதனின் அகவாழ்வையும் புறவாழ்வையும் செம்மையடையச் செய்கிறது.

தியானத்தை ஆத்திகவாதிகளும் செய்யலாம்; நாத்திக வாதிகளும் செய்யலாம். அதாவது கடவுளின்மேல் நம்பிக்கை கொண்டவர்களும் தியானம் செய்யலாம்.கடவுளே இல்லை என்று வாதிடுபவர்களும் தியானத்தைச் செய்யலாம். தியானம் மனத்தையும் உடலையும் செம்மைப்படுத்தக்கூடிய ஒரு பயிற்சி ஆகும்.

இந்துக்கள், முஸ்லிம்கள், கிறிஸ்துவர்கள், சமணர்கள் போன்ற அனைத்து மதத்தவர்களும் தியானம் செய்யலாம். உலகில் உள்ள அனைத்து நாட்டினரும் தியானம் செய்யலாம். ஆண்,பெண் என இருபாலரும் பதினெட்டு வயதிலிருந்து தியானத்தைப் பயின்று செய்யக் கூடிய, இனிய எளிய தவமே தியானம் ஆகும். அருவிகளின் ஓரம், வெட்ட வெளி, புல்வெளி, மலைக்குகை, கோவில்களிலும், வீட்டிலும், கடற்கரையிலும் என எங்கு வேண்டுமாயினும் தியானத்தைச் செய்யலாம்.

நம் உடலில் உயிர் இயங்கும்போது அதிலிருந்து ஓர் அலை உண்டாகிறது. அவ்வலையைச் சக்தி என்றும் கூறலாம். அவ்வலையின் மூலமாகப் புலன் வழியே சென்று, உயிரே மனமாக இயங்கிக் கொண்டிருக்கின்றது. அந்த மனத்தை, அந்த உயிர் மேலேயே இலயிக்கச் செய்வதுதான் தியானம் என்று யோகி ராஜ் வேதாத்ரி மகரிஷி அவர்கள் மொழிந்தார்.

திருவள்ளுவர்,

*"தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லார்*
*அவஞ்செய்வார் ஆசையுட் பட்டு." - குறள் 266*

என்று கூறியுள்ளார்.

தியானத்தைப் பற்றிப் புத்தர் கூறுவது யாதெனில்

புத்தர் அனபனாஸத்தைப் பற்றிக் கூறுகையில். 'அனபனாஸத்' என்றால் உங்கள் கவனத்தை, விழிப்புணர்வை உங்கள் உள்ளே, மற்றும் வெளியே செல்லும் மூக்கில் வைத்தல் என்று அர்த்தம் எனப் புத்தர் கூறியதாக "ஓர் ஆன்மீக ரகசியம்" என்ற நூலில் 'ஓஷோ' எழுதியுள்ளார்.

குண்டலினி தவத்தை "இராஜயோக தவம்" என்றும் கூறுவர்.

திருமந்திரத்தில்

*"நாட்டம் இரண்டு நடு மூக்கில் வைத்திடில்*
*வாட்டமும் இல்லை மனைக்கும் அழிவில்லை*
*ஓட்டமும் இல்லை உணர்வில்லை தானில்லை*
*தோட்டமும் இல்லை சிவன் அவன் ஆமே"*

என்று கூறப்பட்டுள்ளது.

*தியானம் முதலில் செய்யும் போது*
*எதுவும் புரியாது. ஒன்றுமே தெரியவில்லையே*

என்று குழப்பமடையலாம்.

நெற்றிப் பொட்டை நினைத்துச் செய்யும்போது ஒரு முறை ஒரே இருட்டாக இருக்கும். மற்றொரு முறை மனதில் பல நிகழ்ச்சிகள், நினைவுகள் அலைஅலையாகத் தோன்றும். இதனால் நமக்குத் தியானம் என்பது வெறும் மாயை என்றும் தோன்றும்.

அதாவது தொலைக்காட்சியில் புதிய வெவ்வேறு காட்சி களை உருவாக்கும்போது புள்ளிகள் தோன்றும், கோடுகள் தோன்றும், மங்கலான பலவடிவங்கள் ஏற்படும், சிறிது சிறிதாக அக்காட்சியில் முழு வடிவம் கிடைக்கும்.

அதுபோலவே, முதலில் தியானம் என்கின்ற தவத்தைச் செய்யும்போது முதலில் பல நிகழ்ச்சிகள் ஏற்பட்டு, முடிவில் ஆனந்த நிலை ஏற்படும்.நெற்றியில் ஒரு குறுகுறுப்புத் தன்மை ஏற்படும். அதைக் கவனித்துக் கொண்டே வந்தால் 'ஆனந்த நிலை' ஏற்படும்.

ஒரு சக்தி தம்மில் பாய்வது போலத் தோன்றும், தைரியம் உண்டாகும். கடவுளே நம்மிடம் வந்து சேர்ந்து, நமக்கு உதவி செய்வதுபோல எண்ணங்கள் ஏற்பட்டு, கொஞ்சம் கொஞ்ச மாக அது நடைமுறைக்கு வந்து, பின் அது உண்மை ஆகும்.

## தியானம் செய்வது எப்படி?

நம் உடலில் உயிர்ச் சக்தி இயங்கிக்கொண்டிருக்கிறது, மின்சாரம் எவ்வாறு நேர்மின் எதிர்மின் இணைவதன் மூலம் உண்டாகின்றதோ, அதுபோல், நம் உடலில் உஷ்ணநாடி, குளிர் நாடி என்கின்ற மூச்சு சக்தியை இணைச் செய்வதன்மூலம் உயிர்ச் சக்தி இயங்குகின்றது. அந்த உயிர்ச் சக்தியை ஞானக் கண்ணில் சந்திக்கச் செய்வதற்குத் தியானம் என்று பெயர்.

அந்த உயிர்ச் சக்தி மூலாதாரத்தில் உள்ளது. அந்த உயிர்ச் சக்தியை, நல்லபயிற்சி பெற்ற குருவின் மூலம் தட்டி எழுப்பி, தண்டு வடத்தின் மூலம் நெற்றியில் உள்ள ஞானக்கண்ணைத் திறக்க வேண்டும். முன் காலத்திலுள்ள ரிஷிகளும் சித்தர்களும் பின்பற்றும் வழிமுறை யாதெனில் இடைகலை என்கின்ற உஷ்ணநாடி முதுகுத் தண்டின், மேல்தண்டின் இடப்பக்கம் ஆரம்பிக்கிறது. முதுகுத் தண்டின் வலம் வந்து, வலது நாசி யோடு தொடர்பு கொள்கிறது.

பிங்கலை என்கின்ற குளிர் நாடி முதுகுத் தண்டின் வலப் பக்கத்தில் ஆரம்பித்து, பின்னிக்கொண்டு, இடது நாசியில்

அமைகிறது. இவை இரண்டும் ஒன்றை ஒன்று பால் குறிக்கு மேலும், நாடியிலும், இருதயத்திலும் தொண்டையிலும் புருவ மத்தியிலும் சந்தித்து, மீண்டும் மேல் செல்கிறது. அவ்வாறு சென்று சித்ரஹாசம் வரை பரவி நிற்கின்றது.

இக்கருத்தை ஆதிசங்கரர் மூலமணி பூரகத்தோடு இலங்க மார்பு முதுகளம் வில் புருவ நடு என்று சௌர்ந்தர்ய லகரியில் கூறுகின்றார். தற்போது குருமார்கள் தொடுதல் மூலம் இதனைக் கற்றுத் தருகின்றனர்.

தியானத்தை எப்படித் தொடங்க வேண்டும் என்றால் ஒரு நல்ல குருவின் மூலம், மூலாதாரத்தைத் தட்டி எழுப்பி, தண்டு வடத்தின் மூலம் குண்டலினி சக்தியைத் தலையின் முன் பாகமாகக் கொண்டு வந்து, இரு புருவங்களுக்கு இடையிலுள்ள நெற்றிப் பொட்டைத் தொடவேண்டும்.

*அந்த நெற்றிப் பொட்டை ஆக்ஞை*
*என்றும் ஞானக்கண் என்றும் லலாடம்*

என்றும் கூறுவார்கள். அதன் மறுபெயர் முச்சந்தி என்றும் கூறுவர்.

நெற்றிப் பொட்டைத் தொட்டுத் தீட்சை பெற்றவர்கள் அந்த ஆக்கினையைத் தினமும் 15 நிமிடம் காலை, மாலை என்ற இரு வேளையிலும் கவனித்து வரவேண்டும். தினமும் ஆக்கினையைக் கவனிக்கக் கவனிக்க, நெற்றிப் பொட்டில் ஒரு குறுகுறுப்புத் தன்மை ஏற்படும்.

அதைத் தலைபாரம் (அதாவது தலைவலி) ஏற்படும் வரை செய்துவரவும். பின் தொட்டுக் காட்டிய குருவிடம் மீண்டும் சென்று, அவர் மூலமாக நெற்றிப் பொட்டிலிருந்து தண்டு வடத்தின் மூலம் மூலாதாரத்திற்குக் கொண்டு வர வேண்டும். இதற்கு 'இறங்குபடி' அல்லது 'சாந்தி யோகம்' என்று பெயர்.

மற்றும் அதை (சாந்தி யோகத்தை) மூலாதாரத்தில் நம் மனதைக் கொண்டு நிலைநிறுத்த வேண்டும். இந்தச் சாந்தி யோகத்தை, வாரத்தில் ஒரு நாள் 10 நிமிடம் நினைக்க வேண்டும். மற்ற நாட்களில் ஆக்கினை அல்லது நெற்றிக்கண்ணைக் கவனித்து வரவேண்டும்.

ஆக்ஞை என்பது கட்டளை இடுவது என்பது ஆகும். ஆக்ஞையிலிருந்து புறப்படும் சொற்கள் சிலகாலங்களில் நடந்தேறும். இது உத்தரவு பிறப்பிக்கும் இடமாகும். இதற்கு முச்சந்தி என்று பெயர். மூச்சந்தி என்பது மூன்று வழிகள் சந்திக்கும் இடம் என்று பொருள்.

ஆக்ஞை நன்றாகப் பழகிய பின், மீண்டும் குருவின் மூலமாகத் தலை உச்சியைத் தொட்டுக் காட்டச் செய்ய வேண்டும். தலையின் உச்சியைக் கூர்ந்து கவனிக்க வேண்டும். இப்பயிற்சிக்குத் துரியம் என்று பெயர்.

அடுத்த பயிற்சி துரியாதீத தவம். குருவின் மூலமாக இப்பயிற்சியைச் செய்யவேண்டும். துரியம் பயிற்சியை முடித்ததும், குருவானவர் நம் தலைக்கு மேல் ஓர் அளவில் கைவிரலால் தட்டி, உணர்வை அவ்விடத்தில் நிலைக்கச் செய்வார், அவ்விடத்தை 'ஆயிரம் தாமரை இதழைக் கொண்டது போல நினைத்து வரவேண்டும். இதுவே, 'துரியாதீத தவம்' என்பதாகும்.

இதை ''ஆயிரத் தொட்டிதழ் கமலத்து துரியாதீதத்தவம்'' என்று திருவள்ளுவர் கூறுகிறார்.

## பிரபஞ்ச தியானம்

ஐந்து வருடங்களில் எல்லாப் பயிற்சியையும் நன்கு பழகி முடித்தபின், அடுத்து பிரபஞ்ச தியானத்திற்கு வரவேண்டும். இப்பயிற்சி எவ்வாறு எனில், ''ஆக்ஞை, துரியம், துரியாதீதம் உணர்வினைக் கொண்டு வந்து, அடுத்து பரவெளியை நினைக்க வேண்டும். இதுவே, 'பிரபஞ்ச த்யானம்' என்பது.

அத்துடன் நிறுத்தாமல், அதைப் படிப்படியே இறக்கி, நெற்றிப் பொட்டில் நிலை நிறுத்த வேண்டும்.

தியானம் செய்யப் ப்ராணாயாமம், வாசியோகம் அவசியம். அவை உணர்வுகள் அதிகம் ஏற்படக் காரணமாக அமைக் கின்றன.

முற்காலத்தில் சித்தர்களும் மற்றத் தவயோகிகளும் பிராணாயாமம் அடுத்து, 'வாசியோகம்' என்னும் பயிற்சியை மேற்கொண்டு படிப்படியாக மூலாதாரத்தில் உள்ள குண்டலினி சக்தியை மேலே எழுப்பி ஆக்ஞையினைக் கவனித்தனர்.

## தியானம் இரண்டு வகைப்படும்

அவை,

**தியானம்**



1. தர்ம வழி 2. அதர்ம வழி

நாம் எதைத் தேர்ந்து எடுக்கிறோமோ, அதைப் பொருத்து நம் வாழ்க்கை செம்மையுறும்.

"வாழ்க்கை ஆகாய தத்துவத்தின் அடிப்படையிலே நடந்து கொண்டிருக்கிறது" என்று கடுவெளிச் சித்தர் கூறினார். அதைத் தான் அக்காலத்தில் 'காலச் சக்கரம்' என்று கூறுவர்.

தற்போது ஆராய்ச்சியாளர்கள் இக்கருத்தை 'உண்மை' என்று கண்டறிந்து உள்ளனர்.

தியானத்தை இரு வழிகளில் செயல்படுத்தலாம் :

1. தர்ம வழி,
2. அதர்ம வழி.

தர்ம வழியில் நடக்கும்போது நல்லது நடக்கும். நமக்கு ஏற்படும் நன்மை தீமைகளையும் முன்நடக்கும் அழிவையும் நமக்கு முன் கூட்டியே அறிவித்து, அதிலிருந்து தப்பிக்கும் வழியையும் காட்டும்!

நமக்குத் தெய்வ அனுக்கிரகம் எப்போதும் இருக்கும். நாம் கஷ்டப்படும்போது நல்லவர்களை அறிமுகம் செய்து அவர்களை வழிகாட்டியாகக் கொண்டு நமக்கு நன்மையை ஏற்படுத்தித் தரும்.

அதர்ம வழியில் அதாவது தியானம் செய்து கொண்டு ஹிப்னாடிஸம் மற்றும் சித்து விளையாட்டுகளைத் தெரிந்து கொண்டு அவற்றைத் தன் சுயநலத்திற்குப் பயன்படுத்திக் கொண்டால் பயன்படுத்திக் கொண்டவர்க்குத் தீமையே ஏற்படும். இதனால், எப்போதும் எல்லாரும் நல்லதே நினைப்போம்.

பரஞ்சோதி மகான் அவர்கள் ''நான் கடவுள்'' என்னும் தத்துவத்தைக் கருத்தாகக் கொண்டவர்.

குருஜி C.K.S. (C.K. சிவராமகிருஷ்ணன்) அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு இஷ்ட தெய்வம் உண்டு. அவரவர் இஷ்ட தெய்வத்தை அவரவர் மனதில் நிறுத்தி (ஆனால், நெற்றிப் பொட்டில் தெய்வ உருவத்தை நிறுத்தக்கூடாது) நெற்றிப் பொட்டைக் கவனிக்க வேண்டும் என்கிறார். குருஜி தவயோகி C.K.S. அவர்கள் தம் நூலில் தவயோக சிந்தனை என்னும் தலைப்பில்,

''நெற்றிக்கண் வாயிலாய்
நேருச்சி மேலேறிப்
பற்றகிலக் கண் திறக்க
பாடுபட உற்றவழி
ஆகும் தவயோகம்
தானோ நானாய் வளர
ஆகும் நெறியதுவே

*ஆக்கவழிச் சிந்தனையும்*
*அச்சிந்தைக் கேற்பவரும்*
*வாக்கும்அதன் வழியே*
*யாம் செயலும் ஊக்கமுற*
*அன்பே பெருகும்*
*அருள் வழியே தானாகும்*
*இன்பத் தவயோகமாம்*
*தானே நானாதலினால்*
*தாரணியும் மற்றளவும்*
*நானாகவே யிருப்பே*
*னாதலினால் - ஆனாத*
*பாவனையால் என்றும்*
*பரிந்தே தவயோகம்*
*சீவப் பணிக்கே சிறந்தது''*

என்று குறிப்பிட்டு உள்ளார்

வேதாத்ரி மகரிஷி அவர்கள் 'அறிவே கோயில்' என்பார் அவர்கள் தியானத்தைப் பற்றித் தம் நூலில்,

*''மூச்சிழுத்துக் கும்பித்து உடல் வருத்தி*
*மூலத்தீ மூட்டுகின்ற சிரமம் வேண்டாம்.*
*ஆச்சரியமோ திகைப்போ இன்றி மக்கள்*
*அறிவின் நிலை அறிந்திடுவார் கருத்தவத்தால்*
*தீச் செயல்களால் பஞ்ச பாதகங்கள்*
*செய்வதற்கே சூழ்நிலை இருந்திடாது.*
*பேச்சினிலே எவருக்கும் கனிவிருக்கும்*
*பேரன்பின் வழிச் செயலே பெருகி நிற்கும்''*

என்று கூறியுள்ளார். த்யானம் செய்வதைப் பற்றியும் செய்வதனால் ஏற்படும் பலனையும் குறிப்பிட்டு உள்ளார்.

பரஞ்சோதி மகான் அவர்களின் நூலைப் படிக்கும் போது இது மெய்யே. கடவுளின் மிக மிகச் சிறிய அணுவே நாம். அதாவது நீரூற்றிலிருந்து புறப்படும் நீர் ஆவியாகி, ஆறாகி, மரம், செடி, விலங்கு, பறவை, மனிதன் ஆகியவற்றிற்கும் பயன் படுகிறது. இந்த நீரில் சில துளி ஆண்டவனின் அபிஷேகத்

திற்கும் பயன்படுகிறது. இதில் எது உன்னத நிலை கொண்டது? ஆண்டவனை அடையும் நீரே உன்னத நிலை அடைகிறது.

அதுபோல், ஒளிவடிவமாகிய கடவுளிலிருந்து நாம் நல்லவர் களாவும் வல்லவர்களாகவும் தீயவர்களாகவும் பல குணங்களில் வாழ்கின்றோம். இதில் ஆயிரத்தில், இலட்சத்தில் ஒருவரே ஒழுக்கமுடனும் கட்டுப்பாட்டுடனும் ஆண்டவனை வணங்கி அவனை அடைகின்றார். ஆனால், நாம் ஒவ்வொருவரும் கடவுளை மறந்து மாயையில் மூழ்கி, திசை திரும்பி விடுவதால் கீழ்நிலைக்குத் தள்ளப்படுகிறோம்.

நம்மை நாம் அறிந்து, நம்மில் ஒளிந்திருக்கும் தெய்வ சக்தியைப் பெருக்கி, இறைவனை உணர்ந்து, அவனை அடையும் போது நாம் கடவுளே! இதைத் தான் 'நமக்கு நாமே கடவுள்' என்று கூறினார்.

புராணங்களிலெல்லாம் கடவுள் தீமையை அழிக்க மனித அவதாரம் எடுத்தார் என்று காண்போம். இதன் தத்துவம் என்னிலிருந்து புறப்பட்ட நீங்கள் என்னைப்போல் வாழ்ந்து என்னை வந்து அடைவீர்கள் என்ற கருத்தை உணர்த்துவது ஆகும். உதாரணத்திற்கு இராமபிரான் மனிதனாகப் பிறந்து இன்றளவும் மக்களின் மனதில் கடவுளாக அவதரிக்கின்றார்.

'குண்டலினி' என்கின்ற தவத்தைப் பற்றிச் சித்தர்கள் என்ன கூறுகின்றனர்?'' என்பதைக் கவனிப்போம்.

கொங்கணவர் என்கின்ற சித்தர் கூறுவது யாதெனில், முப்பூ தீட்டை என்று கூறியுள்ளார்.

முப்பூ என்பது

1. ஆக்ஞை
2. துரியம்
3. துரியா தீத தவம் என்பவை தான்.

'தீட்சை' என்பது 'உபதேசம்' ஆகும்.

*''மூலாதார மென்னுஞ் சுழிமுனை நாட்டி*
*முதுகுத் தண்டாமி சிதெளி மூலமிதே*
*மாலாகி மீதான பதயுமாகி*
*மின்னெழுத்து மனை மறைந்த மேன்மை போல*
*நாலாய வேதமுத லுரைக்கு மெட்டா*
*நாதாந்த சோதியென நவின்று நிற்கும்*
*மேலாகும் மரமான வீட்டைத் தானே*
*மேவி நிற்பார் மெய்ஞ்ஞான மேன்மையோரே''*

என்று திருவள்ளுவ நாயனார் கூறியுள்ளார். மேலும் அவரே

*''துரிதமுடன் காயசித்தி தோன்றுமுடல் வலுக்கும்*
*பெரிதரதென வென்றும் பிசகாது வாசிகட்டும்*
*அரிதுதான் மகாசேகரி அதன் மகிமை யாரறிவார்?*
*விரிதிரை புவிதனில் வீணார்க்கு தவ திதுவாண்டே*
*தீப குண்டலினி மூலதாரத் திருத்து பொழிந்திடும்முதல்*
*ஆபத்தில்லை யினியுடற்கிதை யனுதினமுமுண்டு*
*தாபமேது வையகத்தில் சாவேது தகமையோடுகள்*
*வரக் கோப மோடு மகங்காரம் கொள்ளியிட்டுக் கட்டியே''*

என்று பாடியுள்ளார் - (பஞ்சரத்தினம்)

பரஞ்சோதி மகான் அவர்கள்:-

*''நினைவிடத்தில் நினைவை நினைத்து*
*நினைவை நிறுத்தி, நினைவைச் சுழற்றி,*
*நினைவில் நிலைத்து, நினைவாய் நினைவில்*
*நினைவோடு நின்ற நினைவும் நானே'' என்கின்றார்*

அடுத்து

*''உந்திக்கு நேரே உள்மூலம்*
*தன்னை ஊன்றி ஏற்றி*
*உள்சுழிமுனையில் பாய்ச்சினாயாகில்*
*உள்ளம் கசிந்து தெளிந்து உச்சிதிறந்து*
*நீ பார் பேரானந்த உருவை''*

என்றும் சொல்கின்றனர்.

*"காசி நதி தனிலேதான்*
*தீர்த்தமாடிக் கரைகாணா*
*மந்திரங்கள் தன்னை ஓதி*
*வாசிநிலை அறியாமல்*
*தெய்வ மென்று வணங்கியவன்*
*அலைந்திடுவான் வருவதேது?*
*பாரப்பா, ஆலயத்தில்*
*நெய்விளக்கு பூஜை பல செய்தும்*
*அவன் அலைந்திட்டாலும்*
*ஆரப்பா அன்னதானம்*
*பூமிதானம் அப்பனே மாதானம்*
*செய்திட்டாலும் நேரப்பா குளம்*
*கிணறு வெட்டினாலும் நீ*
*மகனே கரையேற மாட்டாய்! பாவி"*

என்கிறார் சுப்ரமணி - (ஞானம்)

காசிக்கே சென்று நீராடினாலும், தானங்கள் பல செய்தாலும் கிணறு, குளம் வெட்டினாலும் பலபூஜைகள் செய்தாலும் தியானம் செய்யவில்லையெனில் எல்லாம் பாழ். அதாவது, நீங்கள் காசியிலே நீராடினாலும், பல மந்திரங்கள் ஓதினாலும், தான தர்மங்கள் பல செய்தாலும், கோவிலுக்குச் சென்று நெய்விளக்கு ஏற்றுதல், மற்றும் பல பூஜைகள் செய்தல் ஆகியவற்றை நீங்கள் செய்து தெய்வங்களைத் தொழுதாலும், குளம் கிணறு வெட்டினாலும் ஞானத்தால் ஏற்பட்ட தியானம் செய்தால்தான் நம் முற்பிறவிப் பாவங்கள் மற்றும் இப்பிறவிப் பாவங்களைப் போக்கி இம்மையிலும் மறுமையிலும் நன்மைகளும் முக்தியையும் அடைய முடியும்.

அடுத்து, இருக்கருத்தையே,

*"நில்லப்பா அண்டத்து*
*உச்சியிலே சென்று*
*நித்தியானந்த சுகாதீதம் தன்னில்*
*செல்லப்பா பலவினைகள்*
*எல்லாம் நீங்கும்"*

என்று கூறுகிறார்.

ஜெயமுனிவர் "திருமந்திர ஞானம்" என்னும் நூலில், உச்சியில் உள்ள துரியம் என்கின்ற உணர்வுகளை நாம் கவனித்து வந்தால் பல வினைகளும் அதனால் ஏற்படும் துன்பமும் நீங்கும். என்றும் பொருள்.

அகத்தியர்:-

*"சேரப்பா மூலத்தை ஒளிகாணு*
*மட்டும் சேர்ந்து நீ*
*சுழுமுனையில் சிறக்க நில்லே*
*நின்றதனால் மனது ஒடுங்கும்*
*காற்று ஆடாது நேரறிந்து*
*குருபதத்தை நினைவாய்க் காறு*
*பண்டுவினை தானகலும் பயமே*
*இல்லை பார்க்கையிலே ஆதாரம்*
*தோணும் தோணும்"*

என்று கூறுகிறார்.

"மூலாதாரம் மூலம் ஒளியைச் சுழுமுனையில் சிறப்பாக நீ கவனிக்கப் பயன் இல்லை. வாழ்க்கைக்கு உண்டான பல வழிகள் உண்டாகும்; பல வினைகளும் தானாக அகன்று விடும்" என்று அகத்தியர் கூறுகின்றார்.

ஆயிரத் தெட்டிதழ் கமலத்துத் துரியாதீதத்தவம் என்று திருவள்ளுவர் தியானத்தைப் பற்றிக் கூறியுள்ளார். அதாவது தலை உச்சியின்மேல் ஆயிரம் இதழ்கள் கொண்ட தாமரை அமைந்துள்ளது என்று துரியாதீதத்தை விளக்குகின்றார்.

திருமூலர்:-

*"இந்தப் புருவ மத்தியே ஞானசபை சிற்றம்பலம்*
*நெற்றிக்கு நேரே புருவத்திடை வெளி*
*உற்றுப்பார்க்க வொளியிடும் மந்திரம்*
*பற்றுக்குப் பற்றாய்ப் பரமன் இருப்பிடம்*
*சிற்றம்பலம் என்று சேர்த்துக் கொண்டேனே."*

என்று கூறுகிறார்.

பரஞ்சோதி மகான்:-

*"ஒரு கண் திறந்தது இரு கண் சிரித்தது*
*இக் கண் குளிர்ந்தது இருதயக் கண்*
*மகிழ்ந்தது அறிவுக்கண் அறிந்தது*
*மூலக்கண்ணில் மூலப் பொருளால்"*

என்றும்,

*"கண் இரண்டிலும் கடந்த கண் ஞானக்கண்*
*அக்கண் முக்கண்; முக்கண்ணின் முகப்பும்*
*முனை எழுத்தால் முக்கி அருகு நுனி வழியாய்*
*கரு ஏறி வந்திருந்து, அதைத் திறந்த பின்*
*அதனுட் புகுந்துபோய் இருப்பது எதுவோ*
*அதுவே முக்திக்கு வித்தாகியதும் முன்னமே*
*ஆதியாயுள்ளதுமான மௌன மெய்யுணர்வாம்."*

என்று கூறுகின்றார்.

தெய்வங்களுள் அனைத்துத் தெய்வங்களும் தியானம் செய்கின்றன என்று புராணங்களும் கல்வெட்டுகளும் (கோவிலில் உள்ள உருவங்கள்) நமக்கு உணர்த்துகின்றன. அரசர்கள் முதிய பருவம் வந்ததும் தம் வாரிசுகளிடம் அரசை (நாட்டினை) ஒப்படைத்து, முடிவில் தவம் செய்து முக்தியை அடைந்தனர் என்று பல கதைகளில் படித்து இருக்கின்றோம்.

தட்சிணாமூர்த்தி, யோகநரசிம்மர், சிவபெருமான், யோக ஆஞ்சநேயர், இலட்சுமி, பார்வதி போன்றவர்களை யோகம் செய்வதுபோல் கோவிலில் உருவங்களாகப் பொறித்து வைத்து உள்ளனர். எவ்வளவுதான் ஆடம்பரமாக வாழ்ந்தாலும் முடிவில் முக்தி நிலையை அடையத் தவம் செய்ய வேண்டும் என்று நமக்கு உணர்த்துவதுதான் இதன் கருத்தாகும்.

நம் முன்னோர்கள் தியானத்தை அடைய மிகவும் சிரமப் பட்டார்கள், நாடி சுத்தி செய்தல் ப்ராணாயாமம், யோகா பூஜை செய்தல் மந்திரங்கள் ஓதுதல், தீர்த்த யாத்திரை செல்லல், அன்னதானம் மற்றும் பிற தானங்கள் செய்வது என்று என்ன என்னவோ செய்துவிட்டு, முடிவில், தியானத்தை அறிந்து, அதைச் செய்து, அதனாலேயே மனநிம்மதியை அடைந்தனர்.

தியானத்தின் மூலம் சில நோய்களை நமக்கு நாமே குணப்படுத்திக் கொள்ளலாம்.

ஒருவருக்கு அதிக இரத்த அழுத்தம் இருந்து, அவர்கள் குண்டலினி தியானம் செய்பவர்களாக இருந்தால், அவர்கள் மூலாதாரத்தில் 10 நிமிடம் வரை நினைவை வைத்து இருந்தால் அவர்களின் அதிக இரத்த அழுத்தம் படிப்படியாகக் குறையும்.

குறைந்த இரத்த அழுத்தம் இருந்தால் நெற்றிக்கண்ணை நினைக்கவேண்டும்.

கைகால் குடைச்சல் இருந்தால், நம் மனதை வலி இருக்கும் இடத்திலிருந்து மனதாலேயே படிப்படியாக நெற்றிக் கண்ணிற்குக் கொண்டு வந்து, பின் துரியம், துரியாதீதம் என்று வந்து, முடிவில் பரவெளியில் விட்டுவிடவேண்டும். கைகால் குடைச்சல் நீங்கும்.

தலைவலி என்றால் மூலாதாரத்திற்கு நினைவைக் கொண்டு வரவேண்டும்.

**தியானத்தின் பயன்கள்:-**

1. மனதில் சாந்தியைக் கொடுக்கும்
2. முன் வரும் நல்லது கெட்டது அறிந்து, அதிலிருந்து மீளவோ வாழவோ வழி வகுக்கும்.
3. வளமையான வாழ்வு கிட்டும்.
4. தீவினை அகன்று நல்வினை தோன்றும்.
5. உடலில் ஒளி அலைகள் பெருகி நம்மைக் காக்கும்.
6. நல்லவர்கள் நமக்கு உதவுவார்கள்.
7. நமக்கு தீமை செய்வோர் பாதிக்கப்படுவார்கள்.
8. ஹிப்னாடிசத்திற்கு அடிபணியோம்.
9. முகத்தில் ஒரு வசீகரம் தோன்றும்.

10. அனைவரும் நம்மை விரும்புவர்.

11. மன உறுதியும் தைரியமும் தோன்றும்.

12. வாழ்வில் முன்னேற்றம் உண்டாகும்.

ஞான வள்ளல் பரஞ்சோதி மகான், தியான முறையில், ஞான வள்ளல் பரஞ்சோதி தத்துவ தவஞான பீடங்களாக "உலக சமாதான ஆலயம்" என்னும் பெயரில் உலகனைத்து நாடுகளிலும் "உலக சமாதான ஆலயம்" நிறுவி, ஆங்காங்கு மேற்கண்ட குண்டலினி தவ உபதேசத்தினைத் தரவல்ல குருமார்களை உருவாக்கி, மேற்படி குண்டலினி உபதேசத்தை அருளச் செயல்படுத்தி உள்ளார்கள். நம் இந்திய நாட்டிலும் குறிப்பாகத் தமிழ் நாட்டில், சுவாமி மலையைச் சேர்ந்த திருவலஞ்சுழி, சென்னை, மதுரை, ஈரோடு, மற்றும் தமிழ் நாட்டில் பல நகரங்களிலும் உபதேசத்தினைத் தந்து மக்கள் அதனைப் பயன்படுத்திச் சமாதான நல்வாழ்வு வாழ்ந்து வருகிறார்கள்.

> "கடவுளைத் தவிர்த்து வேறு பொருள் இல்லாததால்
> வேறு பொருள் ஒன்று இருந்து, அதை எடுத்துப்
> படைத்தான் என்பது இல்லை"

எல்லாமாக, பரிமளித்து, வியாபித்து, விரிந்து இருப்பது யாவும் கடவுளே. பரஞ்சோதி மகான் சுத்த அத்வைதமான, தெளிவான வாசகங்களாக, "நான் கடவுள்" என்ற நூலில் தந்துள்ளார்.

முக்திப்பேறு என்னும் முடிவான நிலைக்கு ஞான வள்ளல் பரஞ்சோதி மகான் அவர்கள் உபதேசித்த முறைகளும் அளிக்கப்படும் தீட்சையும் எளிய முறையில் அனைவராலும் பயன்படுத்ததக்க, குறிப்பாகப் பெரிதும் இல்லற வாசிகள் பயன்பெறும் வகையில் அருளி உள்ளார்கள்.

மனிதனுக்கு மூச்சு எப்படி அவசியமோ அதுபோல் வாழ்க்கைக்குத் தியானம் என்பது மிகவும் முக்கியம். இதுவும்

ஒரு கடவுளை நினைத்துப் பூஜை செய்யும் முறைதான். கடவுளை நம்பாதவர்களும், மன உறுதிக்கு ஒரு மனப் பயிற்சி என்று எ ூத்துக்கொண்டு, தியானம் செய்து வாழ்வோம். தினமும் காலையோ, மாலையோ, இரவோ 20 நிமிடங்கள் போது மானது. நம் வாழ்வில் முன்னேற்றம் அடைவதைக் கண்கூடாகக் காணலாம். எனவே, நல்ல குருவின் மூலம், பயிற்சி பெற்ற நல்ல மனதுடைய குருவின் மூலம், தியானம் பழகித் தினமும் செய்து, வாழ்வில் உயர்வோமாக.

# 10. விதியும் மதியும்

நம் சித்தர்களும் ஞானிகளும் கடுமையான தவம் செய்து ஆகாயத்தில் படிவங்களாக உள்ள பல இரகசியங்களை அறிந்து, இருந்தனர், முக்காலத்தையும் உணர்ந்திருந்தனர். 'இறவாநிலை' எனும் கலையைத் தெரிந்து அதன்படி, இன்றும் வாழ்ந்து வருகின்றனர்.

ஆகாயத்தில் உள்ள கோள்களை அறிந்து, அவை மனிதனை எவ்வாறு ஆட்டிப்படைக்கின்றன, அதிலிருந்து எப்படித் தப்புவது என்று தெரிந்து, மக்களுக்கு உணர்த்தி, அவர்களைக் காப்பாற்றி வந்தனர்.

மனிதனின் முன் பிறவியில் செய்த கர்மவினைக்கு ஏற்ப, மறுபிறவியில் ஒவ்வொருவரின் வாழ்க்கையும், நவக்கிரகங் களுக்கு உட்பட்டுத் தீர்மானிக்கப்படுகிறது. அவர்களுக்குத் தோசங்களும், யோகங்களும் இறைவனால் விதிக்கப்படுகின்றன. இதையே 'விதி' என்று கூறுகிறோம்.

தசரதன் ஒரு நாள் வேட்டையாடக் காட்டுக்குச் சென்றான். ஒரு சிறுவன் தாய், தந்தையரின் தாகத்தைத் தணிக்கக் குளத்தில் நீர் எடுத்துக் கொண்டிருந்தான். அவனை, மான், நீர் அருந்துவதாக நினைத்துத் தசரத மன்னன், அம்பை எய்து கொன்று விட்டான். இதை அறிந்த அச்சிறுவனின் பெற்றோர்கள், தசரத மன்னனை நோக்கி, "உனக்கும் உன் மகனால் பிரிவு ஏற்பட்டு, நாங்கள் பெற்ற இதே துன்பத்தை நீயும் அனுபவித்து, இறப்பாயாக" என்று சாபம் கொடுத்தனர்.

அதேபோல் இராமர் காட்டுக்கு வனவாசத்திற்குப் புறப்பட்டுச் சென்றதும், தசரதன் துக்கம் தாளாமல் இறந்து

விடுகிறார். இதைத்தான், 'முற்பகல்செய்யின் பிற்பகல் விளையும்' என்னும் பழமொழி உணர்த்துகிறது.

இராமர் மறைவில் இருந்து, அம்பை எய்து வாலியைக் கொன்றதால், பின் பிறவியில் இராமர் மகாபாரத்தில் கண்ணன் பிறவி எடுத்து வரும் போது பாரத யுத்தம் நடந்து முடிந்து, பாண்டவர்களை அரசிலேற்றி எல்லாக் கடமைகளும் முடிந்ததும் யமுனா நதியின் கரையோரம் நடந்து வரும்போது இராமர், முற்பிறவியில் எய்த அம்பே, கண்ணனை இப்பிறவியில் காலில் தைத்து, அதனால், கண்ணன் முக்தி அடைகிறான். இதைக் காணும்போது நாம் முற்பிறவியில் செய்த தர்மத்திற்குப் புறம்பான செயல்களால் அடுத்த பிறவியில் தண்டனை கண்டிப்பாகக் கிடைக்கும் என்று அறியலாம்.

வாசுதேவருக்குக் கண்ணன் எட்டாவது குழந்தையாகப் பிறக்கிறார். கம்சன் அசரீரி மூலம் 'எட்டாவதாகப் பிறக்கும் குழந்தையால் மரணம்' என்று அறிந்து, ஒவ்வொரு முறையும் பிறக்கும் குழந்தையையும் உடனே கொன்று விடுகிறான். தெய்வச் செயலால் எட்டாவதாகப் பிறக்கும் குழந்தை கண்ணன் யசோதையிடம் வளர்ந்து, பின் கம்சனைக் கொல்கிறான். இக்கதையின் மூலம் "விதி எதுவோ அதன்படியே நடக்கும். ஜாதக ரீதியாகவோ, அசரீரியாக அறிந்தாலும் அந்த விதியை அதாவது நடக்கப் போகிற செயலை, யாராலும் தடுத்து நிறுத்த இயலாது" என்று அறிய முடிகிறது.

இளங்கோவடிகள் இளைய அரசர் ஆவார். மன்னரின் சபையில் ஒரு ஜோதிடர் மன்னரிடம், "உன் மூத்த மகன் அரசாள மாட்டார். இளைய மகனான் இளங்கோவடிகள்தான் அரசாள்வார் என்று கூறினார். இதை பொய்ப்பிக்கும் வகையில் உடனே இளங்கோவடிகள். துறவரம் மேற்கொண்டார். பல நூல்களையும் எழுதினார். இதில் புகழ் வாய்ந்த சிலப்பதி கார மும் ஒன்றாகும். ஒரு காலகட்டத்தில் தமையன் இறக்க இளங்கோவடிகள் அரசை ஏற்று நடத்தினார். இதிலிருந்து, 'விதி வலியது' என்று அறிய முடிகிறது.

அயோத்தி மாநகருக்கு ஒரு சாபம் இருந்தது. "14. ஆண்டுகள், குறிப்பிட்ட காலத்தில் யார் அயோத்தியின் அரச பதவியில் அமர்ந்தாலும் அவரின் உடலில் உயிர் தங்காது" என்பதுதான் அது. இதை அறிந்த கைகேயி தான் பெற்ற மகன் பரதன் உயிர் துறந்தாலும் பரவாயில்லை, தன் கண்ணுக்குக் கண்ணாக, தன் உயிராக, வளர்த்த மகன் இராமன் இறக்கக் கூடாது என்று தசரதனிடம், "இராமர் 14 வருடம் காட்டுக்குச் செல்லவும், பரதன் நாட்டை ஆள வேண்டும்" என்றும் வரம் வேண்டினாள்.

கைகேயியின் நல்ல குணமே அவள் பெற்ற மகனான பரதனையும் காப்பாற்றிற்று. பரதன் தான் ஆட்சி செய்யாமல் இராமரின் பாதுகையை அரியணையில் ஏற்றி, தான்அதன் பிரதி நிதியாக இருந்து வந்தான். உயிரில்லாத மரப்பாதுகையால் அயோத்தி நாட்டில் உயிர்ச் சேதம் ஏதும் ஏற்படவில்லை. சாபமும் பலிக்கவில்லை. விதியைத் தன் மதியால் கைகேயி மாற்றி வென்றாள்.

ஆதிசங்கரர் குளத்தில் குளித்துக் கொண்டிருந்தார். அப்போது, குளத்திலுள்ள முதலை சங்கரரின் பாதத்தைக் கௌவியது. சங்கரர் தன் தாயிடம், "தன்னைத் துறவியாக மாறச் சம்மதம் என்று தெரிவித்தால் விதி மாறி உயிர் பிழைப்பேன்" என்றார். அவ்வாறே சங்கரரின் தாய், இறைவனை மனதில் வேண்டிச் சத்தியம் செய்தாள். முதலையும் சங்கரரின். காலை விடுவித்தது. சங்கரர் சிறுவயதிலேயே துறவியானார். இறப்பைத் தம் மதியின் மூலம் வென்றார்.

மார்க்கண்டேயர் ஜாதகரீதியாக 16, வயதுவரைதான் இருப்பார் என்று அறிந்து, நமன்(யமன்) வரும்போது சிவனின் பாதம் பற்றி, உயிர் மீண்டார். ஒருவருக்கு மரணம் ஏற்பட இருந்தாலும், கஷ்டங்கள் ஏற்பட்டு இருப்பினும், அதிலிருந்து மீளமுடியும் என்ற விதி இருந்தால், 'மதிகொண்டு தன்னை மீட்டுக் கொள்ளலாம்' என்று இக்கதையின் மூலம் அறிய முடிகிறது.

உயிர் என்பது விதி, உடல் என்பது மதி. பிறவி ஊமை, பிறவிச் செவிடு என்ற விதியை, அவர்கள் தம் மதியால் வெல்லலாம், எப்படியெனில்? ஊமையாய் இருப்பவர் நடனமும், ஓவியம், கவிதை, கட்டுரை புனைதல் என்று பல தொழில்கள் மூலமும், பிறவிச் செவிடைக் கொண்டவர் ஓவியம், மற்றும் அதற்கேற்பப் பல தொழில்களில் மேன்மையுற்றுப் புகழ் பெறலாம். 'முயன்றால் முடியாதது, ஏதுமில்லை.' இதை மனதில் வைத்துக் கொண்டால், வாழ்க்கையில் வெற்றி பெறலாம்.

சாரீரத்தின் வழியே விதி வரும் என்று பல இடங்களில் சிலப்பதிகாரம் சொல்லி இருக்கின்றது.

*''விதி செய்யும் வினை யினுக்கே அங்கு*
*வேறு செய்வார் புவி மீது உளரோ''*

என்று, திருதராஷ்டிரர் பாண்டவர்கள்பட்ட கஷ்டங்களுக்கு, அவர்களது தலைவிதிதான் காரணமேயன்றி தன் மைந்தர்கள் காரணம் இல்லை, என்று விதுரரிடம் கூறி, உலகின் குற்றச் சாட்டிலிருந்து தப்ப முயற்சி செய்தார்.

'விதியை மதியால் மாற்ற முடியும்' என்றாலும் சாகாக் கலையைச் சித்தர்கள் அறிந்திருந்தாலும், சித்தர்கள் கடவுளின் கட்டளைக்கு உட்பட்டே நடந்து கொள்வார்கள். நவக்கிரகக் கோள்களினால் ஒருவருக்குத் தீமை ஏற்படும்பட்சத்தில், அதை நீக்கவோ, அதன் கடுமையைக் குறைக்கவோ, வழி என்ற விதி இருந்தால் மட்டிலும், சித்தர்கள் நமக்கு உதவுவார்கள்.

திருமணம் ஆன ஒரு பெண்ணின் கணவன் இறந்து விட்டான். அப்பெண் அழும் கண்ணீரை நீக்க, சம்பந்தர் இரக்கப் பட்டுத் தம்பக்தியால் அந்தப் பெண்ணை வாழ வைத்தார். அவளின் கணவன் உயிர் மீளும் விதி இருந்த காரணத்தால் அவ்வாறு மீட்க முடிந்தது. திருஞானசம்பந்தர், ஒரு வீட்டிற்குச் சென்றபோது, ஒரு பானையில் குழந்தையின் எலும்பும், சாம்பலும் இருந்தன. அதைப் பெற்றோர்கள் பத்திரமாகக் காத்து வந்தனர். அதை ஞானசம்பந்தரிடம் காட்டி, ''எங்களின் ஒரே பெண்ணின் உயிரை மீட்டுத்தாருங்கள்,'' என்று வேண்டினர்.

சம்பந்தரும் இறைவனை வேண்ட, அந்தப் பெண் திருமண வயதில் உள்ள பெண்ணாகத் தேவலோகத்திலிருந்து வந்தாள்.

அவளே பூம்பாவை, பூம்பாவையின் பெற்றோர் ஞான சம்பந்தரைத் தன் மகளை மனையாளாக ஏற்றுக் கொள்ளுமாறு வேண்ட, உயிர் கொடுத்த தாம் அவளுக்குத் தந்தையைப் போன்றவன். நல்ல கணவனாக அவளுக்கு அமைத்துக் கொடுங்கள்'' என்று கூறிச் சென்றார். இவ்வாறு உயிர் மீளவும், துன்பம் குறையவும் விதி இருந்தால், சித்தர்களும், ரிஷிகளும் நமக்கு உதவுவார்கள்.

ஒருவன் முற்பிறவியிலோ, இப்பிறவியிலோ செய்த பாவங்களும், அதர்ம வழி நடந்து மற்றவர்களை அழித்தும், கொடுமைகளைச் செய்பவர்கள், கண்டிப்பாக அவனுக்கு வரும் துன்பங்களை அவன் ஏற்கத்தான் வேண்டும். உதாரணமாக, இரணியன், கம்சன், இராவணன், துரியோதனன் ஆகியோரைக் கூறலாம்.

''பாவிகளுக்கு ஆண்டவனும் உதவ மாட்டான், சித்தர் களும் உதவமாட்டார்கள்!''

தசரதருக்கு ஆயிரம் மனைவிகள்! அவர்கள் மகனாகிய இராமருக்கு, ஒரே ஒரு மனைவி! அதுவும் மனைவியை, அவர் பல ஆண்டுகள் பிரிந்து வாழ்ந்தார்! அயோத்திக்குக் கூட்டி வந்ததும் சீதையுடன் இராமன் வாழவும் இல்லை. ஒரு துணி துவைப்பவனின் பேச்சினால் சீதாவை ஆஸ்ரமத்திற்கு அனுப்பி விட்டார். அவள் அங்குப் பூமியில் புதையுண்டாள்'' என்று இராமாயணத்தின் மூலம் அறிய முடிகிறது. 'தகப்பனார் செய்த பாவம் குழந்தைகளை வந்த அடையும்' என்பதற்கு இது ஒரு நல்ல உதாரணமாக அமைகிறது.

நவக்கிரகங்களால் கடவுள்களும், ரிஷிகளும், அரசர்களும் பாதிப்புக்குள்ளாகி உள்ளார்கள். கிரகங்களின் தன்மையையும் அதனால் பாதிக்கப்பட்ட இறைவனையும் காண்போம். உதாரணமாகச் சிவன் பிச்சை எடுப்பதைச் சொல்லலாம்.

நமது பிறப்பும், இறப்பும் முற்பிறவியும் மறுபிறவியும் ஆக எல்லாமே இறைவன் கையில்தான் உள்ளன. அதைத் தற்போது விஞ்ஞானிகள், ''விண்வெளியில் பதிவுகள் பதிந்து உள்ளன'' என்று கண்டுபிடித்துள்ளனர். மண்டை ஓட்டின் முன்புறம் ஏதோ எழுத்து உள்ளது என்று விஞ்ஞானிகள் கூறுகிறார்கள். இதைத்தான் நாம் சாதாரணமாக 'தலை எழுத்து' என்று கூறுவோம்.

'இட்டமுடன் என் தலையில்
இன்னபடி என்றெழுதி விட்ட சிவன்'

என்று பாடல் கூறுகிறது,

'எல்லாம் விதி' என்றும் 'தலைஎழுத்து என்றும் கூறுகிறோம். நம் வாழ்க்கையை நம் கைரேகையை வைத்துக் கூறுவார்கள், உண்மையாய் இருப்பின் நம் வாழ்வில் அப்படியே நடந்து இருக்கும். கைரேகை சம்பந்தமாகச் சப்தரிஷிநாடியில், பல புத்தகங்கள் வெளியிட்டு உள்ளார்கள்.

''விண்ணில், அதாவது பிரபஞ்சத்தில் முன்னமே நமது பல பிறவிகள் பதிவாகி உள்ளன என்றும், பாவ புண்ணியங் களுக்கேற்ப நாம் மனிதனாகப் பிறக்கின்றோம்'' என்றும், பல புராணங்கள் கூறுகின்றன. ''முற் பிறவியில் செய்த பாவ புண்ணி யங்களுக்கு ஏற்ப, இப்பிறவியில் செல்வந்தனாகவோ, ஏழை யாகவோ, இன்பமோ, துன்பமோ அடைகின்றோம்'' என்றும் கூறுகிறது நம் மதம். அதைத்தான் நம் முன்னோர்கள் 'கர்ம வினை' என்றும் கூறுகின்றனர்.

நம் மதம்தான் இக்கருத்தை அழுத்தம், திருத்தமாகச் சொல்கிறது. மனிதனுக்குக் கர்மா தீரும்வரை பல பிறவிகள் உண்டு. நல்லது செய்தால் நல்லது நடக்கும். கெட்டது செய்தால் கெட்டதுதான் நடக்கும். அதனால், நல்லதை நினை, நல்லதைப் பேசு, நல்லதைச் செய், என்று நம்மைக் கண்டித்தும், மிரட்டியும், பயமுறுத்தியும் வைக்கிறது நம் மதத்தின் கருத்துக்கள். இதனால்தான், இன்றளவிலும் தர்மமும், பண்பும் நம்மிடம் இருந்து வருகின்றன!

அபிராமி பட்டர் கோவிலுக்குச் சென்று தம்மை மறந்து அம்பிகை அபிராமியை வணங்கிக் கொண்டிருந்தார்; தியானத்தில் மூழ்கிக் கொண்டிருந்தார். அப்போது அரசன் கோபமுற்று, ''இன்று என்ன நாள்?'' என்று கேட்கிறான் அதற்கு அபிராமி பட்டர், ''பௌர்ணமி'' என்று கூறுகிறார்.

அரசன் திகைக்கிறான்! ஏன்? எனில் அன்று 'அமாவாசை நாள்' ஆகும். மன்னன் அபிராமிபட்டரிடம், ''இன்று முழு நிலவு தெரியுமா?'' என்று கேட்க, அதற்கு அபிராமிபட்டர், ''தெரியும்'' என்று கூறுகின்றார். ''அவ்வாறு தெரியவில்லை என்றால் உனக்கு மரண தண்டனை அளிக்கப்படும்'' என்று கூறிக் கோபமுடன் அரசன் சென்று விடுகிறான்.

மாலையில் சபை கூடுகிறது. நடுவில் அபிராமிபட்டர்! எல்லோரும் அமாவாசை நாளில் பௌர்ணமி நிலவாகிய முழு நிலவை எதிர்நோக்கியபோது அரசன் அபிராமி பட்டரிடம், ''பட்டரே உன் தவற்றை உணர்ந்து மன்னிப்புக் கேட்டால் விடுவித்து விடுகிறேன் என்று கூறினார்.

அதற்கு அபிராமிபட்டர், என் தாய் என்னைக் காப்பாள்'' என்று கூற அன்னையின் அருளால் முழு நிலவு அனைவருக்கும் தெரிகிறது! மன்னரும், சபையோரும், மக்களும் அதிசயித்து அபிராமி பட்டரையும் அன்னையின் தெய்வ சக்தியையும் அறிகின்றனர். இதிலிருந்து தெய்வம் நினைத்தால் விதியையே மாற்றலாம்' என்றும் அறிய முடிகிறது.

மதுரையில் வீரபாண்டியன் ஆட்சி செய்து வந்தபோது ஊழ்வினையால், இரண்டு கண்களும் ஒளியிழக்க நேரிட்டன. உடனே, வீரபாணடிய மன்னன் வேண்டாத தெய்வங்கள் இல்லை. கனவில் இறையனார் தோன்றி, ''ஸ்ரீகௌமாரியை வணங்கினால் கண் தெரியும்'' என்று கூற, மன்னனும் அவ்வாறே வணங்கினான்.. ஒரு கண் தெரிந்தது. இன்னொரு கண் தெரிய ஸ்ரீகௌமாரி திருக்கண்ணீசுவரரைத் தொழச் சொல்கிறாள். மன்னரும் அவ்வாறே வணங்க, அடுத்த கண்ணும் தெரிகிறது!

'கண் பெற்ற மன்னன், கண்ணீசுவரருக்குக் கற்கோவில் அமைத்து, ஆலய வளர்ச்சிக்கு ஆவன செய்து, வழிபட்டான்' என்று அக் கோவில் மதிற்சுவரில் உள்ள கல்வெட்டில் காணப் படுகிறது.

இராமன், வனவாசத்தை ஏற்றுக்கொண்டு, பெற்றோரும் சம்மதிக்க இலக்குவன் தாயிடமும் தந்தையிடமும் வெகுண்டான், அதற்குத் தசரதன்.

''நதியின் பிழையன்று நறும்புன லின்மை அற்றே
பதியின் பிழையன்று பயந்து நமைப் புரந்தான்
மதியின் பிழையன்று, மகன் பிழையன்று, மைந்த!
விதியின் பிழை நீ எதற்கு என்னை வெகுண்ட'' தென்றான்.

''எனக்கேற்பட்ட விதியால்தான் இராமனை நான் பிரிகிறேன் என்று தசரதன் இலக்குவனிடம் கூறுகிறான்.

மரணம் எல்லாருக்கும் பொதுவாக நேரக்கூடிய ஒன்று. மரணத்தை வெல்ல வேண்டிய அசுரர்களும் அரசர்களும் தவம் செய்து வேண்டுவார்கள். பிரபஞ்சத்தின் விதிக்குத் தெய்வங் களும் கட்டுப்பட்டவர்கள். அதனால், ''இந்த வரத்தைத் தர இயலாது வேறு வரத்தைக் கேளுங்கள்'' என்று கூறினாலும் வேறு முறையில் விசித்திரமாக அசுரர்களும் கேட்க, கேட்ட வரத்தைத் தந்து விட்டு, நரசிம்மர், மகிஷாசுரமர்த்தினி, வாமனர், மோகினி போன்ற அவதாரங்களை எடுத்து, இறைவனும், இறைவியும் அசுரர்களை அழித்தனர்.

'மச்ச அவதாரம், கூர்ம அவதாரம், வாமன அவதாரம், நரசிம்ம அவதாரம், பரசுராம அவதாரம், இராமர் அவதாரம், கிருஷ்ணர் போன்ற தச அவதாரங்கள்' பூமியில் தோன்றிய பரிணாம வளர்ச்சியையும் அக்கால நாகரிகத்தையும் விளக்குகிறது.

பிற்காலத்தில், இவற்றை தமது சந்ததியர்கள், அறிந்து கொள்ளக் கல்வெட்டுகளில் உருவங்களாகச் செதுக்கி வைத்தனர்.

அதனால், நாம் இன்றும் பல விசயங்களை ஆராய்ச்சி மூலமாக அறிந்து கொள்ள முடிகிறது.

மகாபாரதத்தில் துரியோதனன், தருமரைச் சூதாட அழைத்து வருமாறு விதுரரிடம் சொல்கிறான், ''அது தர்மம் ஆகாது'' என்று விதுரர் துரியோதனனிடம் எடுத்துக் கூறுகின்றார். அதற்குத் துரியோதனன்.

*''நன்றி கெட்ட விதுரா! சிறிதும் நாணமற்ற விதுரா!*
*தின்ற உப்பினுக்கே நாசம் தேடுகின்ற விதுரா!*
*ஐவர் பக்கம் நின்று எங்கள் அழிவைத் தேடுகின்றாய்!*
*இன்பம் எங்கணுண்டோ அங்கே ஏகிடு!''*

என்று உரைத்தான். அதன் பின்னும் விதுரர்,

*''விதி வழி நன்கு உணர்த்திடினும் பேதையேன் யான்*
*வெள்ளை மனம் உடைமையினால் மகனே! நின்றேன்*
*சதிவழியைத் தடுத்துரைகள் சொல்லப் போற்றேன்*
*சரிசரி இங்கு எதுரைத்தும் பயனொன்றில்லை,*
*மதிவழியே செல்லுக!''*

என்று, 'விதுரன் கூறி, வாய் மூடித் தலை குனிந்து, இருக்கை கொண்டான்' என்று பாஞ்சாலி சபதத்தினால் அறிய முடிகிறது. விதியானது, ஒருவரை மதிகொண்டே நல்லதையும் கெட்டதையும் செய்யக்கூடியது.

விதியின் நாயகனான சனிபகவான், கடவுள், மனிதன் என்று பாகுபாடில்லாமல் தன் தொழிலைச் செய்து வந்தான். சர்வேஸ்வரரைப் பிடிக்க வரும்போது, ''உலகை ஆளும் என்னையா சனி பிடிப்பது!'' என்று எண்ணி ஓர் ஆலமரத்தில் கொஞ்ச நேரம் ஒளிந்திருந்தார். நாரதர் அவ்வழியே செல்லும் போது குரல் கேட்டு, ஆலமரத்தில் வந்து பார்த்தார்.அங்கு ஈஸ்வரன் ஒளிந்து இருப்பதைக் கண்டு விபரம் அறிந்தார்.

''எல்லாம் அறிந்த தாங்களே சனியிடம் ஏமாந்து விட்டீர்கள்'' என்றார். சிந்தித்த சிவபெருமான் விதியைப்

படைத்த தானும் அதற்குக் கட்டுப்பட்டுத்தான் ஆகவேண்டும் என்று புரிந்து கொண்டார்.

''சிவபெருமான், சர்வேஸ்வரனே ஆனாலும் விதிக்குக் கட்டுப்பட்டவனே என்பதை உலகிற்கு இந்தச் சம்பவம் உணர்த்தும், 'சனி பகவான் கெடுதல் செய்பவன் அல்லன். கடமையைச் செய்பவன் என்பதை அனைவரும் புரிந்து கொள்ளட்டும். இன்று முதல் நீ வெறும் சனியல்ல, சனீஸ்வரன்! என்ற பெயருடன் அழைக்கப்படுவாய்!'' என்று ஈஸ்வரன் வரம் அளித்தார், இச்சம்பவத்தால் விதியின் தன்மை எப்படி பட்டது என்று நாம் உணர வேண்டும். விதியை மதிஅறிவு கொண்டு வெல்லலாம், இல்லையேல் விதி எவ்வழியோ அவ்வழியே சென்று நல்லதோ, கெட்டதோ அனுபவித்துத்தான் ஆகவேண்டும்.

கடவுள் நம்பிக்கையோடு நம் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டால், 'தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போயிற்று' என்பதுபோல், விதியின் கடுமை சிறிது குறைந்து வாழலாம். விதியை வெல்லவோ, கடுமையைக் குறைக்கவோ, கடவுள் அருள் கண்டிப்பாக நமக்கு வேண்டும்.

# 11. அன்றைய விஞ்ஞானமும் இன்றைய விஞ்ஞானமும்

நம் நாட்டிலுள்ள புராணங்களும் இதிகாசங்களும் நமக்குப் பலதரப்பட்ட விதத்தில் பல செய்திகளையும் அன்றைய விஞ்ஞானச் செயல்களையும் நல்ல பண்பாடுகளையும் நாகரிகத்தையும் நமக்குப் போதிக்கின்றன.

நாரதர் நாராயணருக்குச் சொல்வதுபோல் 'தேவிபாகவதத்தில்' வருவது யாதெனில், தூரத்தைப் பண்டைப் காலத்தில் 'யோசனை' என்று கூறுவார்கள் என்பதை அறிய முடிகிறது. போர் ஏற்பட்டபோது 'தான் இறந்து விடுவோம்' எங்கு சென்றாலும் விடாது துரத்திச் சென்று தாக்கும் இராக்கெட்டுகள் என்று கிரகங்களைப் பற்றியும் பூமியைப் பற்றியும் புராணங்களிலும் தேவிபாகவதத்திலும் வியாசர் கூறும் போது, "ஜம்புத்வீபம், லக்ஷம் யோசனை, பரப்புள்ளது. இதில் ஒன்பதாயிரம் உயரமுள்ள மேருமலை எனப்படும் பொன்மய மலை இருக்கின்றது" என்றும் கூறுகின்றார்.

மேலும், "சூரியனின் ஒளியால் சந்திரன் ஒளி பெற்றுச் சூரியனுக்கு இலட்சம் யோசனையளவு உயரத்தில் இருந்து கொண்டு, சூரியனுடைய ஒரு வருசப் பலனை, இரண்டு பக்ஷங் கூடிய ஒரு மாதத்தில் தருகிறான்" என்றும் தேவி பாகவத்தில் கூறுகின்றது.

மேலும் சந்திர மண்டலத்திற்கு மேலே சுக்கிர மண்டலம் சூரியனுக்கு இரண்டு லக்ஷம் யோசனை தூரத்தில் இருக்கின்றது என்றும், இதற்கு மேல் புதன் கிரகம் இரண்டு லக்ஷம் யோசனை உயரத்தில் உள்ளது என்றும், புதனுக்கு மேல்

இரண்டு லக்ஷம் உயரத்தில் அங்காரகன் அதாவது செவ்வாய் கிரகம் இருக்கின்றது என்றும் அதற்கு மேல் இரண்டு லக்ஷம் யோசனை தூரத்தில் குரு என்கின்ற கிரகம் உள்ளது என்றும் , குருவுக்கு மேல் சனி கிரகம் இருப்பதாகவும் அதற்கு மேல் பதினாறு லக்ஷம் யோசனை உயரத்தில் சப்த ரிஷி மண்டலம் உள்ளது என்றும் தேவிபாக வதத்தில் கூறப்பட்டுள்ளது. இதைப் படித்து அறியும்போது எவ்வாறு பல்லாயிரம் ஆண்டு களுக்கு முன்பே கிரகங்களையும் அவை இருக்கும் தூரங்களை யும் அக்கிரகங்களினால் பூமிக்கும் மனிதருக்கும் நன்மை தீமை ஏற்படுகின்றது என்று எப்படி உணர்ந்து சொன்னார்களோ என்று பெரும் திகைப்பு ஏற்படுகின்றது.

ஒளி வருடம் என்பது வாய்ந்த டிரான்ஸ்மீட்டர்கள் 1 விநாடிக்கு 1 லட்சத்து 36,000 மைல்கள் செல்லும் சக்தி கொண்டது. இந்தக் கணக்குப்படி 1 வருடத்திற்கு எவ்வளவு தூரம் செல்லுமோ அதுவே ஓர் ஒளி வருடம் ஆகும் என்று இன்றைய விஞ்ஞானிகள் கண்டு பிடித்து உள்ளனர்.

சமீபகாலத்தில் பூமியிலிருந்து சூரியன் 9 கோடி மைல், புதன் 3 கோடி மைல், சுக்கிரன் 6 கோடி மைல் என்றும், சந்திரன் 2 லட்சத்து 40 ஆயிரம் மைல் தூரத்தில் உள்ளது என்றும், செவ்வாய் 14 கோடி மைல் என்றும், குரு 48 கோடி மைல், சனி 88 கோடி மைல் என்றும் கண்டு பிடித்து உள்ளார்கள்.

தேவி பாகவதத்திலேயே சூரியன் மஞ்சள் நிறம், புதன் பச்சை நிறம், சந்திரன் வெண்மை நிறம், சுக்கிரன் வெண்மை நிறம், செவ்வாய்க் கிரகம் சிவப்பு நிறம், குரு கிரகம் மஞ்சள் நிறம், சனிக் கிரகம் கறுப்பு என்று கூறியுள்ளதை இன்றைய ஆராய்ச்சியாளர்கள் உண்மை என்று கண்டுபிடித்து உள்ளனர்.

**விமானம்** : "சேது தேசத்தில் உபரிசரன் என்ற அரசன் ஒருவன் சத்திய சீலனாகவும், தர்மசீலனாகவும் விளங்கி வந்தான். அவன் இந்திரனை நோக்கித் தவம் செய்தான். அவனது

தவத்திற்கு மகிழ்ந்து, இந்திரன் உபரிசரனுக்கு ஒரு ஸ்படிக மயமான பளிங்கு விமானத்தை அளித்து ஆசி கூறினான். என்கிறது தேவி பாகவதம்.

சீதையை, இராவணன் ஆகாய மார்க்கமாக, விமானத்தில் தூக்கிச் சென்றான் என்றும் சீதை தான்சென்ற வழி இராமருக்குத் தெரிய வேண்டித் தன்னிடமுள்ள நகைகளை ஒவ்வொன்றாகக் கீழே எறிந்தாள் என்று கருடனாகிய ஜடாயு இராமரிடத்தில் கூறியதாக இராமாயணத்தில் உள்ளது.

''உதயணன் தன் நாட்டில் போர் ஏற்படுமென அறிந்து தன் கர்ப்பவதியான மனைவியாவது பிழைத்துக் கொள்ளட்டும் என்று மயிற்பொறியில் ஏற்றி, அது இயங்கும் விதமும் சொல்லித் தந்து அனுப்பினான். அதுபோலவே, அவளும் தப்பித்து வருகையில், ஒரு காட்டின் வழியே வரும்போது, வலி கண்டு, மயிற்பொறியை இறக்கி, குழந்தை ஈன்றாள் என்றும் அக்குழந்தையே நன்கு வளர்ந்து மீண்டும் போரிட்டு ஆட்சியைப் பிடித்தது'' என்றுச் சீவகசிந்தாமணி கூறுகிறது. அக்கால வான ஊர்தியில் செல்லும்போது குறிப்பிட்ட உயரம் வரைதான் செல்ல முடிந்தது. உள்ளே இருப்பவர்களை வெளியே இருப்பவரும் வெளியே இருப்பவரை உள்ளே இருப்பவரும் காண முடிந்தது.

காலப் போக்கில் இதெல்லாம் அழிந்து பல ஆயிரம் ஆண்டுகள் ஆனபின்னும் இந்த வானஊர்தியைப்பற்றிக் கேள்வி பட்ட பலர், பல முயற்சிகள் செய்து தோல்வி அடைந்தனர். பல நூற்றாண்டுகளுக்கு முன், மனிதன், பறவை பறப்பதைக் கண்டு தானும் அதுபோலப் பறக்கப் பல முயற்சிகள் செய்து பார்த்தான். பறவையின் இறக்கையைத் தம் உடம்பில் கட்டிப் பறந்து பார்த்தான். மலையின் உச்சிக்குச் சென்று பறவையைப் போல் கையை அசைத்து பார்த்தனர். கொஞ்சம் கொஞ்சமாக முயற்சியும், ஆராய்ச்சியும் செய்து, ரைட் சகோதரர்கள் விமானத்தைக் கண்டு பிடித்தனர். பல வடிவங்களிலும், பல வேகங்களிலும் செய்து தற்போது இராக்கெட் செய்து விண்வெளிக்கு அனுப்பி, ஆராய்ச்சிகள் செய்து, சந்திர

மண்டலத்திற்குச் சென்று ஆராய்ச்சிகளில் வெற்றி வாகை சூடி, மேலும் கிரகங்களையும் ஆராய்ந்து வரும் அளவில் முன்னேற்றம் அடைந்துள்ளோம்.

பல கோள்களின் தன்மையும் சூரியக் குடும்பத்திற்கு அப்பாலும் உள்ள பல வினோதக் கோள்களையும் இன்றளவிலும் கண்டுபிடித்து இன்னும் ஆராய்ச்சிகளை நம் விஞ்ஞானிகள் மேற்கொண்டு வருகின்றனர்.

நாரதர், பிரம்மாவிடம், ''பிரம்மா, விஷ்ணு, சிவன் மூவரையும் படைத்தது யார்?'' என்று வினவ, தேவி பரா சக்தியைப் பற்றி விவரித்துக் கூறுகிறார். ''எங்களை மட்டு மல்லாது சகல பிரபஞ்சங்களையும் படைத்து, அதில் பல லோகங்களையும் உண்டாக்கியவள் ஆதிபாரசக்தி'' என்று கூறுகிறார்.

''நாங்கள் தாம் மும்மூர்த்திகள் என்று நினைத்திருந்த போது, மூன்று லோகங்களிலும் எங்களைப் போல் வேறு வேறு மூர்த்திகளையும், தேவியானவள் விமானத்தில் ஏற்றி, தன் சக்தியால் இயக்கி எங்களுக்குக் காட்டினாள்'' என்று பிரம்மா நாரதரிடம் கூறினார்.

இன்றைய விஞ்ஞானிகள், ''நம் சூரியக் குடும்பத்தைப் போன்று இன்னும் பல சூரியக் குடும்பங்கள் பிரபஞ்சத்தில் இருக்கின்றன'' என்று ஆராய்ச்சிகள் செய்து கூறியுள்ளனர்.

'ஹெர்குலஸ்' என்கின்ற நட்சத்திரக் கூட்டங்களில் அரை மில்லியன் நட்சத்திரங்கள் உள்ளன. எனக் கண்டுபிடித்து உள்ளனர். 'கேலக்ஸி' என்று கூறப்படும் இலட்சக்கணக்கான சூரியன்களில் பல குடும்பங்கள் உள்ளன. என்றும் இன்றைய அறிஞர்கள் கண்டுபிடித்துள்ளனர்.

''புராணத்தில் துருவன் என்ற சிறுவன் வாழ்க்கையில் வெறுப்புற்று, இறைவனை வேண்டித் தவம் செய்து, துருவ நட்சத்திரமாகத் திகழ வேண்டும் என்று கேட்டுக் கொண்ட திற்கிணங்க இன்றும் துருவ நட்சத்திரமாக உள்ளான்'' என்கிறது புராணம்.

விஞ்ஞானிகள் துருவ நட்சத்திரம் பிரகாசிப்பதை ஏற்றுக் கொண்டனர். அக்கால மாலுமிகளும் வழி போக்கர்களும் அரசர்களும் துருவ நட்சத்திரத்தை வைத்து தான் வழியை ஏற்படுத்திக் கொண்டு போக்குவரத்திற்குப் பயன்படுத்தி வந்தனர்.

இதேபோல்தான் சப்த ரிஷி மண்டலம், அருந்ததி நட்சத்திரம் போன்றவை நம் புராணங்களில் இருந்தாலும் இன்றைய விஞ்ஞானிகளால் அவை ஏற்றுக்கொள்ளப்பட்டு இருக்கின்றன.

மேலும் அக்காலத்திலேயே நட்சத்திரங்களின் தன்மையை யும், வழியையும் அறிந்து, ரிஷபம், கடகம், அஸ்வினி, தராசு, வில், என்று பிரித்து, அதை இராசியாக்கி, அந்த இராசிக்குரிய நட்சத்திரங்களுக்குப் பெயரிட்டு, அந்த நட்சத்திரங்களுக்கும் மனிதர்களுக்கும் சம்பந்தம் உண்டு என்றும், வானிலுள்ள கோள் களாலும் நட்சத்திர கூட்டத்தாலும் மனிதனுக்குச் சாதகமும் பாதகமும் ஏற்படுகின்றது எனச் சித்தர்களும் ரிஷிகளும் கூறினார்கள். அதை இன்றைய அறிவியலும் ஏற்றுக் கொள்கிறது.

குழந்தை இல்லாதவர்களுக்குக் குழந்தை பெற நம் புராணங்கள் பல கதைகளைக் கூறுகின்றது. ''குந்திதேவி தன் கணவன் பாண்டுவால் குழந்தை பெற இயலாது என்று பஞ்ச பூதங்களின் அதிபதிகளை தன் மந்திரத்தால் வரவழைத்து, குழந்தையை அடைந்தாள்'' என்கிறது மகாபாரதம்.

அடுத்து, உபரிசரன் மன்னன் காட்டில் வேட்டையாடச் சென்று அங்குத் தங்கியிருக்கும்போது தன் மனைவியின் நினைவால் தன் இந்திரியம் தானாக வெளியாயிற்று. அதை ஓர் ஆல இலையில் பிடித்து, அங்குள்ள கழுகை நோக்கி, ''பக்ஷிராஜனே! எனக்கு ஓர் உபாகாரம் செய்ய வேண்டும். இந்த வீரியத்தை எடுத்துக்கொண்டு என் அரண்மனையிலுள்ள 'கிரிகா' என்னும் என் மனைவியிடத்தில் சேர்த்துவிடு'' என்று தொன்னையில் கொடுத்தான்.

''கழுகு அதைத் தன் அலகால் கௌவி அதிவேகமாகச் சென்றது, மற்றொரு கழுகு அதை 'மாமிச துண்டம்' என்று விரட்டியது. இரண்டு கழுகுகளும் சண்டையிட்டதில், தொன்னை கீழே பெரு வெள்ளமாக ஓடிக் கொண்டிருக்கும் யமுனை நதியில் வீழ்ந்தது. அதை நதியில் இருக்கும் ஒரு மீன் விழுங்கியது. மீன் கர்ப்பம் எய்தியது. வலைஞனிடம் அந்த மீன் சிக்க, அவன் மீனின் வயிற்றைப் பிளக்க ஓர் ஆண் குழந்தையையும் ஒரு பெண் குழந்தையையும் கண்டான். உபரிசரமன்னனிடம் வலைஞன் அவர்களைச் சேர்ப்பித்தான். அரசன் ஆண் மகனை மட்டும் எடுத்துக் கொண்டு, பெண்ணை வலைஞனிடம் கொடுத்துவிட்டான். அவள்தான் மச்சகந்தி!''

**மற்றொரு கதை :** ''குந்திதேவி ஐந்து பிள்ளைகளைப் பெற்றாள் என்று கேள்விப் பட்டாள் காந்தாரி பத்து மாதம் தாண்டியும் இன்னும் வெளிவராத கர்ப்பத்தைக் கோபம் கொண்டு உலக்கையால் தன் வயிற்றில் அடித்தாள். வசிட்டர் இதை அறிந்து, சிதறிய உதிரத்தை நூற்று ஒரு பானையில் பிடித்து, பதம் செய்து, 100 ஆண் குழந்தைகளும் ஒரு பெண் குழந்தையு மாகப் பிறந்தனர்'' என்று மகாபாரதம் கூறுகிறது.

மேலும், ''பட்டினத்தார் திருவண்ணாமலைக்கு எழுந்து அருளிய போது, கரும வசத்தால் கோவில் தாசியைக் கண்டு மோகித்தார். அந்தத் தாசி இந்த விசயத்தைத் தன் தாயிடம் கூற, அவள் மகளை அழைத்து வருமுன், சுவாமிகள் தன் வீரியத்தை அரச இலையில் வைத்து அவளது வரவறிந்து உன்னை நினைத்தவன் இந்த இலையில் இருக்கின்றான்'' என்று கூறி மறைந்தார். அந்தத் தாசிக்கு முனிவரின் வீரியத்தை அல்லித் தண்டின் மூலமாகச் செலுத்தி அவள் கருவுற்று அருணகிரிநாதர் பிறந்தார்'' என்பது வரலாறு.

தற்போது விஞ்ஞானிகள் ''சோதனைக்குழாய்'' முறையில் விந்துக்களைச் சேமித்துப் பெண்ணின் கருமுட்டையோடு சேர்த்து வளர்த்து பெண்ணின் வயிற்றில் சேர்த்து, குழந்தை களைப் பெறச் செய்கின்றனர்.

புராண காலத்தில் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் யுத்தம் நடைபெற்று வந்தது. அசுரர்கள் உயிரை விட்டாலும், உடனே உயிர் பிழைத்துவந்து திரும்பவும் யுத்தம் புரிவார்கள். தேவர் களின் உயிர்ச்சேதம் அதிகம் ஏற்பட்டது. அசுரர்கள் திரும்பவும் உயிர் பிழைத்து வருவதை அறிந்து, தேவர்கள் இறைவனிடம் சென்று முறையிடும்போது,

இறைவன் கடலில் ஆமையின்மேல் மந்தார மலையை நிறுத்தி, கடலைக் கடையுமாறு உத்தரவிட்டார். ஒரு புறம் தேவர்களும் மறுபுறம் அசுரர்களும் கடைந்தனர். அப்போது, கற்பக மரம், காமதேனுப் பசு, மகாலஷ்மி, ஐராவதம் என்கின்ற வெள்ளை நிற யானையும் முடிவில் அமிர்தமும் வந்தன என்று புராணக் கதைகள் கூறுகின்றன. அந்த மந்தார மலைதான் தற்போது உள்ள 'இமயமலை' என்று ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர்.

''ஆராய்ச்சியாளர்களும் இமயமலை இருந்த இடம் முன்னொரு காலத்தில் கடல் இருந்த இடம் என்றும், பூமி நகர்ந்து செல்வதால் இமயமலை தோன்றியது என்றும் இமயமலையின் அடிவாரத்தில் மீன், சிப்பிகள் மற்றும் கடல் வாழ்பிராணிகளின் படிவங்கள் படிந்துள்ளன'' என்றும் ஆராய்ந்து கூறியுள்ளனர்.

நன்கு சிந்தித்து ஆராயும்போது, பூமி நகர்ந்து இமயமலை உண்டான பின், அதன் பாதிப்பால் மக்கள் இடம் மாறி வருவதால், அவர்கள் கொண்டு வந்த பொருட்கள், நாகரீகங்கள் மற்ற இடங்களுக்கும் பரவின என்றுதான் எண்ண வேண்டும்.

''கிருஷ்ண அவதாரத்தில் யமுனா நதியின் கார்க் கோடகன் என்ற ஐந்து தலைப் பாம்பை அடக்கி, நர்த்தனம் ஆடினான்'' என்று அறியப்படுகிறது.

''தற்போது ஐந்து தலை இல்லையென்றாலும், மலைப் பாம்பு என்றும், ''அனகொண்டா'' என்றும் பெரிய பெரிய பாம்புகள் உள்ளன'' என்றும் அறிய முடிகிறது.

''அமேசான் காடுகளில்,' அண்மைச் செய்திகளில், ஒரு குழந்தையைத் தாங்கும் அளவில் ஓர் இலை உள்ளது'' என்று அறிய முடிகிறது.

''இதையே, அக்காலத்தில் நீரில் முழுவதும் உலகம் அழியும் சமயம், கண்ணன் குழந்தையாக ஆலிலையில் நீரில் மிதந்து வந்தான்'' என்று புராணங்கள் கூறுகின்றது.

புராணக் கதைகளில் தெய்வங்களும், அசுரர்களும் போர் செய்யும்போது பிரம்ம அஸ்திரம், நாக அஸ்திரம் தன்னைத் தாக்க வரும் அஸ்திரத்தைத் தாக்கும் அஸ்திரம் என்று பலவகை அஸ்திரங்களை அறிய முடிகிறது.

தற்போது மொகஞ்சதாரோவிலும் ஹாரப்பா போன்ற இடங்களிலும் விஞ்ஞானிகள் ஆராய்ச்சி செய்து வருகின்றனர். அணுக்கதிர்களின் வீச்சு அங்குள்ள இடங்களிலும் மண்ணிலும் உள்ளது என்று தெரிய வருகிறது எனக் கூறுகிறார்கள்.

''சமீப காலங்களில் ஏற்பட்ட ஈராக், அமெரிக்காப் போர்களில் புராணங்களில் கூறப்பட்ட நாக அஸ்திரம், பிரம்ம அஸ்திரம் போன்று தாக்கி விட்டுத் தானே வரும் போர் இராக்கெட்டுகள் என பல புதுமையான போர்க் கருவிகளை அமெரிக்கா கண்டு பிடித்து, அதைப் போரில் உபயோகித்து, உலகத்தை ஆச்சரியத்தில் மூழ்கடித்தது!''

நாம் இலஷ்மியைத் தாமரையிலும், சரஸ்வதியை அன்னத்திலும் கிருஷ்ணரைப் பருந்திலும், துர்க்கையைச் சிங்கத்திலும் வைத்து ஓவியம் தீட்டுகிறோம். கதைகளிலும் படிக்கின்றோம். ''இதன் மூலம் அக்காலத்தில் பருந்துகள், அன்னம் போன்றவை மனிதரைத் தாங்கும் அளவில் உருவத்தில் பெரியதாக இருந்தன என்று அறியப்படுகிறது.

தற்போது விலங்குகளிடத்திலும் அன்பு செலுத்திப் பழகினால் சிங்கம், புலி, என்ற கொடிய விலங்கும் மனிதனுக்கு அடங்கும் என்பதைப் புரியவைக்கத்தான் அவ்வாறு அக்காலத்தில் கூறினார்கள் என்பதைச் சர்க்கஸிலும்,

விலங்குகள் சரணாலயத்திலும் மனிதர்கள் விலங்குகளைத் தன் சொல்படி கேட்கப் பழக்கி வைக்கின்றனர்.

நெருப்புக் கோழி ஓர் ஆளையே தூக்கிச் செல்லும் வலிமையும் எடையும் வாய்ந்தது. அமெரிக்காவில் பல நூற்றாண்டுகளுக்கு முன் குழந்தைகளைத் தூக்கிச் செல்லும் பருந்தைக் கண்டதாகப் பத்திரிகையில் கூறியிருந்தனர்.

பட்டினத்தார் தண்ணீரைக் கொண்டு விளக்குகளை எரித்ததாகப் படித்துள்ளோம். அச்செயல், பக்தியின் சக்தியால் ஏற்பட்டு இருப்பினும். பின்னர் நிலத்தைத் தோண்டும்போது நீருடன் கலந்த ஓர் எண்ணெய்போல் திரவங்கள் இருப்பதைக் கண்டு, அதை எரித்துப் பார்த்தபோது பிரகாசமாக எரிந்ததைக் கண்டு பல ஆராய்ச்சிகள் மேற்கொண்டு, இன்றைய ''பெட்ரோலை''க் கண்டு பிடித்தனர். அதைக் கொண்டு பல வேதிப் பொருட்களால் பெட்ரோல் மற்றும் மண்ணெண்ணெய் போன்ற பொருட்களைக் கண்டுபிடித்து வீட்டு உபயோகத் திற்கும் போக்குவரத்திற்கும் பயன்படுத்தி வருகின்றோம்.

கோவலனுக்கும் மாதவிக்கும் பிறந்தவள் மணிமேகலை அவள் இளமையிலேயே துறவி ஆனாள். தன் குலதெய்வமான மணிமேகலை தெய்வத்தைத் தரிசிக்க (மாதவி, தன் குலதெய்வப் பெயரை மகளான மணிமேகலைக்கு வைத்திருந்தாள்) மணி பல்லவ தீவிற்குச் சென்றாள். தெய்வத்தையும் சந்தித்தாள் தெய்வத்திடம் ''தான் என்ன பாவம் செய்தேன். தாசி மகளாக பிறந்து, பலவிதத்தில் அவமானம் அடைந்தேன். என்றும் தன்னைப் பின் தொடர்ந்து இளவரசன் தொல்லை தருவதாக வும் அதனால் மனத்துன்பம் ஏற்படுவதாகவும்'' கூறுகிறாள்.

அதற்கு அத்தெய்வம், ''காலச் சக்கரத்தை சுற்றி மணிமேகலையின் முற்பிறவிகளைத் தெரிவித்து, முன் பிறவியின் கணவனே இப்போதுள்ள இளவரசன். அதனால்தான் உன்னைப் பின் தொடர்கிறான் என்று விளக்கி, அவளுக்குப் பலவிதத்தில் ஆறுதல் கூறி, பசி என்று வருபவர்களுக்கு அமுது (உணவு)

படைக்குமாறு அட்சய பாத்திரம் ஒன்றையும் மணிமேகலை யிடம் தந்தாள்.

அட்சய பாத்திரத்துடன் பூம்புகார் வந்து, அனைவருக்கும் மணிமேகலை உணவு படைத்து மகிழ்ந்தாள். இதனால், முனிவரின் சாபத்திற்கு ஆளான யானைத்தீப் பசிக்கு தேவ மங்கையான காயசண்டிகை, அட்சய பாத்திரத்தில் உண்டான அமுதை முதன் முதலாக உண்டு தன் சாபத்தை நீக்கிக் கொண்டாள்.

இதனால், காலச்சக்கரத்தின் மூலம் முற்பிறவி தெரிவிக்கப் படுவதாக அறியப்படுகிறது. இதைச் சார்ந்தது தானோ என்னவோ, 'ஹிப்னாடிசம்' என்பது என யோசிக்க வைக்கிறது. ஏன் எனில், ''ஹிப்னாடிசம் மூலம் சிறுவயது வரை படிப்படியே வந்து, முற்பிறவியில் என்னவாகப் பிறந்து இருந்தோம் என்பது வரை கண்டுபிடிக்க முடியும்'' என்று நிபுணர்கள் கூறியுள்ளனர்.

'இராமாயணத்தில் சீதை, வயிற்றில் குழந்தையுடன் கர்ப்பமாக இருந்த நிலையில் இராமரை விட்டுப் பிரிந்து, வசிட்டரின் ஆஸ்ரமத்தில் வாழ்ந்து வந்தாள். அவள் இரு ஆண் மகவைப் பெற்றாள். அதை வசிட்டர், லவா குசாவின் தந்தை யார்? என்பதை அவர்கள் இருவருக்கும் சொல்லாமல் மறைத்தார்.

இருவரும் ஒரு சமயம் அயோத்திக்கு வந்து இராமரிடம் பாட்டாக இசைத்தனர். தன் கதையைத் தனக்குக் கூறியதைக் கேட்ட இராமர் அவர்கள் பற்றியும் அவர்களின் தாய் தந்தை பற்றியும் அறிய முற்பட, லவா, குசாவின் தந்தை தானே என்றும் தாய் சீதா என்றும் அறிந்து அதிர்ச்சி ஏற்பட்டு, பின் ஆனந்தம் கொண்டு, தன் தவற்றை உணர்ந்து, சீதாவை அழைத்து வரவும் குழந்தைகளை கூட்டிவரவும் ஆட்களை அனுப்புகிறார்.

''இமயமலை அடிவாரத்திலுள்ள வசிட்டர் குடிலுக்கு வந்து சீதாவை விசாரிக்க, வசிட்டர் சீதாவைப் பூமித்தாயே

பூமியைப் பிளந்து, தன் மகளை ஏற்றுக் கொண்டாள்'' என்று கூறுகிறார். இக்கதை வழியே, இராமர் இருந்த காலத்தில் பூகம்பம் ஏற்பட்டது என்றும், அதில் சீதை பலியானாள்' என்றும் அறிய முடிகிறது.

'சிவபுராணங்களில் சிவனுக்கும் பார்வதிக்கும் திருமணம் வடக்கே உள்ள இமயமலையில் நடக்கிறது. மூவுலகிலுள்ள தெய்வங்களும் அரசர்களும் ரிஷிகளும் மக்களும் ஒன்றாக ஓரே இடத்தில் கூடுகின்றனர். பாரம் தாளாமல் வட பகுதி தாழ்ந்து தென் பகுதி உயர்ந்தது. அனைவரும், ''சர்வேஸ்வரரே! எங்களைக் காத்து அருளுங்கள்'' என்று அலறுகின்றனர்.

சிவபெருமான் அகத்தியரை அழைத்து, ''உன் ஒருவனால் தான் இதைச் சமன்படுத்த முடியும்'' என அவரைத் தென் பகுதிக்குச் சென்று நிலத்தைச் சமன்படுத்துமாறு கட்டளை இடுகிறார். அகத்தியரும் சிவபெருமான் கட்டளைக்கு இணங்க, தென் பகுதிக்கு வந்து நிலத்தைச் சமன்செய்ததாக அகத்தியர் புராணத்தில் உள்ளது.'

நம் விஞ்ஞானிகள் பூகம்பம் ஏற்படுவதையும், அதை முன்கூட்டி அறிய முடியும் என்றும், பூகம்பத்தால் புதையுண்ட மொகஞ்சதாரோ, ஹரப்பா, ரோம், அட்லாண்டிக் போன்ற இடங்களில் இன்றும் ஆராய்ச்சி செய்து வருகிறார்கள்.

விஞ்ஞானத்திற்கு அப்பாற்பட்ட சக்திகளைப் புராண கதைகள் கூறியுள்ளன.

''தேவர்கள் சூரபத்மனாதியர்களால் பெரும் தொல்லை களை அனுபவித்து வந்ததால் துன்பங்களைப் பொறுக்க முடியாமல் சிவபெருமானை வேண்டி நின்றனர். முறை யீட்டைக் கேட்ட சிவபெருமான் தன் நெற்றிக்கண்ணிலிருந்து நெருப்புப் பொறியை சரவணப் பொய்கையில்பொழிய வைத்த தாகவும் சரவணப் பொய்கையில் முருகன் தோன்றினான் என்பதும் முருகன் பிறந்த வரலாறு.''

*''வந்திக்கு மலரோனாதி வானவர் உரைத்தல் கேளாப்*
*புந்திக்குள் இடர்செய்யற்க புதல்வனைத் தருவதும் என்னா*
*அந்திக்கு நிகர் மெய்யண்ணல் அருள்புரிந்தறிஞராயோர்*
*சிந்திக்குந் தனது தொல்லைத் திருமுகம் ஆறுங் கொண்டான்''*

என்கிறார் கச்சியப்பர்.

''அருவும் உருவும் ஆகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய் பிரம்மமாய் நின்ற சோழிப் பிளப்பதோர் மேனி ஆகக் கருணை கூர் முகங்கள் ஆறும் கரங்கள் பன்னிரண்டும் கொண்ட ஒரு திருமுருகன் வந்தாங்கு உதித்தனன் உலகம் உய்ய'' என்கின்றார்.

அடுத்து மணிமேகலை தெய்வத்தின் அருளால் அட்சய பாத்திரம் கிடைத்தது என்றும், அதன் மூலம் பலரின் பசியை மணிமேகலை போக்கினாள் என்றும் சிலப்பதிகாரம் எனும் நூல் கூறுகிறது.

வனவாசத்தின்போது யுதிஷ்ட்ரன் செய்த தவத்தினால் சூரியபகவான் பிரத்யட்சமாகி ஓர் அட்சய பாத்திரத்தைப் பாண்டவர்களுக்குத் தந்தான். ''இதைப் பெற்றுக்கொள் பன்னிரண்டு வருடம் இதன் மூலம் உனக்கு அன்னம் கிடைக்கும் எனக்கூறினான்.

தினமும் திரௌபதி, இந்தப் பாத்திரத்தைக் கொண்டு எவ்வளவு பேருக்கு அன்னம் அளிக்க விரும்புகிறாளோ அது வரையில் அன்னம் வளரும் என்றும்,

அனைவருக்கும் உணவு அளித்துவிட்டுத் திரௌபதி புசித்த பின் அந்தச் சக்தி அன்றைக்கு மறைந்துவிடும் என்றும் மீண்டும் காலை அட்சய பாத்திரத்திற்கு உணவு அளிக்கும் சக்தி வரும் என்றும் கூறி அட்சய பாத்திரத்தைத் தந்தான்.

இதன்படி அங்கு வரும் ரிஷிகளுக்கும் அதிதிகளுக்கும் மற்றும் பலருக்கும் உணவு படைத்து, தம்பிகள் உண்டபின் தர்மர் போஜனம் செய்வார் பின் கடைசியாகத் திரௌபதி உண்பாள்'' என்கிறது மகாபாரதக் கதை.

இவ்வாறு பல செய்திகள் விஞ்ஞானத்திற்கு அப்பாற்பட்டு உள்ளன. விஞ்ஞானத்தில் மெய்ஞ்ஞானமும் மெய்ஞ்ஞானத் தில் விஞ்ஞானமும் உள்ளன என்று நம் முன்னோர்கள் குறிப்பால் உணர்த்தினர்.

பண்டைக் காலத்தில் தேவிபாகவதத்திலும் கந்த புராணம், மகாபாரதம், இராமாயணம் போன்ற புராணங்களிலும் இதிகாசங் களிலும் கதைகள் மூலம் ரிஷிகள் முனிவர்கள், சித்தர்கள், போன்றோர் விஞ்ஞானத்தை மெய்ஞ் ஞானமாக என்றும் மறக்காமல் இருக்க, கதைகள் மூலமாக நமக்குத் தெரிவித்தனர்.



# 12. கோள்களும் அதன் செயல்களும்

நம் சித்தர்களும் ரிஷிகளும் பல கலைகளில் சிறந்து விளங்கினார்கள். வாசியோகத்திலும் தியானத்திலும் தவத்தின் வலிமையால் தம் ஞானக்கண்களைக் கொண்டு பிரபஞ்சங்களின் இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என்னும் முக்காலத்தை யும் உணர்ந்தனர். சித்தர்கள் ஆகாசத்திலுள்ள கோள்களையும் அதன் செயல்பாடுகளையும் அதன் கதிர்வீச்சால் பூமியில் உள்ள மனிதர்களுக்கு ஏற்படும் நன்மை தீமையையும் விளக்கி ஓலைச் சுவடிகளின் மூலமும் கல்வெட்டுகளின்மூலமும் செவிவழிச் செய்தியாகவும் மக்களுக்கு அறிவித்தனர்.

சித்தர்கள் சூரியன் என்னும் கோள் இருக்கின்றது. அது வட்ட வடிவமானது, வெப்பம் உள்ளது, அதுதான் உலகிற்கு ஒளி தருகிறது. அதன் ஒளியால்தான் பூமியில் உள்ள அனைத்து ஜீவராசிகளும் வாழ்கின்றன என்று அறிந்து நமக்குத் தெரி வித்தனர். அதனால் தான் பண்டைய காலங்களில் சூரிய வழிபாடு முக்கியமாகக் கருதப்பட்டது.

சூரியனை 9 கோள்கள் சுற்றி வருகின்றன என்று கூறினர். கோள்கள் என்று கூறினால் மக்களின் மனதில் பதியாது என்று அவற்றைக் கடவுளாகவும் அவற்றிற்குப் பெயர்களையும் வைத்தனர்.

செவ்வாய்க் கிரகம் சிவப்பு நிறமுடையது. போர் ஏற்படவும், நிலம் சம்பந்தப்பட்ட வகையிலும் ஆதிக்கம் செலுத்த வலிமை இதற்கு உண்டு என்றனர்.

புதன் கிரகம் பச்சை நிறமுடையது, வியாழன் மஞ்சள் நிறமுடையது. மிக்க சக்தி வாய்ந்த வெள்ளிக் கிரகம், வெள்ளை நிறமுடையது.

சனி கிரகம் சாய்ந்தபடி மெல்ல, தன்னைச் சுற்றிக் கொண்டு சூரியனையும் சுற்றி வருகிறது. இதனால், பூவுலகில் நன்மையும் தீமையும் விளைகின்றன என்றும் கூறுகின்றனர்.

இராமர் பிறந்தபோது இருந்த கோள்களின் நிலையைப் பற்றி, வால்மீகி இராமாயணத்தில் குறிப்பிட்டுள்ளார்.

நவக்கிரகக் கோள்கள் தம் மாறுபாடுகளினாலும் சுற்றுப் பாதையில் சுற்றி வரும்போது ஏற்படும் கதிர் வீச்சாலும் மனிதன் மட்டுமல்ல, பூமியே பாதிக்கப்படுகிறது.

சமீபகாலமாக வியாழனை விண்கற்கள் தாக்கும்போது நம் பூமிக்கும் பல வகைகளில் பாதிப்புகள் ஏற்பட்டன. மனிதனை யும் அதன் கதிர் வீச்சுத் தாக்கியது.

செவ்வாய் கிரகத்தில் புயல் வீசும்போதும் நம் பூமியில் பாதிப்புகள் ஏற்படுகின்றன. மேலும் மற்ற ஏதேனும் நிலை மாறும்போது நம் பூமியில் யுத்தங்கள் ஆங்காங்கே ஏற்படுகின்றன என்று சமீப கால விஞ்ஞானிகள் கண்டுபிடித்து உள்ளனர்.

சூரியனைப் பற்றி அதிக கதைகள் உண்டு. கற்புக்கரசிகள் பலர் சூரியனின் இயக்கத்தைச் சிறிது நேரம் நிறுத்தியதாகப் புராணக் கதைகள் கூறுகின்றன.

காஸ்யப முனிவருக்கும் அவர் பத்தினியான விந்தைக்கும் கருடனும் அருணனும் பிறந்தனர். கருடன் தன் தவ வலிமையால் விஷ்ணுவின் வாகனமாக மாறினான். அருணன் சூரியனுக்குச் சாரதியானான். தன் தவ வலிமையால் கயிலை மலைக்கு சென்று சிவபெருமானை வழிபட விரும்பினான். சூரிய பகவான் அந்த வாய்ப்பைத் தடுத்து நிறுத்திவிட்டார். பக்தனைத் தடுத்ததால் சிவனுக்குக் கோபம் வந்து சாபமிட்டார்.

சாபத்தால் சூரியன் இருண்டு போனான். உலகம் இருண்டு போனதால் தேவர்கள் இறைவனை வழிபட்டு முறையிட, ''திருமீயச்சூர் சென்று தவம் செய்தால் பழைய நிலை திரும்பும்'' என்று சிவன் கூறினார். 'சூரியனும் தவம் செய்து பழைய நிலையை அடைந்தான்' என்பது வரலாறு.

சந்திரன் ஜாதகத்தில் நல்ல நிலையில் இருந்ததால் புத்தி, பலம், வெற்றிகள் நல்ல ஆடை ஆபரணங்கள், தெய்வ வழிபாடு ஆகியவை கிட்டும். கணவன் மனைவிக்கிடையே நல்ல ஒற்றுமை ஏற்படும், சமூகத்தில் அந்தஸ்து ஏற்படும்.

சூரிய கிரகத்தையும் சந்திர கிரகத்தையும் எகிப்து பிரமிடு களில் வரைந்து வைத்துள்ளனர். நம் நாட்டில் கோவில்களிலும் குகைகளிலும் கல்வெட்டாகப் பொறித்து வைத்து உள்ளனர். கிரகங்களின்போது ஒரு கிரகத்தை மற்றொரு கிரகம் ஈர்ப்பதால் பூமியில் பல மாற்றங்கள் ஏற்படுகின்றன.

''தசரதன் அயோத்தியை ஆளும்போது சனிக் கிரகத்தால் 30 ஆண்டுகளுக்கு மேல் மழையில்லாமல் பஞ்சம் ஏற்படும் என்று ஞானிகளால் அறிந்து, சனி கிரகத்துடன் போருக்குச் சென்றான் என்றும் சனி பகவான் கருணையினால், பஞ்சம் இல்லாமல் மக்கள் வாழ்ந்தார்கள்'' என்பதும் புராண வரலாறு.

**சூரியன்:** சூரியன் ஜாதகத்தில் நல்ல இடத்தில் அமைந்து இருந்தாலும் நல்ல பலன்களாக இருந்தாலும், பூமிலாபம், தனலாபம், பதவி உயர்வுகள் உண்டாகும். புகழ் ஏற்படும், காரியசித்தி உண்டாகும்.

சூரியனைப் பிதாகாரன் என்று ஜோசியர்கள் கூறுவர். அதனால் தந்தையின் நலனும் அவர் முன்னேற்றமும் இதில் அடங்கும். பெரியவர்களின் நட்பு சுகம் ஆகியவையும் தொழில் தொடங்கவும் அபிவிருத்தி ஏற்படவும் கூடும்.

அவ்வாறு அமையாமல் இருந்தால் வெப்ப நோய்கள் ஏற்படும் கண், தோல் சம்பந்தப்பட்ட நோய்கள் ஏற்படும். நாம் எங்கு இருந்தாலும் கலகங்கள் ஏற்படும். கோபம், அமைதி யின்மை, தீவிபத்துகள், மனைவி, குழந்தைகளுக்குத் தோசம் ஏற்படும்.

சூரியனுக்கு அதிபதி சிவன், சூரியனார்கோவில், சூரிய வழிபாட்டிற்கு நல்லது. இது கும்பகோணத்தை அடுத்த ஆடுதுறையில் உள்ளது.

**பரிகார க்ஷேத்திரங்கள்** : சூரியனார் கோவில் இது கும்பகோணத்தை அடுத்த ஆடுதுறையில் உள்ளது.

**சந்திரன்** : சந்திரன் ஒருவருக்கு ஜாதகத்தில் நல்ல நிலையில் இருந்தால் புத்தி பலம், வெற்றிகள், நல்ல ஆடை ஆபரணங்கள், தெய்வ வழிபாடு ஆகியவை கிட்டும். கணவன் மனைவிக்கிடையே நல்ல ஒற்றுமை ஏற்படும். சமூகத்தில் நல்ல அந்தஸ்து ஏற்படும்.

ஜாதகத்தில் சந்திரன் ஒருவருக்கு சரியாக அமையவில்லை எனில் மனகுழப்பம், மனோவியாதி, மனக்கஷ்டம் கணவன் மனைவிக்கிடையே சண்டை சச்சரவுகள் ஏற்படும். சந்திரனுக்கு அதிபதி பார்வதி. சந்திரனைத் திங்கள் என்பர்.

**பரிகார க்ஷேத்திரங்கள்** : திங்களூர், திருப்பதி சென்று திங்களின் பாதிப்பிலிருந்து தப்பலாம். திங்களூர் தஞ்சை மாவட்டம் திருவையாற்றை அடுத்து உள்ளது.

செவ்வாய் :

செவ்வாய் கிரகம் நல்ல இடத்தில் இருந்தால் சகோதரர் களால் நன்மை ஏற்படும். புத்திரர்களால் நன்மை ஏற்படும். ஆடை ஆபரண சேர்க்கை உண்டாகும். குடும்பத்தில் மங்கள நிகழ்ச்சிகள் ஏற்படும். தைரியமுடனும் முற்போக்குடனும் செயலாற்றல் ஆகிய நல்லன ஏற்படும்.

ஜாதகத்தில் அவ்வாறு அமையாவிடில் வரும் கஷ்டங்கள் சொல்லி மாளாது. எவ்வளவு பெரிய கோடீஸ்வராக இருந்தாலும் வீதிக்கு வரவேண்டிய நிலைமை ஏற்படும். அரசர் கூட ஆட்சி பீடத்தை இழந்து காடு செல்லவும் நாடுநாடாக அலையவும் நேரிடும். மான அவமானங்கள் உண்டாகும். நோய்கள், விபத்துகள் ஏற்படும். இடமாற்றம், மனதில் பயம், குடும்பத்தில் குழப்பம், காரியத்தடை போன்றவை ஏற்படும்.

**செவ்வாய்க்கு அதிபதி முருகனும் துர்க்கையும்**

பரிகார க்ஷேத்திரங்கள் - வைத்தீஸ்வரன் கோவில் - பழனி, மதுரை, திருச்சிறுகுடி.

உ-ம் : அரிச்சந்திரன் பொய் பேசமாட்டேன் என்று உறுதியுடன் வாழ்ந்தவன். நேர்மையுடன் நீதி வழுவாமல் ஆட்சி செய்து வந்தான். அவனது நேர்மைக்குப் பங்கம் ஏற்பட இருந்தது. அதனால் நாட்டையிழந்து மனைவியையும் குழந்தையையும் பிறரிடம் விற்று, பின், மகனையும் இழந்து, சுடுகாட்டில் வேலை செய்து, பெற்ற மகனே இறந்து விட, சுடுகாட்டுக்கு மனைவி தூக்கி வரும்போது மனைவி என்று தெரியாமல் அவன் பட்ட கஷ்டங்கள் சொல்லி மாளாது. அவற்றைப் படிக்கும்போதும், பாண்டவர்கள் வனவாசம் சென்று கஷ்டம் அடைந்ததைப் படிக்கும்போதும் நாம் வாழக் கொடுத்து வைத்தவர்கள் என்று எண்ணத் தோன்றுகிறது.

புதன்: ஜாதகத்தில் நல்ல இடத்தில் புதன் அமைந்து இருந்தாலும், மறைந்து இருந்தாலும் (மறைந்த புதன், நிறைந்த கல்வி) புத்தி பலத்தால் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்குவார்கள் கலைகளில் சிறந்து விளங்குவார்கள்.

கவிகாளிதாசர் - மூடராக இருந்தார். பின் பாரே போற்றும் கவிகாளிதாசர் ஆனார். கம்பர், திருவள்ளுவர் போன்ற சான்றோர் இன்றளவும் உலகம் போற்றும் புலவர்களாகத் திகழ்ந்தனர்.

தெனாலிராமர், காளிதாசர் ஆகியோர் மூடர்களாக இருந்தார்கள். பின், காளியின் அருள் பெற்றுப் புத்திசாலியாக மாறி சாதனை படைத்தார்கள்.

"தெனாலிராமன், சிறுவனாக இருக்கும்போது காளி கோவிலுக்குச் சென்று தன்னை எல்லோரும் மடையர் என்று கருதித் தன்னைக் கேவலமாகப் பேசுகிறார்கள் என்று அழுது வணங்குகின்றான். அப்போது காளி அவன்மேல் கருணை கொண்டு அவன் முன் தோன்றி, "இரு கிண்ணத்தில் பால் உள்ளது ஒன்று அறிவு தரும் பால் மற்றொன்று ஆயுளைத் தரும் பால். இதில் எது வேண்டும்? என்று கேட்க, தெனாலிராமன் இரண்டையும் வாங்கிக் கலந்து குடித்து விடுவதாகவும், இந்தச் சம்பவத்தின் பின்னால் பேரும் புகழும் அடைந்து நீண்ட நாள் வாழ்ந்ததாகவும் வரலாறு."

கவி காளிதாசன் சிறு வயதில் ஆடுகளை மேய்த்து, இடையனாக வாழ்ந்தான். அவனும் காளியின் அருட்பார்வை யில் கவிகாளிதாசனாக மாறி, பல நூல்களை இயற்றி இன்றளவும் புகழ் பெற்று விளங்குகிறான்.

புதன் கெட்டிருந்தால், தெளிவில்லாப் புத்தி உடையவ ராகவும், மந்தத் தன்மை கொண்டவராகவும், படிப்பில் விருப்பம் இல்லாமலும் இருப்பர். கர்ப்பப்பை சம்பந்தப்பட்ட நோய்கள் உண்டாகும். தலை சம்பந்தப்பட்ட நோயும், மரண வேதனை போன்ற கஷ்டங்களும் உண்டாகும். புதனின் அதிபதி-திருமால்.

குரு: 'குரு பார்க்கக் கோடி நன்மை' என்பார். குரு நல்ல இடத்தில் ஜாதகத்தில் அமர்ந்து இருந்தால் ஞானம் ஏற்படும். வேறு கிரணங்களால் கெடுதல் ஏற்பட்டாலும் குருவின் பார்வை இருந்தால் மிகுதியாக ஏற்படும் கெடுதல் குறையும். குரு பார்வை கிடைத்தால் திருமணம் கைகூடும். சுத்தத்தின் இருப்பிடம் குரு, அதனால் நம் மனமும் உடலும் சுத்தமாக இருக்க வேண்டும். குரு நல்ல இடத்தில் இருந்தால், மேதை களாகவும் ஞானிகளாகவும் இருப்பார்கள்.

அவ்வாறு அமையவில்லை எனில், புத்தி மங்கி, எதிலும் குழப்பம் ஏற்படும். திருமணம் தடைப்படும், எதிலும் தடங்கல் ஏற்படும், பலவிதத்தில் பிரச்சினைகள் உண்டாகும்.

பிரம்மன் அதிதேவதையாக இருப்பினும் அம்மன், தட்சிணா மூர்த்தியும் அவருக்குரிய தெய்வங்கள் ஆகும்.

**பரிகார ஷேத்திரம் - ஆலங்குடி: இது தஞ்சை மாவட்டம் கும்பகோணத்திற்கு அருகில் உள்ளது.**

இதற்கு ஒரு கதையும் உண்டு. "ஓர் ஆண் ஜாதகத்தில் திருமணம் ஆன அடுத்த நாளே மரணம் எய்துவான்" என்று இருந்தது. இதை அறியாத பெண் வீட்டார் பெண் கொடுக்கச் சம்மதித்து விட்டனர். திருமணம் ஆன அன்றுதான் இது,

பெண் வீட்டாருக்குத் தெரிய வந்தது. பெண்ணைப் பெற்றவர் கதறி அழுதனர். அப்போது அங்கிருந்த ஒரு துறவி, ''ஆலங்குடிக்குச் சென்று குருவின் பார்வைபடும்படி இருவரையும் இரவு முழுவதும் அமர வையுங்கள். காலையில் தான் எழுந்து வர வேண்டும்'' என்றார். மணமக்கள் அன்று இரவு முழுவதும் தூங்காமல் குருவின் பார்வையில் படும்படி இருந்தனர். துஷ்ட மிருகங்கள் அருகே வந்தன. ஆனால் ஒன்றும் செய்யாமல் சென்று விட்டன. மறுநாள் இருவரும் உயிருடன் மீண்டு இல்லம் வந்து, நீண்ட நாட்கள் வாழ்ந்ததாகக் கதை உண்டு. இதனால் குருவின் பார்வை பட்டால் தோஷங்கள் விலகி நன்மை ஏற்படும் என்று புரிகிறது.

சுக்கிரன் சுகத்திற்கு உரிய கிரணம், ஜாதகத்தில் களத்திர காரகனாக இருப்பதால் இதன் பலத்தைக் கொண்டே வாழ்க்கைத் துணை ஏற்படும். சுகபோகங்கள் இதைக் கொண்டே நிர்ண யிக்கப்படுகின்றன. இவன் 'மிருத சஞ்சீவினி' மந்திரத்தால் இறந்தவர்களையும் உயிர்ப்பிக்கும் மகா தபஸ்வி, செல்வம் தருபவன், குடும்பத்தில் மகிழ்ச்சியைத் தருபவன்.

சுக்கிரன் மாறுபட்டவனாக அமைந்தால் தரித்திரம் ஏற்படும். வாழ்க்கைத் துணை சரியாக அமையாது. குடும்பத்தில் குழப்பம் ஏற்படும். சண்டை சச்சரவு ஏற்படும் சுக்கிரனின் தேவதை - வள்ளி

**பரிகார ஷேத்திரங்கள் - கஞ்சனூர், ஸ்ரீரங்கம்.**

**சனி:** 'சனியைப் போல் கொடுப்பாரும் இல்லை. கெடுப் பாரும் இல்லை' என்பது பழமொழி. சனி பகவான் என்றதும் பலருக்கும் மனதில் பயத்தையே கொடுக்கும்.

சனி கிரகம் நல்ல இடத்தில் ஜாதகத்தில் அமர்ந்து இருந்தால், உயர்ந்த பதவி, மனை, வீடு வாங்குதல், வாகன யோகங்கள், ஆடை ஆபரணங்கள் சேர்க்கை என்று அள்ளி அள்ளி வழங்குவான். தடைப்பட்ட திருமணம் நடந்து நலமுடன் வாழ்வார்கள்.

இதே சனி கிரகம் நல்ல இடத்தில் இல்லாமல் மாறான கட்டத்தில் அமைந்து விட்டாலோ அவ்வளவுதான், நளன், இராமர் கதிதான் அவர்களுக்கும்!

சனி பகவானுக்கு பாரபட்சமே கிடையாது. அரசனையும் பிடிப்பான், ஆண்டியையும் பிடிப்பான்! இடம் விட்டு இடம் மாறும், உத்தியோகத்தில் குழப்பம் ஏற்படும். மானக்கேடு உண்டாகும், குடும்பம் பிரியும், மனக்கஷ்டம், பணக்கஷ்டம், திருட்டினால் பொருளை இழத்தல், நோய்கள் என்று உலகில் உள்ள அத்தனை துயரங்களும் துன்பங்களும் உண்டாகும். அச்சமயம் 'சனிபகவானே சரணம்' என்று வேண்டி நின்றால், நம்மைத் தூக்கி நிறுத்தி நம் கஷ்டத்தைக் குறைத்து, 'தலைக்கு வந்தது தலைப்பாகையோடு என்பது போல' கஷ்டத்தைச் சிறிது குறைத்து, தாங்கிக் கொள்ளும் மனதைத் தருவார்.

சனிபகவானோடு, கணபதியையும், ஆஞ்சநேயரையும் நாம் வணங்கி வர வேண்டும்.

நளன் என்ற அரசனைச் சனி பகவான் பிடித்த காரணத்தால் அரியணையிலிருந்து இறங்கி நாடுவிட்டு நாடு சென்றான். குழந்தைகளைப் பிரிந்தான், மனைவியை வழியில் பிரிந்தான். கார்க்கோடகன் என்ற பாம்பு கடித்து உடல் கருமை நிறமானது. பல கஷ்டங்களையும் அடைந்து, முடிவில் மனைவியையும் குழந்தைகளையும் அடைந்து, சனி பகவான் கருணையால் அரசாட்சியையும் பெற்றான்.

நளன் கதையைச் சொல்வோரையும் கேட்போரையும் நான் நெருங்க மாட்டேன் எனச் சனிபகவான் கூறியதாக நள வெண்பாவில் காணப்படுகிறது.

முதலில் கஷ்டங்களைச் சனி பகவான் கொடுத்தாலும் முடிவில் நம்மை விட்டு விலகிச் செல்லும்போது சந்தோசத்தையும் சுபத்தையும் தருவார்.

**பரிகார ஷேத்திரங்கள் - திருநள்ளாறு.**

**கேது:** கேது கிரகம் ஒரு சாயா கிரகம், இதற்கு என்று தனி இடம் கிடையாது. எந்தக் கிரகத்துடன் ஜாதகத்தில் சேருமோ

அந்தக் கிரகத்துடன் பலன் தருவான். இவன் சிவபக்தன் மற்றும், யோகி. எப்போதும் யோகம் (த்யானம்) செய்து கொண்டு இருப்பவன்.

ஜாதகத்தில் கேது நல்ல இடத்தில் இருந்தால் இகம், பரம் இரண்டிலும் சுகத்தை அனுபவிக்கச் செய்வான். தவயோகத்தை அளிப்பான் ஞானத்தை வாரி வழங்குவான். உலக பந்தங்களில் இருந்து விடுவிடுப்பான். முக்தி தருபவன், சகல சௌபாக்கியத் தையும் அளிப்பவன்.

'கேதுவைப் போல் கெடுப்பாரில்லை' என்பார்கள். இவன் ஜாதகத்தில் நல்ல இடத்தில் அமையாமல்போனால், பல தொந்தரவுகள் ஏற்படும். தகாத சகவாசம் உண்டாகும். மோச மான நோய்கள் ஏற்பட்டு உயிருக்கு உலை வைக்கும்.

**கேதுவின் அதிபதி - இந்திரன்**

**பரிகார க்ஷேத்திரம் - காளஹஸ்தி, கீழ்ப்பெரும்பள்ளம்**

கேது, ஞானகாரகன், கேதுவின் அருள் இருந்தால் மனம் ஞானத்தை நோக்கிச் செல்லும், இவர் ஆதிக்கத்தில்தான் பல ஞானிகள் தோன்றி, இன்றும் உலகம்பேசும் அளவில் உள்ளார்கள்.

**எமகண்டம்:** 'எம கண்டம்' என்பது கேதுவின் கதிர்வீச்சு தினமும் பூமியில் விழும் நேரம் என்று விஞ்ஞானிகள் கண்டு பிடித்து உள்ளனர். அச்சமயம் நாம் ஏதேனும் நல்ல செயல் களைச் செய்யும்போது கெட்ட கதிர்வீச்சினால் பாதிப்பு நிலை ஏற்படும். எனவே நல்ல காரியங்களை எமகண்டத்தில் செய்யவோ, தொடங்கவோ கூடாது. கேதுவின் அதிபதி. சித்திர குப்தன். (காஞ்சியில் சித்திரகுப்தனுக்குக் கோவில் உண்டு). கணபதியும் கேதுவின் அதிபதி ஆவார்.

**இராகு:** இராகு கிரகத்தையும் சாயாகிரகம் என்பார்கள். இவருக்கென்று தனி இடம் ஜோதிட கட்டங்களில் இல்லை. எந்தக் கிரகத்துடன் சேர்ந்து விளங்குகிறதோ அவர்களின்

முழுப் பலனையும் தருவார். இதனால் இவரை 'நிழல் கிரகம்' என்பார்கள்.

இராகு, ஜாதகத்தில் நல்ல இடத்தில் அமர்ந்து இருந்தால் அரசனைப்போல் வாழ்வு கிட்டும். ஆண்டியும் அரசன் ஆவான். செல்வாக்குப் பெருகும். அன்னிய மொழிகளில் தேர்ச்சி பெறுவர். மந்திரத்தில் நிபுணர் ஆவார்கள். திருமணப் பாக்கியம், புத்திரபாக்கியம் ஆகியவை கிட்டும்.

சர்ப்ப தோசம் நீங்கும்.

ராகு நல்ல இடத்தில் இல்லையேல், சர்ப்ப தோசம் ஏற்படும். விவாக தாமதம் உண்டாகும். களத்திர தோசம், புத்திர தோசம் ஆகியவை உண்டாகும். தாய், தந்தை பாதிக்கப் படுவார்கள். தோல் நோய் உண்டாகும்.

## இராகுவின் அதிதேவதை- பத்திரகாளி

**பரிகார சேஷத்திரங்கள் - திருநாகேஸ்வரம், இராமேஸ்வரம்.**

**ராகு காலம்:-** 'ராகு காலம்' என்பது ராகு காலத்தில் கதிர் வீச்சு பூமியில் விழும் நேரமாகும். அக்காலத்தில் நல்ல செயலைத் தொடங்கவோ, செய்யவோ கூடாது. அதன் கதிர் வீச்சால் செயல்கள் பாதிக்கப்படும் அச்சமயம் துர்க்கை கோவிலுக்குச் சென்று வழிபட்டு வரலாம்.

முன் காலத்தில் ஜாதகம் பார்ப்பதுடன் கைரேகையையும் சேர்த்துப் பார்ப்பார்கள். ஜாதகக் கட்டத்தின் பலனைப் போலவே கைரேகைப் பலனும் ஒத்து வரும், ஜாதகம் இல்லாத வர்களுக்குக் கைரேகை பார்த்துப் பலன்கள் கூறுவர்.

படிப்பு, வாழ்க்கை முறை, வாழ்க்கைத்துணை, குழந்தைகள் அமையும் விதம், பிற்கால வாழ்க்கை, தாய், தந்தையின் பலன்கள், கூடப் பிறந்தவர்களின் பலனும் தெளிவாக, கைரேகையைப் பார்த்துக் கூறுவார்கள். எல்லாத் துறைகளிலும், அனைத்து இடங்களிலும் போலிகள் இருக்கின் றார்கள். நாம் போலி ஜோதிடர்களிடம் அகப்பட்டுக்

கொள்ளாமல், உண்மையாகக் கூறுபவர்கள் யார் என இனம் கண்டுகொண்டு, அவர்களை நாட வேண்டும்.

எப்பொழுதும் நம் விஷயங்களை நாமே வலியச் சென்று சொல்லக்கூடாது. நாம் கேள்வி கேட்க வேண்டும். அவர்கள் பலன்கள் கூற வேண்டும். நம்மில் பலர் துன்பங்கள் வந்தால் தான் ஜாதகம், கைரேகை என்று வலம் வருவோம். அப்போது துன்பம் கொண்டிருக்கும் முகத்தில், கவலையும், கண்கள் இருண்டும் காணப்படும்.

போலியான ஜோசியர்கள் இதை 'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்' என்பதைப் போல நம் முக்ததை வைத்துக் கண்டு கொள்வார்கள்.

நம்மிடமே ஏதோ வாழ்க்கையே இருண்டதுபோல தெரியுதா? என்று இதமாக ஜோதிடர்கள் கேட்கும்போது, "ஆமாம்! என்று தொடங்கி நாம் படும் கஷ்டங்களை மடை திறந்த வெள்ளம் போல் வரிசையாகச் சொல்லி முடிப்போம்." அதைக் கேட்ட அந்த ஜோசியர்கள், "நாம் சொன்னதையே கட்டங்களை வைத்துச் சொல்வது போலவும், கைரேகையைப் பார்த்துக் கூறுவது போலவும் கூறுவார்கள். எனவே இச்செய்கை அவர்களின் தவறல்ல நம் தவறே. எதனால் கஷ்டம், அதற்கு என்ன நிவர்த்தி என்று அறிந்து, அதன்படி நடந்துகொள்ள வேண்டும். எதிலும் நல்லவர்களாகத் தேர்ந்து எடுப்பது நமது கையில்தான் உள்ளது.

ஜோதிடம் என்பது ஜோதி+ இடம் ஜோதி - ஒளி, இடம் = இருக்கும் இடம், அதாவது வாழ்க்கையில் ஒளியின் இடத்தைக் காண்பித்து, கஷ்டங்களை அவ்வொளியின் மூலம் போக்கிக் கொள்ள வழி காட்டியாக விளங்குவது ஜோதிடம். ஜோதிடம் என்பது வரை முறைக்குட்பட்ட கணக்கு. அதைத் தப்பாகப் போடாமல் சரியாகப் போட்டு, அக்கணக்கின் வழியே சென்றால், நல்ல வாழ்க்கையை அமைத்துக் கொள்ளலாம்.

நன்கு அறிந்து, அலசி ஆராய்ந்து, சொல்லும் ஜோசியர் நம்மைக் கேள்வி கேட்க வைத்துப் பதிலை அவரே சொல்வார்.

மேலும் கிரகங்களைக் குறை சொல்ல மாட்டார். அக்கிரகத்தால் இது நடந்தது என்று கூறாமல் நடந்தவற்றை மட்டும் கூறுவார். கிரகங்களைக் குறை சொன்னால் கிரங்களின் தோசம் சொல் பவர்களுக்கு வருமாம்! எனவே, நன்கு அறிந்த ஜோசியர்கள் கிரகங்களைக் குறைகூற மாட்டார்கள். ஏனெனில், கிரகங்கள் அவர்களின் பணியைத் தத்தம் நீதிவழுவாது செய்கின்றன. முன்வினை, தீவினைப் படியே ஜாதகம் அமையும். தெரிந்தோ தெரியாமலோ செய்த தவற்றுக்கு மன்னிப்புக் கோருவதுதான் பரிகாரம் எனப்படும்.

கைரேகைமூலம் வாழ்க்கைத்துணை எவ்வாறு அமையும் என்பதைக் கூறுவதாக வள்ளிக்குக் கைரேகை பார்க்கும் பெண் கூறுவது போலவும், திருப்பதி வெங்கடேசப் பெருமாள், திருமணத்தின்போது பெருமாளே குறி கூறும் பெண்ணைப் போல வேடம் அணிந்து பத்மாவதிக்குக் கைரேகை பார்த்துக் கூறினார் என்று புராணக் கதை கூறுகிறது. அதேபோல் மீனாட்சி கல்யாணத்திலும், ''சிவபெருமானை, அதாவது இமயமலையில் குடியிருப்பவர், சாம்பலை அணிந்தவர், பாம்புகளை ஆபரண மாகக் கொண்டவர் எனக் குறிப்பால் உணர்த்தி, அவரை நீ மணாளனாக அடைந்து உலகிற்கே தலைவியாகச் சிறந்து வாழ்வாய்'' என்று குறி கூறுபவள் கூறுவதாக அமைந்திருக்கும்.

''கிரகங்களின் சுழற்சியால் குறிப்பிட்ட சில நட்சத்திரங் களின் கீழ்ப் பிறந்தவர்கள் பாதிக்கப்படுகின்றனர். கிரகங்களின் இயக்கத்தை நாம் கட்டுப்படுத்த முடியாது. ஆனால் ஐம்புலன் களையும் விவேகத்துடன் அமைதியாகவும் நாம் பயன்படுத்தி னால் நம்முடைய சிரமங்கள் குறையும்'' என்று விதுரர் திருதராஷ்டிரரிடம் கூறுகிறார் என்று மகாபாரதத்தில் வருகிறது.

மருத்துவ ஆராய்ச்சியாளர்கள் மூலம் ஆணின் விந்தும், பெண்ணின் கருமுட்டையும் இணைந்து பிறக்கப் போவது ஆணா, பெண்ணா என்று தீர்மானிக்கப்படுகிறது. பின் முப்பாட்டன், முப்பாட்டி, பாட்டன், பாட்டி, அத்தை, அப்பா, அம்மா, என்று வம்சாவழிகளின் குணங்களுடனும் நோய்

களுடனும் மற்றும் வாழ்க்கைமுறைகளுடனும் பிறக்க வேண்டும் என்பதை ஜீன்கள் தீர்மானித்து, குழந்தைகள் பிறக்கின்றார்கள் என்று கூறுகிறார்கள்.

ஒரு குழந்தை பிடிவாதம் பிடித்தால், அவள் பாட்டி போல், அத்தைபோல், சித்திபோல் உதாரணம் காட்டுவோம். குழந்தைகள் கடவுளைத் தொழுதல் மற்றும் பல நல்செய்கை களைச் செய்யும்போது அதேபோல் அக்குடும்பத்தில் யார் நடந்து கொள்வார்களோ அவர்களை உதாரணம் காட்டி மகிழ்வோம்.

வழிவழியாக வரும் மாரடைப்பு, நீரிழிவு போன்ற நோய்கள் பரம்பரை பரம்பரையாக வருவதாக மருத்துவர்கள் ஒத்துக் கொள்கின்றனர். மேலும் நம் முன்னோர்கள், முன்னோர் செய்த வினைகள், பின் வரும் சந்ததியருக்கு என்றும் நாம் நல்ல குணங்களுடனும் ஒழுக்கமுடனும் தர்ம சிந்தனையுடனும், தயாள குணத்துடனும் இருந்தால் நம் சந்ததியரும் அவ்வாறு இருப்பார்கள். இதைத் தான் மருத்துவ விஞ்ஞானிகள் இரத்தத் திலுள்ள ஜீன்கள் தீர்மானிக்கின்றன என்கிறார்கள்.

ரிஷிகளோ நம் முன்வினைப் பயனும் நம் முன்னோர்கள் செய்த பயனும்தான், வரும் சந்ததிகளை உருவாக்குகின்றன என்று கூறுகிறார்கள். எனவே, "நல்லதை நினைப்போம், நல்லதைப் பேசுவோம், நல்லதையே செய்வோம். நடப்பவை நல்லதாகவே நடக்கட்டும். வரும் சந்ததியரும் வளரும் சந்ததி யரும் நல்லவர்களாகவும், வல்லவர்களாகவும், திறமைசாலியாக வும் பிறக்கவும் வளரவும் நாம் வழிகாட்டிகளாக இருப்போமாக."

# 13. சம்பிரதாயங்கள்

**திருமணம்:**

இன்னாருடைய மகனுக்கும், இன்னாருடைய மகளுக்கும், திருமணம் என்று பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்டு, மங்கல நாண் பூட்டி, நடத்தி வைக்கும் ஒரு மங்களத் திருவிழா திருமணம் ஆகும். ஆணைப் பெண்ணும், பெண்ணை ஆணும் உடலால் முதலில் அறிந்து, பின் படிப்படியே மனத்தையும் அறிந்து கொண்டு, ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்து, இல்லற வாழ்வில் அடி எடுத்துவைத்து மகிழ்ச்சியாக வாழத் தொடங்கும் நாளே திருமண நாள்.

**தாலி:**

தாலி என்பது ஒரு பெண்ணுக்கு வேலியைப் போன்றது. அவளது உடலுக்கும் உடைமைக்கும் பாதுகாப்புத் தரக்கூடியது. நேரில் வரும் ஆண், 'இவள் திருமணம் ஆனவள்' என்று உணர்ந்து விலகிச் செல்ல, ஏதுவாக இருக்கக்கூடியது.

கயிற்றில் மஞ்சளைத் தோய்த்து, மாங்கல்யத்தைப் பூட்டி, மணப்பெண்ணுக்கு, "இது உனது கற்பு என்கின்ற விலை மதிக்க முடியாத ஆபரணத்தைப் பாதுகாக்கும் காவலானக வேலியாக இருக்கட்டும்" என்று பல பெரியோர்களாலும், சக குடும்பத்தினர்களாலும், பலரின் முன்னிலையில் அக்னி சாட்சி யாகவும், தெய்வசாட்சியாகவும், ஆகாயம், பூமி, சூரிய சந்திரர்கள், அஷ்டதிக்குப் பாலகர்கள், முப்பத்து முக்கோடித் தேவர்கள், அருந்ததி நட்சத்திரத்தின் சாட்சியாகவும், மங்கல நாண் அணிவித்து, இதுவரை பெற்றோர்களுக்கு மகளாக இருந்த பெண் இன்று முதல் என் மனைவியாகி என் குடும்பத்தை, குடும்ப கௌரவத்தைக் காப்பாற்றி, எனக்கு வாரிசுகளைப்

பெற்றுத் தந்து, எங்கள் குலத்தை வளமைப்படுத்தி, பெருமைப் படுத்த வேண்டும் என்று கூறுவதாகப் பொருள்

*அம்பாளுக்கு அர்ச்சிக்கப்படும் அஷ்டோத்திரத்தில் கூட,*
*''காமேச பத்த மாங்கல்ய ஸூத்ர சோபித கந்தரா''*

என்று கூறப்படுகிறது.

**மெட்டி:**

இதனைப் பெண்கள், ஆண்கள் ஆகிய இருபாலரும் பண்டைய காலத்தில் அணிந்திருந்தனர். பெண்களின் கால் பெரு விரலுக்கு அடுத்த விரலில் அணிவார்கள்.

மெட்டி அணியும் விரலுக்கும் பெண்களின் கர்ப்பப்பைக் கும் மிகவும் தொடர்பு உண்டு. மெட்டி மெல்லியதாக அந்த விரலை அழுத்தும்போது 'அக்குபஞ்சர் சிகிச்சை' முறையில் கர்ப்பப்பைக்கு வலுவூட்டுகிறது. இதனால் சிரமமின்றிப் பிறக்க ஏதுவாகிறது.

பெண்ணின், கால்கட்டை விரலுக்கு அடுத்த விரலில் கருப்பையின் நரம்பு நுனிகள் வந்து முடிகின்றன. இம்மெட்டி, நடக்கும்போது விரல் அழுத்தப்படுவதால், அதாவது, கருப்பை வளர்ச்சிக்கு ஏதுவாக அமைகிறது.

*''நாஹம் ஜானாமி கேயூரே*
*நாஹம் ஜானாமி குண்டலே*
*நூபுரேத்வபி ஜானாமி நித்யே*
*பாதாப்ஹ வந்தனாத''*

என்கிறது வடமொழி சுலோகம்.

காலில் அணியும் மெட்டி ஒலியை வைத்தே கணவர் 'தம் அன்பு மனைவி வருகிறாள்' என்று கண்டுபிடித்து விடுவார்.

'ஆண்கள் சங்ககாலத்தில் ஏன் மெட்டி அணிந்தார்கள்?' என்றால், தலை குனிந்து எதிரில் வரும் பெண்களுக்கு, 'இந்த ஆண் திருமணம் ஆனவர்' என்று தெரிந்து கொள்ளவே ஆகும்.

சீதையைப் பிரிந்து துயரில் வருகின்ற இராமர், வழியில் சிதறிக் கிடக்கும் ஆபரணங்கள் ஒவ்வொன்றையும் எடுத்துப் பார்க்கின்றார். ''இலட்சுமணா, இது சீதையுடையதுதானா?'' என்று காட்டி இராமர் கேட்க, இலட்சுமணன் பாதசங்களை (மெட்டி) எடுத்துக் காட்டி இது சீதா பிராட்டியினுடையது; தான் என்றான். இதிலிருந்து தனது அண்ணன் மனைவியான சீதா பிராட்டியை, நேருக்கு நேர் நிமிர்ந்து நின்று இலட்சுமணன் பார்த்ததில்லை' என்பதும் விளங்குகின்றது.

## பொட்டு:

பெண்கள், குழந்தைகளுக்குப் பிறந்தது முதலே பொட்டு வைத்து வருகின்றனர். நெற்றியிலுள்ள பொட்டானது மங்கள கரமாக இருப்பது மட்டுமன்றி, பெண்களைப் பிறர் வசியம் செய்ய முடியாததற்கும் உதவுகிறது. கண்களையும் நெற்றிப் பொட்டையும் குறித்து, பெண்களை வசியம் செய்பவர்களின் வசியத்தைத் தடுக்கக் கூடிய சக்தி பொட்டுக்கு உண்டு. முடிந்தவரை மற்ற ஆண்களின் கண்களைப் (கணவரின் கண்களைத் தவிர) பெண்கள் நேருக்கு நேர் பார்ப்பதைத் தவிர்க்க வேண்டும். பிற ஆண்களின் கண்களைப் பார்க்கும் போது வசியம் செய்யும் ஆணாக இருந்தால், எளிதில் வசியம் செய்து விடுவார்கள்!

பொட்டு வைப்பது தியானம் செய்பவர்களுக்குப் பெரிதும் உதவுகிறது. நெற்றியைத் தொட்டபடியே பொட்டு இருப்பதால், எப்போதும் பெண்களுக்கு ஆஞ்கை உணர்வுகள் இருந்து கொண்டேயிருக்கும்.

## அம்மி மிதித்தல்:

கல் உடையும்; வளையாது அதுபோல், பெண்கள் வளையக் கூடாது. அம்மிக் கல்லைக் கொண்டு செய்வது. அம்மி மிதித்தல் வாழ்க்கையும் கடினப் பாதையால் ஆனது என்பதை உணர்த்துவது இதன் பொருளாகும்.

மணமகன், மணமகளின் வலக்காலைத் தூக்கி, அம்மியின் மேல் வைப்பான். இதன் அர்த்தமானது, ''கடினமான வாழ்க்கைப்

பாதையின் முதல் அடியாக வலக்காலை வைத்து, என்னுடன் கைகோத்து, ஐக்கியமாகி இன்பத்திலும் துன்பத்திலும் எனக்கு உதவி புரிந்து வாழ்க்கைத் துணையாக வந்து நம் குடும்ப வம்சத்தையும் மேலோங்கச் செய்யத் துணை புரிவாயாக'' என்று கணவன் மனைவியிடம் மனதளவில் கூறுவது ஆகும்.

**அருந்ததி (நட்சத்திரம்) பார்த்தல்:**

வசிட்டரும் அவர் மனைவி அருந்ததியும் மனத்தளவிலும் உடலளவிலும் கருத்து ஒருமித்து வாழ்ந்து வந்தார்கள், என்றும் அவர்கள் நட்சத்திரங்களாக வானில் இன்றும் உள்ளனர் என்றும், நம் முன்னோர்கள் கூறுவர். அவர்களைப்போல் மணமக்களும் ஒருமித்து மகிழ்வுடன் இணைபிரியாமல் வாழ வேண்டும் என்று, பெரியோர்கள் அருந்ததியை மணமகளுக்குக் காட்டுவது போல் காட்சியை அமைத்து உணர்த்துவார்கள்.

வானத்தின் வடக்கே, சப்தரிஷி மண்டலம் தெரியும். இதை ஆங்கிலத்தில் (ursa major) என்று கூறுவார்கள். இந்த ஏழு நட்சத்திரங்களில் ஒரு நட்சத்திரத்தை நாம் வசிஷ்டம் அல்லது (mizr) என்கின்றோம். அதன் வெகு அருகில் உள்ள ஒரு மங்கிய அருந்ததி நட்சத்திரத்தையும் (mizr) என்கின்றோம். இவை புவிஈர்ப்பு மையத்தைக் கொண்டு சுற்றுகின்றன.

ஆகவே, இந்துக்களின் திருமணங்களால் புதுமணத் தம்பதியர் கருத்தொருமித்து இணைபிரியாமல் ஒன்றாக வாழ வேண்டும் என்பதையும் இருவரின் குறிக்கோள்கள், கருத் தொருமித்து இணைபிரியாமல் ஒன்றாக வாழவேண்டும் என்றும் பெரியோர்கள் அருந்ததி நட்சத்திரத்தை மணமக்களைப் பார்க்கச் செய்து உணர்த்துவார்கள்.

மணமகளை நோக்கி மணமகன், ''அருந்ததி நட்சத்தி ரத்தைப் பார்'' என்று கூறும்போது. இருவரும் முதன்முதலில் பேசிக்கொள்ள ஒரு சந்தர்ப்பமாக அந்நிகழ்ச்சி அமைகிறது. மேலும் திருமணம் முடிந்ததும், தேங்காய் உருட்டல், அப்பளத்தைக் கொண்டு ஒருவரின்மேல் ஒருவர் அடித்துக்

கொள்ளல், பல்லாங்குழி விளையாடல், துண்டைத் தூளியாக்கித் தேங்காயைக் குழந்தையாக்கி, குழந்தையைத் தூளியில் இட்டு அதை ஆட்டும்படியும் மணமகன் கூற தனக்கு வீட்டில் அடுப் படியில் வேலை இருப்பதாக மணமகள் கூற பின் சிறிது நேரம் கழித்து மணமகன் வேலைக்குச் செல்ல நேரம் ஆகிவிட்டதாக வும் தூளியைப் பிடித்துக்கொள்ளுமாறு கூறுவதைப் போலவும், காட்சியை அமைப்பர்.

அரசாணைப்பானை ஒன்றில் சங்கு, மோதிரம் போன்ற பொருட்களைப்போட்டு, அதை மணமக்களைக் கொண்டு எடுக்கச் செய்வர். அப்போது இருவருக்கும் தொடுஉணர்தல் ஏற்படுகிறது.

இவ்வாறு விளையாட்டுகளை அமைப்பதால், இருவருக்கும் உள்ள கூச்சத்தைப் போக்கவும் இது ஏதுவாக அமைந்துவிடும்.

**வளைகாப்பு:**

வளைகாப்பின்போது ஐந்து கலவைச்சாதம், ஏழுவகைக் கலவைச்சாதம், அல்லது ஒன்பது வகையான கலவைச் சாதம் என்றும், இனிப்பு, உவர்ப்பு, கார்ப்பு, புளிப்பு எனப் பலவகை களில் எலுமிச்சஞ் சாதம், புளிச்சாதம், தயிர் சாதம், தேங்காய் சாதம், வெண்பொங்கல் எனப் பலவகைப்பட்ட சாதத்தை உண்பதால் கர்ப்பிணிப் பெண்களுக்கு சக்தி கிட்டும். வயிற்றில் இருக்கும் குழந்தைகளுக்கும் கொஞ்சம் சேரும். வளையல்களை பார்க்கப் பார்க்கப் பெண்ணுக்குத் தான் தாய்மை அடைந்த பெருமையும் ஆனந்தமும் இருக்கும்; மனமகிழ்ச்சியும் ஏற்படும்.

**பெயர் சூட்டல்:**

இந்தத் தாய்க்கும், இந்தத் தந்தைக்கும் பிறந்த குழந்தை என்றும் இனி வரும் காலம் முழுவதும் அப்பெயரிலேயே விளங்கி, சீரும் சிறப்புமாக வாழ, நாம் குழந்தைக்குப் பெயர் சூட்டுகிறோம். அப்போதிலிருந்தே இறக்கும்வரையிலும், இறந்த

பின்னும் தலைமுறை தலைமுறையாக வருவது குழந்தைக்குப் பெரியவர்கள் வைத்த பெயர்கள் மட்டுமே ஆகும். இராமர், கிருஷ்ணன், இராஜராஜ சோழன், பாண்டிய மன்னர், அகத்தியர் மற்றும் சித்தர்கள், ஞானிகள், ரிஷிகள் விஞ்ஞானிகள் தலைவர்கள் என்று அவரவர்களின் பெயர்களை மறக்காமல் பல்லாயிரம் ஆண்டுகள் கழிந்தாலும், பலநூற்றாண்டுகள் ஆயினும், மறக்காமல் இருக்க அவர்கள் வைத்திருக்கும் பெயர் களும் ஒரு காரணம். ஒருவரை ஒருவர் அடையாளம் காட்டுவது அவரவர்க்கு இருக்கும் பெயர்கள் தாம்.

**பூப்பெய்தல்:**

'ஒருபெண் திருமணத்திற்கும் வாரிசகளை உருவாக்கவும் தகுதியானவள்' என்பதை இயற்கை தெரிவிக்கும் ஒரு செயலே பூப்பெய்தல் ஆகும். இதனைப் பருவமடைதல் என்பர்.

**கோலம் போடுதல்: (கோலம் = அழகு)**

பழங்காலத்திலிருந்தே எல்லா வீடுகளிலும் மாக்கோலமு ம், அதைச்சுற்றிக் காவியிடுதலும் வழக்கமாக இருந்துகொண்டு வருகிறது. விடியற்காலை எழுந்ததும் வாசலைப் பெருக்கி, சாணத்தால் வாசலைத் தெளித்து, திரும்பவும், தெளித்த எல்லா இடத்தையும் நன்கு பெருக்கிக் கோலமாவைக்கொண்டு, புள்ளி இல்லாக் கோலம், புள்ளியுள்ள கோலம் என்று வாசலில் வரைந்து அக்கோலத்தைச் சுற்றிலும் எல்லைக் கோடு வரைந்து, கோலத்தைச் சுற்றி உள்ளும் வெளிப்புறமும் காவியிட்டு அழகு சேர்ப்பார்கள்.

இச்செயல்கள் அழகு மட்டுமல்ல, கோலம் போடும் பெண்கள் குனிந்து நிமிர்வதால், இடை அழகாகும். கர்ப்பப்பை சுத்தமும் வளர்ச்சியும் அடையும் என்பது விஞ்ஞான பூர்வமான கண்டுபிடிப்பு ஆகும்.

சில வீடுகளில் அரிசியை மாவாக்கிக் கோலம்போடும் போது எறும்புகள் வரிசையாக வந்து அதனை உணவாக எடுத்துச் சென்று, சாப்பிட்டு வாழும். இதனால், பலநூறு

உயிர்களுக்கு உணவைக் கொடுத்த தர்மம் நம்மை வந்தடையும். வீட்டிலும் எறும்புகள் சர்க்கரை மற்றும் இனிப்புகள் உள்ள பண்டங்களை மொய்த்து அசுத்தம் செய்யாது.

காவிமண் வாசனை, புழுப் பூச்சிகளை அண்டவிடாது. இதற்குத் துவர் மண் என்ற பெயரும் உண்டு. பருப்பும் சில உணவுப் பொருட்களும் கெடாமல் இருக்க, இம்மண்ணிலே முளைகட்டி இரண்டு, மூன்று நாட்கள் ஊறவைத்து, உலர வைத்து, பிறகு உலர்த்தி, உடைத்து, பருப்பாக ஆக்கி வருகிறார்கள். அக்காலத்தில் துறவிகள் தவம் செய்யும்போதும் மரத்தடியிலும் சத்திரங்களிலும் உறங்கும்போதும் தம்மை விஷ ஜந்துக்கள் தீண்டாமலிருப்பதற்காகவும் காவி உடை அணி கின்றனர். வெண்ணிற ஆடையைச் செம்மண்கரைந்த நீரில் நனைத்துக் காவியுடை தயாரிப்பது துறவிகளின் வழக்கம்.

தீபம் ஏற்றுதல்;

உலகத்தில் பலநாடுகளில் காலையிலும், மாலையிலும் விளக்குகளில் எண்ணெய் ஊற்றி, திரிபோட்டு, தீபத்தை, ஏற்று கின்றனர். நம் இந்திய நாட்டிலும், திபெத்திலும், நேபாளத்திலும் தீபத்தை ஏற்றுகின்றனர். மற்ற மேலை நாடுகளில் மெழுகு வர்த்தி ஏற்றுவார்கள்.

முன்காலத்திலும் இரவில் ஏற்படும் இருட்டைப் போக்கத் தீபஒளி உதவியது. அதனையே வழிபாட்டிற்கும் ஒரு நடைமுறையாக மக்கள் பயன்படுத்திக் கொண்டனர். இதனால் இரவில் வரும் பூரான், பாம்பு போன்ற விஷப்பூச்சிகளிட மிருந்து தன்னைக் காத்துக்கொள்ள, இரவில் விளக்கேற்றி வைத்தனர்.

அதில் மருந்து குணங்களும் பொருந்தியுள்ளது. நல்லெண்ணெய், வேப்பெண்ணெய், தேங்காய் எண்ணெய், நெய், இலுப்பை எண்ணெய் இவை ஐந்து கலந்து விளக்கு ஏற்றுவோம். அல்லது எந்த எண்ணெய் ஊற்றி, தீபத்தை ஏற்றி தீபஒளியைப் பார்த்து, மந்திரங்களைச் செபித்து, கடவுளைத் தொழும்போது, எண்ணெயின் மூலமாகக் குளிர்ச்சி ஏற்பட்டு,

நம் கண்களைக் குளிரவைக்கிறது. பார்வையில் தெளிவு ஏற்படும். தினமும் தீபத்தை ஏற்றி இறைவனைத் தொழு வதால், ஆன்மீக வளர்ச்சி ஏற்பட்டு, தர்ம வழியில் நம்மைக் கொண்டு செல்ல ஏதுவாக அமைகிறது.

**மஞ்சள் பூசுதல்:**

பழங்காலத்தில் மஞ்சள் தேய்த்துக் குளித்தல் என்பதை, அக்காலப் பெண்டிர் சம்பிரதாயமாக வைத்திருந்தனர். நம் தமிழ்நாட்டில் உள்ள பழம்பாடல்களில் பெண்டிர் ஆற்றில் குளிக்கும்போது மஞ்சளைப் பூசிக்குளித்தனர் என்று எழுதப் பட்டுள்ளது. இது மருத்துவத் தன்மையும் கொண்டது. மஞ்சள் ஒரு கிருமி நாசினியும் கூட என்பதை அறிய வேண்டும். மஞ்சளிலுள்ள இரசாயனப்பொருளானது நம் உடம்பினுள்ளே சென்று, தேவையற்ற முடிகள் முளைக்காமல் இருக்க உதவுகிறது. முகத்தில் பருக்கள், உரோமங்கள் தோன்றாமல் பாதுகாக்கும் தன்மையைக் கொண்டது. கருமை நிறம் சற்று மாறிப் பொன்னிறமாகும்.

மஞ்சளைச் சித்தமருத்துவர்கள் பயன்படுத்தி வந்தனர் தொண்டையில் புகைச்சல் இருப்பவர்கள், ஜலதோசம் பிடித்த வர்கள், பாலில் மஞ்சள்தூள் ஒரு சிட்டிகை போட்டு, காலை, மாலை, இரவு என்று மூன்று நேரமும் மூன்று நாட்கள் குடித்து வந்தால் ஜலதோசம் நீங்கும். வறட்டு இருமல் குறையும். விளக்கில் விரலி மஞ்சளைச் சுட்டு, மூக்கின் வழியே அதன் புகையைச் சுவாசிக்க நெஞ்சுச் சளி நீங்கும்.

**விபூதி அணிதல்:**

விபூதியை ஆணும், பெண்ணும் நெற்றியில் இட்டுக் கொள்வார்கள். இதனால் மனம் தூய்மை அடையும். அக்காலத்தில் தீய சக்தியான பேய், பிசாசுகள் அண்டாது என்றும் நம் முன்னோர்கள் கூறினார்கள். ஜலதோசம் உள்ளவர்கள், விபூதியை நீரில் குழைத்து, நெற்றியில் பற்றுப் போட்டால் முகத்தில் இருக்கும் நீர் குறைந்து, ஜலதோசம் குறையும்'.

## மாவிலைத் தோரணங்கள் கட்டுதல்:

நாம் வெளியிடும் அசுத்தக் காற்றான கார்பன்-டை-ஆக்ஸைடை மரங்கள் பகலில் கிரகித்து, பின் வெளியிடும் ஆக்ஸிஸனை நாம் சுவாசித்து உயிர் வாழ்கின்றோம். விழாக் காலங்களிலும். வீட்டில் விசேசம் நடக்கும்போதும் நாம் வாசலில் புதிய மாவிலையால் தோரணங்கள் கட்டுகிறோம். நம் வீட்டிற்கு வரும் விருந்தினரும் நாமும் விடும் கார்பன்-டை-ஆக்ஸைடு என்கின்ற அசுத்தக் காற்றை, மாவிலை கிரகித்துக் கொள்ளும். மேலும் நம் வீட்டில் விசேசம் என்பதை மற்றவர்கள் அறியவும் இது ஏதுவாகும்.

## மூக்குத்தி:

மூக்குத்தியைப் பெண்கள் அணிவதால் அழகு கூடுவது மட்டுமின்றி, அக்குப்பஞ்சர் முறையில் செயல்படுகிறது. தூய காற்றை, மெல்ல மூக்கிற்கு அனுப்பி வைக்கிறது, தூசுகளைத் தடுத்து விடுகிறது. மூக்குத்தியை ஆள்காட்டி விரல் நுனியில் பாதி அளவு மூக்குக் குத்த வேண்டும். அதற்கு மேல்பாகத்தில் குத்தினால், கோபக்காரியாக மாறிவிடுவாள் என்பது நம் முன்னோர் வாக்கு!

## காது குத்தல்:

காதில் பாரம் இருந்தால், செவி நன்றாக வேலை செய்யும். காதுக் கோளாறு நீங்கும். ஆண்கள் இறக்கும்போது வீரத் தழும்புடன் இருக்க வேண்டும் என்பர். காது குத்துவதால் இது நிவர்த்தியாகிறது. உருவமின்றிப் பிண்டமாகக் குழந்தை பிறந்தாலும் அதனை வாளினால் கீறி, அதன் பின்னரே புதைப்பர் என்பது இலக்கியம்.

## மருதோன்றி இடல்:

நம் பாரத நாட்டில் உள்ள அனைத்துப் பெண்களும் விழாக் காலங்களிலும், வீட்டின் விசேச காலங்களிலும் மருதோன்றி இலையை அரைத்து, பதப்படுத்தி, இட்டு, கைகால்களை அழகு படுத்திக் கொள்கிறோம். மருதோன்றி இட்டுக் கொள்வதால் நம் உடம்பிலுள்ள பித்தத்தை அது உறிஞ்சிக்கொள்கிறது.

மேலும், நம் உடம்பிலுள்ள சூட்டினையும் அகற்றுகிறது. மருத்துவ ரீதியாகவும் பயன்படுகிறது. சில நோய்களைப் போக்க மருத்துவர்கள் இதனைப் பயன்படுத்துவார்கள்.

**பசுவை ஏன் தொழுது பாதுகாக்கின்றோம்?**

உலகின் அனைத்து இடங்களிலும் பசுவைப் பாதுகாத்து வளர்க்கின்றனர். பசுவின் கொம்பிலிருந்து உடலில் உள்ள அனைத்தையும் நாம் பயன்படுத்திக் கொள்கிறோம். பசுவின் பாலின் புரதச் சத்து உள்ளது. குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை பாகுபாடில்லாமல் எந்த நேரத்திலும் அருந்தக் கூடியது. நோயாளிகள் தாராளமாக உபயோகிக்கக்கூடியது. பாலிலிருந்து தயிரை ஆக்கியும், தயிரைக் கடைந்து மோராக்கி எவரும் குடிக்கக் கூடியது. இதில் உள்ள சத்து நம்மை இளமையாக வைத்துக்கொள்ள உதவுகிறது, உடம்பில் எண்ணெய்ப் பசைமாறாமல் இருக்க ஏதுவாகிறது, தயிரும், மோரும் நம் உடம்பிலுள்ள சூட்டினைக் குறைத்து உடம்பைக் குளிர்ச்சி அடையச் செய்கிறது. தயிரைச் சிகைக்காய் தூளுடன் சேர்த்து, தலைக்குக் குளித்தால் முடியானது பளபளப்புடனும் செழிப்புடனும் வளரும்.

பாலை உறையிட்டுத் தயிராக்கி, தயிரைக் கடைந்து, மோராக்கும்போது வெண்ணெய் திரண்டு வரும். இந்த வெண்ணெயைக் குழந்தைகள் அப்படியே உண்ணுவார்கள். அவை திடமுடன் திகழும்.

வெண்ணெயை உருக்கினால் நெய் வரும், இதைச் சுவை யான பலகாரம் செய்யவும், பருப்புச் சாதம், சாம்பார்ச் சாதம் போன்ற வற்றில் உபயோகிக்கலாம். விழாக் காலங்களிலும், திருமணங்களின் போதும், யாகத்தின் போதும் நெய்யைத் தாராளமாகப் பயன்படுத்துவார்கள். தீபத்தை ஏற்றவும் உப யோகிப்பார்கள்.

**கோமியம்:**

பசுவின் சிறுநீரைக் கோமியம் என்று கூறுவோம். வீட்டில் யாகம் செய்யும்போது கோமியம், பால், தயிர், தேன்,

பழம் இவற்றைச் சேர்த்து, 'பஞ்சாமிர்தம்' என்று யாக பூஜை முடிந்ததும் நமக்குத் தருவார்கள். குழந்தைக்குப் பேர் சூட்டும் போதும் பெற்றவர்களுக்கும், குழந்தைகளுக்கும் சிறிய அளவில் அருந்தச் செய்து, வீடு முழுவதும் தெளிப்பார்கள். மருத்துவரீதியில் கோமியம் ஒரு கிருமிநாசினி. வீட்டில் இருக்கும், கண்ணுக்குத் தெரியாத விஷப்பூச்சிகள் ஓடிவிடும்.

**சாணம்:**

பசுஞ்சாணம் மருத்துவ குணம் கொண்டது. கிருமி நாசினி யாகவும் உள்ளது. வீட்டினை மெழுகியும், வாசலில் தெளித்தும் முன் காலத்தில் உபயோகித்து வந்தனர். இதனால், புழுப்பூச்சிகள், பாம்பு, பூரான்கள், என்று எந்த விசப்பூச்சியும் வீட்டை அனுகாமல் இருக்கும். மேலும் இதை வறட்டியாகத் தட்டி எரியச் செய்து புகையை வீடு முழுக்கப் பரவச் செய்தால் கொசு வராது. வறட்டியை யாகங்களுக்குப் பயன்படுத்துவதன் மூலம் அதிலிருந்து வரும் புகையானது சுற்றுப்புறச் சூழ்நிலையில் உள்ள கிருமிகளை அகற்றி, சுற்றுப்புறத்தைத் தூய்மையாக்குகிறது. விஞ்ஞானிகளும், "தற்போது யாகத்தின் போது ஏற்படும் புகையானது, மேகத்தில் உள்ள அசுத்தத்தைச் சுத்தமாக்குகிறது என்று கண்டு பிடித்து உள்ளனர்.

சித்த மருத்துவர்கள் பஞ்ச கவ்யம் என்ற மருந்தைப் பசுவின் பால்+நெய்+தயிர்+கோமியம்+சாணம் என்று ஐந்து பொருட் களை அளவுடன் சேர்த்துச் செய்கின்றனர். இது சித்தப் பிரமையைப் போக்கக்கூடிய வல்லமை கொண்டது.

கன்று ஈனாப்பசுவின் சாணத்தைக் கீழே விழாமல் பிடித்து மூலிகைகள் சில கலந்து, வறட்டியாகத் தட்டிக் காய வைத்துப் புடம் போட்டுச் சாம்பல் ஆக்கி, அதை மெல்லிய துணியில் சலித்து, விபூதி செய்தனர். வாயில் போடும்போது, வாயிலுள்ள உமிழ் நீரில் கரைந்து நமக்குச் சிறுசிறு நோய் களைப் போக்கவல்லது. மூலிகைகள் கலந்து விபூதி செய்வதால் உடம்பிற்கு ஏற்றது.

பசுவிற்கு ஆகாரமாகப் புல், தவிடு, பழத்தோல், அரிசி கழுவிய நீர், சாதம் வடிக்கும் கஞ்சி, காய்கறிகளின் தோல்கள் வீணாகும் பழைய குழம்பு, ரசம், காய்கறிகள் அனைத்தும் சேர்ந்த நீரைச் சேமித்து, அந்த நீருக்குக் கழுநீர் என்று பெயரிட்டனர். இப்பெயர், நகரங்களில் சமீப காலங்களில் மறைந்து விட்டது. கிராமங்களில் இன்னும் அதே பெயருடன் திகழ்கிறது!

இவ்வாறு சத்தான சைவ உணவைப் பசுக்கள் உண்டு வாழ்வதால், பசு கொடுக்கும் பால் கோமியம், சாணம் அனைத்திலும் மருத்துவ குணங்கள் நிறைய உள்ளன.

பசுவின் கொம்பு கலைப்பொருட்கள் செய்வதற்குப் பயன் படுகிறது. பசுவின் தோல் கைப்பை செய்வதற்கும் இன்னும் பலவற்றிற்கும் பயன்படுகிறது.

**வடக்கில் தலை வைத்துப் படுக்காதே:**

நம் முன்னோர்கள் வடக்கே தலைவைத்துப் படுக்காதே. அப்படிப் படுத்தால் இறப்பு வெகுசீக்கிரம் வந்துவிடும் என்பதைத்

*''தன்னூர் கிழக்கு, தங்கின ஊர் மேற்கு,*
*வேட்டாம் தெற்கு, வேண்டாத வீடு வடக்கு!''*

என்றனர்.

''வடக்கில் தலைவைத்துப் படுக்கும்போது தெற்கில் முகம் பார்த்தபடி இருக்கும். நம் முன்னோர்கள் தெற்குத் திசை யமனுக்கு உகந்தது என்றும், தினமும் வடக்கில் தலை வைத்துப் படுத்தால் முகம் தெற்கைப் பார்த்துத் தூங்குவதால் யமன் பார்வையில் பட்டு நம்மை விரைவில் கொண்டு செல்வான்'' என்றும் கூறுவார்கள்.

சமீப கால விஞ்ஞானிகள் ஆராய்ச்சி செய்து, ''வடக்குப் பக்கம் காந்த ஈர்ப்புச் சக்தி அதிகம் உள்ளது என்றும், (அப்பக்கம் தலை வைத்துப் படுக்கும்போது நுண்ணிய சக்தியையும்

அலைகளையும் கொண்ட நம் மூளையின் அலைகள் வட பக்கம் அதிக அளவில் ஈர்க்கப்படுவதால் மூளை பாதிக்கும் என்றும், மூளை சொல்லும் கட்டளையை உடம்பு ஏற்று நடந்து வருவதால் உடம்பும் மூளையும் கெட்டு, உயிர் விரைவில் பிரிவதற்கு ஏதுவாக அமைந்து விடும்'' என்றும் விஞ்ஞான பூர்வமாகக் கண்டுபிடித்துள்ளனர்.

### தலை குளித்தல்:

வாரம் இரு முறையோ ஒரு முறையோ நாம் அனைவரும் தலைக்கு நல்லெண்ணெய் வைத்து, சிகைக்காய் போட்டுத் தேய்த்துக் குளிப்போம். இதனால், தலை சுத்தமாக இருக்கும். நல்லெண்ணெய் தேய்ப்பதால் தலைக்குக் குளிர்ச்சி ஏற்பட்டு உடம்பு முழுவதும் குளிர்ச்சி ஏற்படுகிறது. சிகைக்காய் + வசம்பு+ வெட்டிவேர்+ மருதோன்றி போன்றவை கலந்து அதில் உசிலம்பொடி சேர்த்து தலைக்குக் குளிப்பதால் பேன் போன்ற பூச்சிகள் ஒழியும். உடம்பு குளிர்ந்து, சுறுசுறுப்பைத் தரும். தலைமுடிகள் பளபளப்புடனும் அழகுடனும் வளரும். ஓடும் நீரில் தலை அமிழ்ந்து குளிப்பதால் உடல்சூடு குறையும். கழுத்து வரை குளிப்பதால் உடல் சூடு தலைக்கு ஏறி நோய் ஏற்படும்.

இதனையே ''தலையொழிந்தாடாரே.......... ஆய்ந்த அறிவினவர்'' என்கிறது நீதிநெறி விளக்கம்.

குளிர்ந்த நீரில் குளிப்பதே சாலச்சிறந்தது இதை ஔவையும் ''சனிநீராடு'' - என்றார்

*(சனி = குளிர்ச்சி)*

### சாம்பிராணி:

இது மட்டிச் சாம்பிராணி, பால் சாம்பிராணி என்று இரு வகைப்படும். இரண்டையும் சமமாகக் கலந்து, அத்துடன் ஓமம் கலந்து கொள்ள வேண்டும். இப்பொடியைத் தினமோ, செவ்வாய்க் கிழமை அல்லது வெள்ளிக் கிழமைகளிலோ புகை

போட்டு வீடு முழுவதும் காட்டலாம். சாம்பிராணி ஒரு கிருமி நாசினி. ஆதலால், வீட்டிலுள்ள பூச்சிகள், கொசுக்கள் போன்றவை வெளியேறிவிடும். இது நன்கு மணப்பதால், நம் மனத்திற்கும் சுகம் ஏற்படும், சுவாசிப்பதால், நம் நெஞ்சில் உள்ள ஜலதோசம் நீங்கும். குழந்தைகளும் ஆண்களும், பெண்டிரும் தலைகுளித்த பின் புகைபோடுவதால், தலையில் தேங்கியிருக்கும் நீர் ஆவியாகி, தலையில் நீர் தங்கி சளி பிடிக்காது; தலையும் மணம் வீசும்.

**பண்டிகை:**

பண்டிகை என்னும் விழாவை நம் இந்திய மக்கள் அதிக அளவில் கொண்டாடுகிறோம். விநாயகர் சதுர்த்தி:- இப்பண்டிகையை விநாயகர் பிறந்த நாளாக நாம் இந்தியா முழுவதும் கொண்டாடுகிறோம். அப்போது கொழுக்கட்டை, பொரி, விளாம்பழம், பழவகைகள், சுண்டல் போன்றவை வைத்துக் கும்பிடுவோம். இதன் மூலமாகப் பல வகை சத்துகள் நம் உடலில் சேரும்.

கார்த்திகை தீபத்தை முருகன் பிறந்த நாளாகக் கொண்டாடு கிறோம் ஐப்பசி முழுவதும் அடை மழையாக, பருவ மழை பெய்து நாடே ஈரத்துடன் இருக்கும். கார்த்திகை மாதம் நாடு முழுவதும் தீபம் ஏற்றுவதால், அதன் வெப்பமும் அச்சமயம் திருவண்ணாமலையில் ஏற்றும் தீபத்திலும் சீதோஷ்ண நிலை மாறுவதால் ஈரப்பதமும் மாறி, நாட்டின் வானிலை சமநிலை அடையும்.

நவராத்திரி என்கின்ற பண்டிகையை நாம் 9 நாட்களில் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பலகாரம் செய்து ஆதிபராசக்தி பார்வதி, சரஸ்வதி, லஷ்மி என்று மூன்றாகப் பிரித்து ஒவ்வொரு தெய்வத்திற்கும் மூன்று நாள் என்று வணங்குவோம்.

**தீபாவளி:-** இப்பண்டிகையை இந்திய நாடு முழுவதும் கொண்டாடுவோம். இப்பண்டிகையை, இராமர் இராவணனை அழித்துவிட்டு, நாடு திரும்பும்போது, நாடே தீபங்களை ஏற்றிக்

கொண்டாடிய நாளே தீபாவளிப் பண்டிகை என்று புராணக் கதைகள் கூறுகிறது.

பொங்கல் பண்டிகையை நாம் தமிழர் திருநாள் என்றும் வடநாட்டில் சங்கராந்தி என்றும் கூறி வணங்குவோம். அப்போது நாம் புதிதாக அறுவடை செய்த அரிசியுடன், வெல்லம், நெய், பால் சேர்த்து பொங்கல் செய்து, பயிரிட்டு, அறுவடை செய்த கரும்பையும், மஞ்சளையும், பழங்களையும் சூரிபகவானுக்கு வைத்து மகிழ்வுடன் கும்பிடுவோம்.

இன்னும் பல பண்டிகைகள் வெள்ளிக்கிழமை விரதம், செவ்வாய்க்கிழமை விரதம், பௌணர்மி விரதம், ஏகாதசி விரதம், பிரதோசம் என்று பல வகை விரதங்களும் உண்டு. இவ்வாறு பண்டிகைகளை நாம் கொண்டாடுவதால்,

1. மனக்கட்டுப்பாடு ஏற்பட்டு மனதை நல்வழியில் செலுத்த உதவுகிறது.

2. ஒவ்வொரு பண்டிகையின்போதும் பல பலகாரங்கள் செய்து கடவுளுக்குப் படைத்துச் சாப்பிடுவோம். அரிசியில் ஸ்டார்ச் சத்தும், வெல்லத்தில் இரும்புச் சத்தும் நெய்யில் புரோட்டீன் என்றும் பலவகைச் சத்துக்களை நாம் சேர்த்து உண்பதால் நம் உடல் பலமுள்ளதாக மாறுகிறது.

3. நாம் செய்யும் பலகாரங்களையும், உணவினையும் சுத்த மாகவும், சுகாதாரமாகவும் செய்வதால் உணவும் புனிதமாகிறது.

4. வீட்டிலுள்ள அனைவரும் அன்று முழுவதும் மகிழ்வுடன் இருப்போம்.

# 14. மனம்

''மனதை உடையவன் என்பதனால் மனிதன் என்றே பெயர் பெற்றான்.''

மனம் என்றால் எண்ணம் என்றும், குணம் என்றும் பொருள். நம் உடலில் உள்ள உயிர் அலைகளும், நம் மூளையில் பதிவு செய்யப்பட்ட எண்ண அலைகளும் சேரும் போது மனம் உண்டாகிறது.

உடலும் உயிரும் சேர்ந்து இயங்கும்போதுதான் மனம் என்ற ஒன்று விளக்கமாகவும், இயக்கமாகவும் நடைபெற்று வருகின்றது. அந்த நிலையைதான் மனம் என்று குறிப்பிட்டுச் சொல்கின்றோம். அதைத்தான் குணம் என்றும் மனிதத் தன்மை என்றும் கூறுகின்றோம். உயிருக்கும் மனத்திற்கும் என்றும் அழிவில்லை.

மனதில் என்ன தன்மை உண்டாகிறதோ அதுவே மனிதத் தன்மையாக மாறுகின்றது.

மாண்பு, மனிதனின் மாண்பாக மாறுகிறது. மனதின் உயர்வு மனிதனின் உயர்வாகிறது. மனதின் தூய்மை மனிதனின் தூய்மையாகிறது. ஒருவரின் மனதை எவ்வாறு வலுப்படுத்தி, நெறிப்படுத்தி வாழ்கிறோமோ அவ்வாறு அவரின் வாழ்க்கையில் மதிப்பும், மரியாதையும், வெற்றியும் தோன்றும்.

மனதின் உயர்வுக்கு இராமாயணத்திலுள்ள இராமரைக் காரணம் காட்டலாம். பெற்றோருக்குக் கீழ்ப்படிதல், குருவுக்கு மரியாதை காட்டல், தன் இனத்தவரிடமும் அல்லது மற்ற இனத்தவரிடமும் அன்புகாட்டல். பிறன்மனை நோக்காமை, நீதிநெறியோடு வாழ்தல் என்று, பல நல்ல மனத்தினால் நல்ல

முறையில் ஆட்சி பெற்று இராமர் இன்றும் வாழ்ந்து கொண்டு இருக்கின்றார்!

நம் மனமாகிய எண்ணங்கள் என்றுமே நம்முள்ளேயே ஓடிக்கொண்டிருக்கும். நம் மனதை அடக்க நினைத்தால் அலையும். அலைகின்ற மனதை அறிய நினைத்தால் அடங்கும், நல்ல செயலை எண்ணிக் கொண்டே இருந்தால், நல்லதே நடக்கும்.

அதை விடுத்து, தீயதை நினைத்துத் தீயதைச் செயல் படுத்தினால், தீயதுதான் நடக்கும்.

கவிஞர் கண்ணதாசன் அவர்கள்,

*''கண் போன போக்கிலே கால் போகலாமா?*
*கால் போன போக்கிலே மனம் போகலாமா?*
*மனம் போன போக்கிலே மனிதன் போகலாமா?*
*மனிதன் போன பாதையை மறந்து போகலாமா?''*

என்று பாடியுள்ளார்.

மனம் கடிவாளம் இல்லாத ஒரு குதிரை! அதை நம் கட்டுப்பாட்டில் வைத்துக்கொள்ள வேண்டும். கெட்ட வழியில் போகும் மனதை அடக்க ஒரு மனம் வேண்டும். அதுவே மனச் சாட்சி. அந்த மனச்சாட்சி, கெட்ட மனதை நோக்கி, ''நீ இதைச் செய்யாதே, இது தவறான வழி'' அதை விடுத்து, இந்த நல்ல பாதையில் சென்றால் உனக்கு நல்லது ஏற்படும்'' என்று சொல்லும்.

அதனால்தான், ''ஒரு செயலைச் செய்யும்போது நன்கு பகுத்தறிந்து, அலசி ஆராய்ந்து செய்தால் அது நன்மையில் முடியும்'' என்று நம் முன்னோர்கள் கூறுவார்கள்.

மற்றவர்கள் நலனுக்குக் கெடுதல் செய்யாமல், மற்றவர் களுடன் இசைந்து வாழ்வதுதான் நல்ல மனிதனுக்கு அடையாளம். இதனால், ஒழுக்கமான நல்ல மனிதன் என்று பார்ப்பவர்களும் பழகுபவர்களும் கூறுவர்.

பிறருக்குக் கேடு விளைவிக்கும் செயல்கள் அனைத்தும் ஒழுக்கக் கேடான செயல்கள் ஆகும். ஒருவர் மற்றவரைத் திட்டுகிறார். திட்டு வாங்குபவரின் மனம் புண்படும். பிறரிடம் பொய் பேசுவதால் பேசுவதைக் கேட்பவர் பலவிதங்களிலும் ஏமாற்றம் அடைகின்றார். பிறரைப் புறங்கூறுவதால் மற்றவர் மனம் புண்படுகிறது. இவ்வாறு நல்ல மனதிற்கு எதிராக நடந்து வாழ்க்கையை நடத்துபவர்கள் புகழ் எய்த முடியாது. அவர் களுக்குப் பழி வந்து சேரும். அவர்களை பலரும் வெறுப்பர்.

நம் ஒவ்வொருவருக்கும் உணரும் திறன் உண்டு. 'எது நல்லது? எது தீயது? என்றும், தீயதைச் செய்யக்கூடாது. என்றும், நல்ல மனம் நம்முள் ஒலிக்கும். அதுவே நம் மனச்சாட்சி.

நல்ல மனதுடைய பெற்றோர்கள் தம் குழந்தைகளைத் தம்மைவிட அறிவிலும் படிப்பிலும் தொழிலிலும் வாழ்க்கை யிலும் உயர்ந்த நிலையில் நஷ்டங்களையும் பொறுத்து, அவர் களைப் படிப்பிலும் அந்தஸ்திலும் உயரவைப்பார்கள்.

நல்ல மனதுடைய குழந்தைகளாய் இருப்பின், பெற்றோர் களை ஒவ்வொரு நாளும் நன்றியுடன் நினைக்க வேண்டும். படிப்பைக் கொடுத்த தாய் தந்தையரைப் படிப்பில்லாத அறிவிலி யாக நினைக்கக் கூடாது. அவ்வாறு நினைத்து, சமூகத்தில் தனக்கு ஒரு நல்ல அந்தஸ்தைக் கொடுத்த பெற்றோரை அவமதிக்கக் கூடாது. அவ்வாறு குணங்கெட்ட குழந்தையாக இருப்பின் பெற்றோருக்கு மன நஷ்டமும் பொருளாதார நஷ்டமும் ஏற்படும். வாழ்க்கைக்கு அமைதியான சூழ்நிலையில் நஷ்டம் ஏற்படும்.

இன்னும் பல விதங்களிலும் நஷ்டம் ஏற்படும்.

இது, 'பாலைவனத்தில் பெய்த மழை போல' வீணாகி விடும். அந்தக் குணங்கெட்ட மனங்கொண்ட குழந்தைகளும் வாழ்க்கையில் நிம்மதி இல்லாமல் வாழும்நிலை ஏற்படும். மேலும் பெரும்பாவத்தை மேற்கொள்ள நேரிடும். பிள்ளைகள் முதலில் அப்பா அம்மாவிடம் நல்ல குணத்துடன், நன்றியுடன் நடந்து கொள்ளவேண்டும்.

"இராவணன் மிக்க பலசாலி, தவசாலி. இறைவன் பரமேஸ்வரரே நேரில் வந்து அவன் இசையில் மயங்கி வரம் கொடுத்தான்" என்று இராமாயணத்தில் படிக்கின்றோம். இவை அனைத்தும் இருந்தும். இராவணனின் குணம், கெட்ட வழியில் சென்றதால், பிறர் மனைவியை அபகரித்ததால், பெரும் பழிக்கு ஆளாகி வீழ்ச்சியுற்றான்.




**நல்லகுணம்:-** அடுத்தவர் நலனை நேசிப்பது, உதவுவது. இரக்கம், கருணை, அன்பு, பிறரைப் பற்றி நல்லதையே நினைப்பது. எவ்வளவு உயர்வுடன் வாழ்ந்தாலும் பணிவாக இருப்பது. ஒழுக்கத்துடனும் நேர்மையுடனும் நடந்து கொள்வது. தர்ம வழியில் செல்வது இன்னும் சொல்லிக் கொண்டே போகலாம்.

**பொறாமை:-** தன் நிலை அறியாமல், 'தன்பலம், தன் பலவீனம் எது?' என உணராமல், தன் வாழ்விற்கு அடிகோலாமல், எதிரில் இருப்பவர்கள் வாழ்வதைப் பார்த்து அவர்களுக்கு ஏற்படும் நல்ல பெயர்கள், வசதிகள் என்று எதற்கெடுத்தாலும் மற்றவர்களிடம் வெறுப்பும் விரோதமும் கொண்டு அலைவது, தன் இயலாமையால் மற்றவர்களைத் திட்டியும் கொடுமைப் படுத்தியும் வாழ்வது, இதுவே பொறாமைக் குணத்தின் தன்மை. (உ.ம்) துரியோதனன், சூர்ப்பணகை ஆகியோரைக் கூறலாம். இக்குணத்தால் இவர்கள் தன்னைச் சார்ந்தவர்களுக்கு எப்பொழுதும் தொந்தரவு கொடுத்துக் கொண்டே இருப்பதால். இவர்களைச் சுற்றியுள்ளவர்களும் இவரின் குடும்பமும் மிகவும் பாதிக்கப்படும்.

**இரட்டை வேடம்:-** புலித்தோல் போர்த்திய பசுப்போல் காரணம் கொண்டும் காரணம் இல்லாமலும் சிலர் வாழ்நாள்

முழுவதும் நடித்துத் தன் குடும்பத்தையும் தன்னைச் சுற்றி உள்ளவர்களையும் பாதிப்புக்கு உள்ளாக்குவார்கள். இந்த நடிப்பால் பலன்கள் ஏதும் இல்லாமல் வாழ்நாளை வீணாக்கி முடிவில் மிகவும் பல கஷ்டங்களை மேற்கொண்டு இறப்பார்கள்.

**நல்லகுணம்:-** அல்லது நல்ல எண்ணம் என்பதே ஒரு சொத்துத்தான். அதை மற்றவர்கள் போட்டி போட்டுப் பறித்துக் கொள்ள முடியாது; அழிக்க முடியாது. நம்மை நாம் வெல்லாத வரையில் அறம் எதுவும் இல்லை. நல்ல எண்ணங்களினால் நல்லதுதான் விளையுமே அன்றித் தீமை விளையாது.

இரக்கமுள்ள மனதில் மகிழ்ச்சி குடிகொண்டிருக்கும். அந்த மனத்தில்தான் அன்பும், அறமும் தோன்றும். அன்பாகிய ஊற்றிலிருந்து ஆறுகளைப்போலப் பல நன்மைகள் பெருகிச் செல்லும். அவை மற்றவர்களின் நன்மைக்காகப் பெருகிக் கொண்டே இருக்கும் அதனால்தான் 'அன்பேசிவம்' என்றனர்.

**கோபம்:-** கோபம் என்பது மனம் என்னும் விளக்கை அணைத்துவிடும். அலையும் மனம் உள்ளவன் தன்னைத்தானே பிணைக்கும் சங்கிலியை உருவாக்கிக் கொள்கிறான். அலையும் மனதைக் கட்டுப்படுத்தியவன் உலகின் துயரங்களிலிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்கிறான். எதற்கெடுத்தாலும் கோபப் படுவது என்பது முற்றிலும் சுயநலத்தில் ஏற்படுவது. ஒருவரிடம் காரணம் இல்லாமல் வெறுப்பைக் காட்டுவது அரக்கரின் குணம், மற்றவரை மன்னிப்பது மனிதனின் குணம், பிறரிடம் அன்பைச் செலுத்துவது தெய்வத்தின் குணம்.

*"கோபம் கொள்ளாதே மனமே, கொண்டால்,*
*உனைக் காலன் கொண்டோடிவிடுவான்"*

சித்தர் பாடல்.

*"உச்சி வெயில் சூரியனை மேகம் மூடுது*
*நம் உள்ளம் எனும் சூரியனைக் கோபம் மூடுது*
*காற்று வந்தால் மறுபடியும் மேகம் ஓடுது*
*பேசிக் கலந்துவிட்டால் கோபம் மாறி நேசம் ஆகுது"*

என்று கண்ணதாசன் எழுதினார்.

வீணே கோபம் கொள்ளாமல், 'எதனால் கோபம் ஏற்படுகின்றது'? என்று அறிந்து, நம்மை நாமே சரிசெய்து கொள்ளல் வேண்டும்.

கடுவெளிச் சித்தர் உலகில் இருபத்தொரு தத்துவங்கள் உண்டு என்று கூறுகின்றார். அவ்வாறு உள்ள தத்துவங்களில் மனிதநேயம் என்று ஒன்றும் உள்ளது என்று கூறுகிறார்.

''மனிதனை மனிதன் மதிக்க வேண்டும். மனிதர்கள் தம் பெற்றோரை, சுற்றத்தாரை, படிப்பினை, ஒழுக்கத்தைப் போதிக்கும் குருவை மதிக்க வேண்டும்'' என்று கூறுகின்றார்.

ஒருவருக்கு ஒரு சமயம் ஒருவரிடம் அன்பு பெருகும். அவருக்கே அதே நபரின் மேல் வெறுப்பும் சில சமயம் ஏற்படும். இந்த மாறுபட்ட குணங்கள் எதனால்?

1. வளர்ப்பு முறை,
2. பழக்க வழக்கங்கள்,
3. அனுபவத்தின் ஏற்படுவது,
4. மனத்தினால் ஏற்பட்ட சூழ்நிலை.




''இரயில் சினேகம்'' அதாவது இரயில் பயணத்தின் மூலம் உண்டாகும் நட்பு, பஸ் பயணத்தின் மூலம் ஏற்படும் நட்பு, கல்லூரியில் உண்டாகும் நட்பு இவை நேரத்தைக் கடக்க மேற்கொள்ளும் நட்பாகும். இவை எல்லாவற்றிலும் மனித நேயத்தால் ஏற்படும் நட்பே சிறந்தது.

''இவை அனைத்திலும் சிறந்தது எது?'' எனில் ஒன்றைத் தெளிவாக்கிய பின், அதை மறக்காமல் கடைசி வரை எந்த நட்புச் செல்கிறதோ அந்த நட்பே சிறந்தது'' என்று கடுவெளிச் சித்தர் கூறுகிறார்.

**மனித நேயம் என்றால் என்ன?**

பண்பு, ஒழுக்கம், நேர்மை, கனிவு, இரக்கம், தர்ம குணம், இவை அனைத்தும் கொண்டே மனமே மனித நேயம் உடையது.

மனத்திற்கு இரண்டு மையம் உண்டு. ஒன்று விவேகம், மற்றொன்று விபரீதம். அதாவது,

இராமாயணத்தை எடுத்துக்கொண்டால் பெற்றோர்க்குக் கீழ்ப்படிதல், பிறர் மனைவியை நோக்காமை, அனைவரையும் அரவணைத்தல் போன்றவற்றை நல்ல வழியில் எடுத்துக் கொள்ளச் செய்வது விவேக மையம்.

''அதெல்லாம் அந்தக் காலத்தில் நடக்கலாம்; இக்காலத்தில் இதெல்லாம் முடியாத காரியம். பிறர் மனைவியை நோக்கக் கூடாது. ஆனால், திருமணம் ஆகாத கன்னிப் பெண்களை நோக்கலாமா?'' என்று விதண்டா விவாதத்தை எழுப்புவதுதான் விபரீதம் ஆகும்.

சரியான சமயத்தில், மனதைச் சரியான வழியில் செலுத்தினால் துன்பங்களிலிருந்து விடுதலை கிட்டும்.

ஒருவனுக்கு மனதில் மகிழ்ச்சி இல்லையெனில் அவன் வீட்டை விட்டு வெளியேறுகிறான். குடிப்பது மற்றும் கெட்ட வழியில் செல்கிறான். அப்போது அந்தத் துன்பத்திலிருந்து தற்காலிகமாக விடுதலை கிடைப்பதாக எண்ணிக் கொள்கிறான்.

இது அவனுக்கு ஏதோ சிறிதளவு இன்பம் கிடைப்பது போல் ஒரு மாயையை ஏற்படுத்தும். மேலும் மேலும் அதைத் தேடி ஓட, அவன் மனம் மேலும் கெட்டு, உடலும் கெட்டு விடுகிறது.

''பாலைவனத்தில் கானல் நீரைக் கண்டு ஓடும் மானைப் போல, இவன் மாயையை நோக்கி ஓடுகின்றான். அவ்வாறு இல்லாமல் தனக்கு ஏற்பட்ட துன்பம் எதனால் ஏற்பட்டது? அதை நீக்குவது எப்படி?'' என்று ஆராய்ந்து அறிந்து செயல் பட வேண்டும்.

''மனிதனே, உன்னால் ஏற்பட்ட மனத் துன்பத்திற்கு உன் மனைவிக்கும், குழந்தைகளுக்கும் ஏன் துரோகம் இழைக் கின்றாய்?'' இதனால், மனைவியிடமும் மக்களிடமும் மதிப்பிழந்து போகக் கூடிய சூழ்நிலை ஏற்படுகிறது.

தன் வாரிசுகளையும் தவறான பாதைக்குச் செலுத்தும் வழிமுறைகளைக் குடும்பத் தலைவனே காட்டுவது போல ஆகி விடும். அதே, ஒரு பெண் எவ்வளவு மனத்துயர் ஏற்பட்டாலும் சிந்தித்து, அதைத் தன்னால் முடிந்த அளவிற்கு நீக்க முயற்சி செய்து அதில் வெற்றி பெற்ற பெண்களும் பலர் உள்ளனர்.

பெண்ணானவள் மலரைப் போன்ற மென்மையான உள்ளம் கொண்டவள். அவளே துன்பத்தைத் தாங்கி வாழ்க்கையை நடத்திச் செல்லும்போது ஆண்களால் மனத் துயரைத் தாங்க முடியாதா? வந்த பிரச்சினைகளை அலசி ஆராய்ந்து நீக்க முடியாதா? எனவே புலன்களை அடக்கி, மனதைச் செலுத்தி, துன்பங்களைக் களைய வேண்டும்.

ஓர் ஆணுக்கும் பெண்ணுக்கும் உறவினர்களின் மத்தியில் ஏற்படும் இணைப்பே திருமணம் எனப்படும். இதனால் ஏற்படும் பந்தம், கணவன், மனைவி உடலும் உடலும் இணைவது மட்டுமல்லாமல் ஆன்மாவோடும் இணைவதே கணவன் மனைவி உறவிற்குப் பெருமையை ஏற்படுத்தும்.

ஓர் ஆண் திருமண வயதிற்கு வந்ததும் அதற்கப்பாலும் ஒரு பெண்ணைத் தேர்ந்தெடுக்கும்போது அவசரப்படாமல் மிகவும் கவனமாகப் பணம், நகை. வரதட்சணை, பெண் வேலைக்குப் போவதால் கிடைக்கும் வருமானம் போன்ற

வற்றிற்கு ஆசைப்படாமல், அப்பெண்ணின் மனதை மட்டும் கண்டறிந்து, திருமணம் செய்து கொண்டால் வருங்காலங்களில் வாழ்க்கையில் இன்பமே நிறைந்திருக்கும்.

திருமணம் செய்து கொண்டபின் ஒரு பெண்ணை அவள் கணவனே அதிகமாக அவளை அறிந்து கொள்கிறான். அதற்குப் பின்னும் தன் பெற்றோர்கள், சகோதர சகோதரிகள் அவளைச் சரிவரப் புரிந்து கொள்ளாமல் குறை கூறும்போது தன் குடும்பத் தாரிடம் மனைவியின் நிலைமையை விளக்கி, இருபக்கமும் ஒருவரை ஒருவர் புரிந்துகொண்டு வாழ வழி ஏற்படுத்த வேண்டும். இது ஒரு கணவரின் கடமை ஆகிறது.

மேலும், தங்கள் பக்கம் தவறில்லை எனப் பெற்றவர்கள் கூறினார்கள் என்று, அவள் மனதைக் கூறுபோட்டால், குடும்பம் விரிசல் கண்டுவிடும். மேலும், வாழ்நாள் முழுவதும் நிம்மதி கெட்டுவிடும். குடும்பம், குடும்பமாக இராமல் போர்க்களமாக மாறி சதா சண்டையும் சச்சரவுமாக இருக்கும்.

கணவன், மனைவி இருவருக்குமே குடும்பப் பொறுப்பு உள்ளது. குழந்தைகள் நல்ல வழியில் செல்ல இருவருக்குமே பொறுப்பு உள்ளது. 'சிவன் பெரிதா? சக்தி பெரிதா?' என்று ஒருவரை ஒருவர் சுட்டிக் காட்டிக் கொண்டிருந்தால் குடும்பம் இணையாமல் நீண்டு செல்லும் இரயிலின் தண்டவாளத்தைப் போன்று ஆகிவிடும்!

ஒருவரை ஒருவர், தத்தம் தவறுகளை உணர்ந்து திருத்திக் கொண்டு, ஒருவரை ஒருவர் மதித்து வாழ்ந்தால், நாம் நினைப்பது போல நம் குழந்தைகளை வளர்க்கலாம்.

பொதுவாகப் பெண்கள், தமக்குக் கிடைக்கும் கணவர், பொறுப்பு மிக்கவராக, கடமை உணர்ச்சி கொண்டவராக, நேர்மையாகவும் ஒழுக்கமுடனும் அன்புடனும் நல்ல உள்ளம் கொண்டவராகவும் இருக்க வேண்டுமென எதிர்பார்க்கிறார்கள். இதில் ஏமாற்றம் அடைந்தாலும் தன் குடும்பம் என்றும் தன் கணவன் என்றும் மனதைச் சமாதானப்படுத்திக்கொண்டு குழந்தைகள்மீது குடும்பத்தில் பாசம் கொள்கின்றனர்.

நெருப்பில் எப்பொருளைப் போட்டாலும் முடிவில் சாம்பலாகிவிடும். ஆனால், தங்கத்தை நெருப்பில் போட்டால் உருகினாலும் அது முடிவில் தங்கமாகவே இருக்கும். அது போல் ஒழுக்கமும் மனக்கட்டுப்பாடும் உள்ள மனிதன் எவ்வளவு துன்பமும் சோதனைகளும் ஏற்பட்டாலும் நல்ல மனிதனாகவே விளங்குவான்.

வைரம் விலையுயர்ந்த பொருள். அதைத் தீயிலிட்டால் கரியாக மாறிவிடும். அதுபோல், தவநெறியில் சிறந்து விளங்கி னாலும், ஒழுக்கம் இல்லாமல் போய்விட்டால் அழிய நேரிடும். அந்த ஒழுக்கத்திற்கு நல்ல மனம் வேண்டும்.

நம்மைக் காட்டிலும் இன்னும் துன்பப்படுபவர்களைப் பார்த்து மனதைத் திருப்தி செய்து கொள்ள வேண்டும். மனத் திருப்தியுடன் வாழ்வதுதான் மனித வாழ்வின் பூரணத்துவம் ஆகும்.

கஷ்டங்கள் வரும் சமயம் அழுது பயன் இல்லை! நம் அறிவை உபயோகிப்பதில் தைரியமும் சக்தியும் பரீட்சிக்கப் படுகின்றன. உண்மையில் இடையூறுகள்தாம் வாழ்க்கையில் சுவையூட்டுபவை. நம்மிடம் உள்ள மிக நல்ல குணங்களை வெளியில் கொண்டுவர இவை சவாலாக விளங்குகின்றன. இறைவன் நமக்கு ஞானத்தை (அறிவை) அளித்துள்ளான். அந்த ஞானத்தின் உதவியால், இடையூறுகளை வெல்ல வேண்டும்; திரும்ப ஏற்படாமல் அமைத்துக் கொள்ள வேண்டும்.

''ஒரு முறை ஏமாறுபவன் யதார்த்தவாதி, இரண்டாவது முறை ஏமாறுபவன் முட்டாள், மூன்றாவது முறை ஏமாறுபவன் மன்னிக்கத் தகுந்தவன் அல்லன்; அவன் கோழையாகிறான்!''

''குடும்பத்தில் என்ன சச்சரவு ஏற்பட்டாலும் தொல்லைகள் ஏற்பட்டாலும் அதையெல்லாம் மறைத்து வெளியில் மிகவும் சந்தோசமாக இருப்பதாகக் காட்டிக் கொள்வார்கள்.''

பொதுவாக, குழந்தைகளின் முன்னால், கணவனை மனைவியோ, மனைவியைக் கணவரோ, குறை சொல்லா

தீர்கள், இதனால் குழந்தைகள் உங்களிடம் அவமரியாதையாக நடந்துகொள்வார்கள். மனது மிகவும் பாதிக்கப்பட்டு கெட்ட வழியில் செல்ல அவர்கள் முயலக்கூடும். குடும்பத்தில் ஆணி வேர், அஸ்திவாரம், கணவன், மனைவியே, ஒருவரை ஒருவர் தாக்கிக் கொள்வது, 'சேற்றில் கல் எறிவது போல்' ஆகிவிடும்.

நெருப்பைச் சமையல் செய்ய, குளிர் காய, சவத்தை எரிக்க, விளக்கேற்ற என்று பல வகைகளில் நாம் பயன் படுத்தினாலும் நல்ல வகையில் பயன்படுத்துவதும், தீய வகையில் பயன்படுத்துவதும் நம் கையில்தான் உள்ளது. அதுபோல், மனைவியைக் கணவரும் கணவனை மனைவியும் ஆக்கத்திற்கோ அழிவிற்கோ பயன்படுத்துவது அவரவர் கையில் உள்ளது.

உடலானது குடும்பம்; மூளையானது மனைவி; இதய மானது கணவன்; உயிரானது அன்பு. இதில் மூளையோ இதயமோ கெட்டுவிட்டால், உடலும் கெட்டு, உயிரும் சென்று விடும். அதுபோல் மனைவியோ கணவரோ ஒற்றுமையில்லாமல் இருந்தால் குடும்பம் சீர்குலைந்து போகும். குடும்பம் கெட்டு, அன்பு மடிந்து விடும்.

நேசமாக இருந்தால் அது அன்பு. கருணை காட்டுவது அன்பு. பரிவு என்பதே அன்பு. அந்த அன்பைக் காட்ட நல்ல மனம் வேண்டும்.

இந்திரியங்கள் அநேகமாக மனதைச் சார்ந்தே இருக்கும். ஒவ்வொருவரின் இந்திரியமும் நல்ல வழியிலும் செல்கிறது; கெட்ட வழியிலும் செல்கிறது. நல்ல வழியில் செல்வதைத் தெய்வச் சேஷ்டை என்றும் கூறலாம். (காஞ்சிப் பெரியவர் கூறியது)

ஒழுக்கமுடனும் பக்தியுடனும் வாழ்ந்தால், எந்தச் சூழ்நிலையிலும் துன்பங்களைக் களைந்து வாழ்ந்தால் இன்பம் ஏற்படும்.

1) *"மன்மனம் எங்குண்டு வாயுவும்*
*அங்குண்டு மன்மனம்*
*எங்கில்லை வாயுவும்*
*அங்கில்லை மன்மனதுள்ளே*
*மகிழ்ந்திருப் போர்க்கு*
*மன் மனத்துள்ளே மனோலயமாம்"*

என்கிறது திருமந்திரம்.

2) *"மனந்தானே புத்தி ஆங்காரம்*
*சித்தம் மதிரவி அண்ட பிண்டம்*
*ஆனவாறும் மனந்தானே*
*சித்தம் சிவமான ஞானம் வாசி*
*பரதேசி பரப்பிரமம் யாவும்,*
*மனந்தானே நாத விந்து ரூபா*
*ரூபம் வனிகனல் வின்புனல்*
*மண்ணது ஆனவாறும்*
*மனந்தானே உதித்தொடுக்கும்.*
*இடம் இரண்டும் வகை சொல்ல*
*சத்குருவால் எழுத்தைக் கேளே" - அகத்தியர்*

நாமும் துன்பப்பட்டுப் பிறருக்கும் துன்பத்தைக் கொடுப்பது. மறுபிறவியிலும் துன்பத்தை அழைப்பதற்குக் காரணமாக இருப்பது போன்ற குணங்களும், செயல்களுமே கீழ்மை தரக்கூடியன.

அதாவது காமம், குரோதம், உலோகம், மோகம், மதம் (வெறி) மாச்சரியம், ஆங்காரம்.

(உ.ம்) காமம் - வாலி, இராவணன், யயாதி, இந்திரன்

| | | |
|---|---|---|
| *கோபம்* | - | துர்வாசர் |
| *மோகம்* | - | திருதராஷ்டிரன் |
| *மாச்சரியம்* | - | பல மன்னர்கள் |
| *அகங்காரம்* | - | ஸ்ரீஹிரண்ய கசிபு |

இதைத்தான் 'மனம்போல வாழ்வு' என்பர். மற்றவர்களும் வாழவேண்டும். அவர்கள் வாழ்க்கை வழி வேறு, நம் வாழ்வின் வழி வேறு. அதனால் மற்றவர்களுக்குக் கஷ்டம் தராமல் நாமும் வாழ்வோம், என்ற எண்ணம் கொண்டால், தெய்வமே நம்முடன் துணை இருக்கும்.

பொறாமை நிறைந்த மனிதனின் மனம் கோரமாகவும் கசப்பாகவும் மாறுகிறது. அவனுடைய நாக்கு விஷத்தைக் கக்குகிறது. பக்கத்து வீட்டாரின் வெற்றி, உறவினரின் மகிழ்ச்சி யான வாழ்க்கை பொறாமை கொண்டவரின் மன அமைதியைக் கெடுக்கிறது. மற்றவர்க்கு நன்மையாக இருப்பது. இவனுக்குத் தீமையாகத் தோன்றுகிறது. குரோதமும் வெறுப்பும் கொண்டு, மன அமைதியில்லாமல் வாழ்ந்து, நெஞ்சின் சுமையோடு நசிந்து போவான்.

பிறருக்குத் துன்பம் கொடுத்து அதில் இன்பம் காண்பவன் வனவிலங்குகளுக்கு ஒப்பாவான். பிறருக்குத் துன்பம் கொடுக்காமல், தனக்கு இன்பம் மட்டுமே தேடுபவன் மனிதன். தானும் இன்பம் பெற்று, மற்றவருக்கும் உதவி செய்து. அதனால் இன்பம் கொடுப்பவர் தெய்வம் ஆவார்.

மன உறுதி உள்ளவர்கள் எதைப் பற்றியும் தெளிவாகச் சிந்திப்பார்கள். எவ்வளவு துன்பம் ஏற்பட்டாலும், நன்றாகச் சிந்தித்து, தீர்மானித்த வேலையைச் செய்து முடிப்பார்கள். மன உறுதி உள்ளவர்க்கு மலையும், மடுவும், கடலும் நீர்த் துளி போன்றுதான் தோன்றும். எனவே, மனதை உறுதியுடன் வைத்துக் கொள்ள வேண்டும்.

*''சிந்தனை செய் மனமே*
*செய்தால் தீவினை அகன்றிடுமே*
*சிவகாமி மகனைச் சண்முகனைச்*
*சிந்தனை செய் மனமே''*

என்று கவிஞர் கண்ணதாசன் பாடியுள்ளார். சிந்தனை செய்யும் மனது நல்லதையே எண்ண வேண்டும்.

சகல காரியங்களுக்கும் இன்பத்திற்கும், துன்பத்திற்கும், நன்மைக்கும், தீமைக்கும், இருட்டுக்கும் வெளிச்சத்திற்கும், பாவத்திற்கும் புண்ணியத்திற்கும் அன்புக்கும் வெறுப்புக்கும் மனமே காரணம். மனதின் அலைகளே உடம்பைச் செலுத்து கின்றன.

நம் மனம் நமக்கு வசமாக வேண்டும். மனம் அடங்கி விட்டால் பின்னர் வேறொன்றும் தேவை இல்லை. ஒவ்வொரு நாளும் சிறிது நேரமாவது மனதை அமைதியாக வைத்துக் கொண்டு, புலன்களைக் கண்ட வழியிலும் சிதற விடாமல் தியானத்தில் அமர வேண்டும்.

அப்படித் தியானம் செய்தால் புத்தி தெளிவடையும். ஆசையையும் கோபத்தையும் அடக்குவதற்கு இது ஓர் ஒப்பற்ற சாதனம் ஆகும். இரத்தத்தை இப்படிச் சுத்தம் செய்து கொண்டாலே ஆத்ம ஞானம் உண்டாகும்.

மனதை நல்ல வழியில் செலுத்தி, மனிதன் மேலும் மேம்பட வேண்டும். நல்லதையே எண்ணி, நல்லதையே செய்ய வேண்டும். இதனால் நம் ஏழு பிறவிகளுக்கும் நன்மை உண்டாகிறது. நம் ஏழு தலைமுறைகளும் சிறக்க வாழ்வார்கள்.

நாம் செய்த பாவ, புண்ணியங்களுக்கு ஏற்ப நம வம்சா வழிகள் வாழ்வார்கள். அதனால், நம் மனதைத் தெய்வத்திடம் செலுத்தி, நல்லவனவற்றைமட்டும் எண்ணி, நல்லனவற்றை மட்டுமே செய்து வாழப் பழகிக் கொள்வோமாக!

# 15. பெண்

''பெண் என்பவள் தாய்மைக்கு ஓர் அன்னையாகவும், தயாளத்திற்குத் தமக்கையாகவும், பாசத்திற்குப் பாட்டியாகவும், காதலுக்கு ஒரு மங்கையாகவும், துணைக்கு ஒரு மனைவி யாகவும், அரவணைப்புக்கு ஓர் அத்தையாகவும், அன்புக்கு மகளாகவும் திகழ்பவள். ஒரு மனிதனின் வாழ்விற்குப் பெண் என்பவள் இன்றியமையாதவளாக அமைகிறாள்.''

தாய்:- ''இறைவன் ஒவ்வொருவருக்கும் தானே தோன்றி அவர்களைக் காக்க இயலாது என்று, பெண்ணைப் படைத்து, அவளுக்குத் தாயாகும் தகுதியையும் கொடுத்தான்!. அப்பாக்கி யத்தைப் பெண்களும் இன்றுவரை காப்பாற்றி வருகிறார்கள். ஒரு குழந்தையைப் பத்து மாதம் வயிற்றில் சுமப்பதில் அவள் 'பொறுமையில் பூமியைப் போல'த் திகழ்கின்றாள்.

குழந்தை பிறந்ததும் அதற்குப் பாலூட்டி, தாலாட்டி, சீராட்டி, பாதுகாத்து வளர்க்கிறாள். கல்வியூட்டிக் குழந்தையை அறிவாளனாக மாற்றுகிறாள். குழந்தைகளின் வாழ்வின் வளர்ச்சிக்குத் தாய் மிகவும் உதவுகிறாள்.

தங்கை, தமக்கை என்ற உறவில் ஒருவருக்குப் பெண் ணானவள் மனம் விட்டுப் பேச நட்பாகவும், விளையாடவும் வேடிக்கையாகப் பேசி மகிழவும் ஒரு தோழியாகவும் மாறு கின்றாள்.

பாட்டியான பெண்ணானவள் தலைமுறை தலைமுறை யாகத் தானும் தன் அம்மா, அப்பாவும் தன் பாட்டிகளும் எவ்வாறு வாழ்ந்து வந்தனர் என்பதைக் கூறி நம்மை அவர் களின் பழக்க வழக்கத்திற்கு உட்படுத்தி, பரம்பரை பரம்பரை

யாக வரும் பாரம்பரியத்தின் செயல்களை அறிமுகப்படுத்து கிறாள்.

பெண்ணானவள் மனம் விட்டுப் பேச, காதலியாகத் திகழ்கிறாள். காலம் முழுவதும் அன்பு செலுத்தவும் துணை யாகவும் வாழ்விற்கு வழிகாட்டியாகவும் வாரிசுகளை உருவாக்கி, குலத்தை மேலும் மேம்படுத்தக் கூடிய திறன் கொண்டவளாக வும் திகழ்கின்றாள்.

ஓர் ஆண்மகன் திருமணம் நடைபெற்று, குழந்தை பிறந்த பின்னர்தான் முழுமனிதன் என்ற தகுதி அடைவதாக நினைக்கிறான். மகளாக உருவாகும் பெண் தந்தையிடமும் தாயிடமும் காட்டும் அன்பின் அளவைச் சொல்லமுடியாது.

புராணங்களில் பெண்களைக் கேவலமாக நடத்தியவர்கள் அழிந்து போவதாகப் பல கதைகள் உண்டு. பெண் என்பவள் பாதுகாக்கப்பட வேண்டியவள். உலகில் மனித உயிர்கள் உருவாகக் காரணமாக இருப்பவள் பெண்தான்.

பெண் என்பவள் மிக மென்மையானவள். ஆனால், மன உறுதி கொண்டவள், பரிமளிப்பவள். சிருஷ்டியில் பிரம்மாவைப் போன்றவள். பெண்ணை வதைக்காமல் அவளைக் காப்பது ஆணின் கடமை ஆகும்.

தாய் ஒரு குழந்தையை வளர்க்கும்போது, உலகில் உள்ள அனைத்துவகையான உணர்வுகளிலும் தாய்மை உணர்வே சிறந்தது. மிக மிக மேலானது; மிக மென்மையானது. பெற்ற குழந்தைகளிடம் பிற்காலத்தில் எதுவும் எதிர் நோக்காமல் அன்பு செலுத்துவது பரிவு காட்டுவது, பேணிக் காப்பது ஏன்? தன் குழந்தைகளுக்காகத் தன் உயிரையே தருவது, அனைத்து நற்குணங்களையும் தருவது தாய்மைதான். பெண்ணுக்கே உரித்தான தாய்ப் பாசத்தை எக்காரணங்கொண்டும் விட்டு விடாமல் இருக்கவேண்டும். நாம் வாழும் வாழ்க்கையில் நமக்குத் தேவையான அனைத்தும் தாய்மையில்தான் நிறைந்து உள்ளது.

**பொறுமை:** பெண்களுக்குப் பொறுமையும் அமைதியும் மிகவும் தேவை. இதனால், குடும்பத்தில் குழப்பமோ, சண்டையோ வராமல் தவிர்க்க இயலும். மேலும் குழந்தை களை வளர்க்க மிகவும் முக்கியமானது பொறுமைதான். பல வெற்றிகளைக் குடும்பத்தில் குவிக்க வேண்டுமானால், பெண்ணுக்குப் புத்திசாலித்தனமும் பொறுமையும் மிகவும் அவசியம். தீய பழக்கம் உள்ள கணவரைக்கூடப் பொறுமை யால் திருத்தலாம்.

பொறுமைசாலியிடம் ஒரே ஒரு குறைதான் இருக்கும். வேறு எந்தக் குறையும் இருக்காது. அது என்னவெனில் பொறுமைசாலியை மக்கள் பலம் குறைந்தவராக, பலகீனமுள்ள ஒரு குறையாக எண்ணுவதுதான், பொறுமை மிகவும் வலிமை வாழ்ந்ததாகும். (க்ஷமா ஹி ப்ரமம் பலம்) பொறுமையும் நற்குணமும்தான், பலசாலிகளின் அணிகலன்கள் ஆகும். பொறுமையாக இருந்தால் உலகத்தையே வசப்படுத்தலாம். பொறுமைக்கு உதாரணமாகச் சீதையைக் கூறலாம். இராமா யணத்தில் வரும் சீதை பொறுமையின் சிகரமாகத் திகழ்ந்தாள்.

**பொறாமை:-** பொறாமை என்னும் ஆமையை மனதிலும், குடும்பத்திலும் நுழையவிடக்கூடாது. இந்தப் பொறாமையால் பல குடும்பங்கள் சிதறி உள்ளன. சூர்ப்பணகை சீதையின்மேல் பொறாமை கொண்டாள். அவள் பேச்சைக் கேட்டு இராவணன் அழிந்தான்.

துரியோதனன் பாண்டவர்கள்மேல் கொண்ட பொறாமை யால் பாரதப் போர் ஏற்பட்டது. இதனால் கௌரவர்கள் அழிந்தனர்!

பொறாமை அழிவிற்குக் காரணம் ஆகிறது. ஒவ்வொரு வரின் வாழ்க்கைப் பாதையும் வெவ்வேறு வழியானது என்று நினைக்க வேண்டும். தன் வாழ்க்கை எதுவோ அதன்படி சென்று வெற்றி அடைய வேண்டும். அதைவிட்டு அடுத்தவரின் வளர்ச்சியில் பொறாமைப் பட்டால் தன்மனம் கெட்டு

வாழ்க்கையும் கெட்டுவிடும். முக்கியமாகப் பெண்கள் இக்குணத்தால் வெகுவாகச் சீரழிகின்றனர். தன் குடும்பத்தையும் தவறான பாதைக்கு அழைத்துச் சென்று, பாழ்படுத்துகின்றனர்.

பேராசை:- 'பேராசை பெரு நஷ்டம்' என்பது பழமொழி.

*'அவா இல்லார்க்கு இல்லாகும் துன்பம் அஃது உண்டேல்*
*தவா அது மேன்மேல் வரும்'.* *-திருக்குறள் -368*

பொருள்:- ''அவா எனப்படும் ஆசை இல்லாதவர்களுக்கு அதனால் வரும் துன்பம் ஒன்றும் இல்லை. ஆசை உள்ளவர் களுக்கு அதனால் எல்லாத் துன்பங்களும் மேன்மேலும் தொடர்ந்து வந்து கொண்டிருக்கும்.

தாயுமானவர்,

''நிராசையின்றேல் தெய்வம் உண்டோ?'' என்கின்றார். பேராசையானது வாழ்க்கையில் துன்பங்களை உண்டு பண்ணும். சாந்தியையும் அமைதியையும் அழித்துவிடும். பேராசை ஆனந்தத்தைக் கெடுத்துவிடும்.

*'பேராசையெனும் பிணியில் பிணிபட்டு*
*ஓரா வினையேன் உழலத் தகுமோ'?*

என்று கூறுகிறார் அருணகிரிநாதர். பேராசையை, பிணி என்று அதாவது 'நோய்' என்று கூறுகிறார்.

திருமூலர்:-

*'வேட்கை விட்டார் நெஞ்சின்*
*மூடத்துளே நின்று முத்தி தந்தானே'* *- என்று கூறுகிறார்.*

இந்தப் பேராசை ஒரு பெண்ணைப்பற்றிவிட்டால் அதனால் பொறாமை ஏற்படுகிறது. இதன் விளைவு எது. தேவையோ அதை அடைய பிடிவாதத்தை மேற்கொள்வார்கள். பின்னர் குடும்பத்தலைவன் பாதிக்கப்பட்டு, குழந்தைகள் பாதிக்கப் பட்டு, குடும்பமே நிர்மூலமாகும்.

உதாரணத்திற்கு, மகாபாரதத்தில் காந்தாரியை எடுத்துக் கொள்ளலாம். இராமாயணத்தில் கைகேயி, சூர்ப்பணகை, பொறாமையால் நாட்டையும் பல அரச குடும்பங்கள் இழந்ததை யும் பல கதைகளில் படித்து இருப்போம்.

**பிடிவாதம்:-** 'எந்த வாதத்திற்கும் மருந்துண்டாம். பிடிவாதத்திற்கு மருந்தில்லை' என்பது பழமொழி. முக்கிய மாகப் பெண்கள் பிடிவாதமாக இருந்தால் கணவன் மனைவிக்கும் பிரச்சினைகள் ஏற்பட ஏதுவாக அமையும். குழந்தைகளும் அதேபோன்ற குணங்கள் கொண்டவர்களாக வளர்வார்கள்.

*'விட்டுக் கொடுப்பார் கெட்டுப்போவதில்லை;*
*கெட்டுப் போனவர்கள் விட்டுக் கொடுப்பதில்லை'.*

**நடிப்பு:-** நடிப்புக் கலை என்பது நாடகங்களிலும் சினிமாக் களிலும் மட்டுமல்லாது, சிலர் தேவையில்லாமல் கணவரிட மும், குழந்தைகளிடமும், உறவினர்களிடமும் நல்லவர்களைப் போல, நடித்து மறைமுகமாக அனைவருக்கும் தீயதைச் செய் வார்கள். இறைவன் இருப்பதையே மறந்துவிட்டு எல்லோரும் நம்பும்படி நடிப்பார்கள். இவர்களின் பிற்கால வாழ்க்கையை நான் கண்டிருக்கிறேன். அவர்களின் நிலை மிகவும் பரிதாப மாக இருக்கும். அவர்களின் உண்மையான குணத்தை அறிந்த பின் கணவராலும் குழந்தைகளாலும் கைவிடப்பட்டு இறைவனின் கருணையும் இல்லாமல் அல்லாடிக் கஷ்டப் படுவார்கள். முகஸ்துதி செய்பவர்களை என்றும் நம்பக் கூடாது. அவர்களும், நம் பின்னால் நம்மை ஏசக் கூடியவர்கள். வாழ்க்கையில் இவர்கள் நடித்து நடித்து ஒன்றும் சாதிப்பதில்லை. இதை அவர்கள் உணர்வதும் இல்லை.

**நகைச்சுவை:-** உயிர்களில் சிரிக்கத் தெரிந்த உயிர் மனிதன் தான். நகைச்சுவை இருந்தால் எதிரிகளையும் ஜெயித்து விடலாம். சிரித்துக் கொண்டிருந்தால் கண்களில் ஒளி பெருகும்; முகம் செழிப்புடன் இருக்கும்.

*'கருணைக்குப் பாண்டிச்சேரி அன்னை,*
*அன்னை தெரசா;*

வீரத்திற்கு இந்திரா காந்தி; இராணி மங்கம்மாள்; ஜான்சி ராணி' ஆகியோரைக் கூறலாம்.

பெண்களில் நம் இந்திய நாட்டில் பல துறவிகளும் ரிஷி பத்தினிகளும் என்று பலர் உள்ளனர். அவர்களில் உதாரணத் திற்கு அருந்ததி, அனுசூயா, சாவித்திரி, ஔவையார், காரைக்கால் அம்மையார், லோக முத்ரா, ரோமசா என்கின்ற ரிஷி பத்தினி களும் உண்டு. புத்தமதத்தில் விருப்பப்பட்டவர்கள் இன்றும் பெண் துறவிகளாக மாறி வருவதை அறிய முடிகிறது.

அன்னை தெரசா, அன்னை சாரதா தேவி, பாண்டிச்சேரி அன்னை போன்றவர்கள் சமூக சேவை செய்துகொண்டே துறவியாக வாழ்ந்தவர்கள்.

பெண்கள் அக்காலத்தில், போர்ப் பயிற்சி, குதிரையேற்றம், தேர் ஓட்டுதல், அரசை நிர்வகிக்கும் திறன் கொண்டவர்களாகவும் திகழ்ந்தனர்.

கைகேயி தசரதனுக்கும், ருக்மணி கிருஷ்ணருக்கும் போரின்போது உதவினார்கள் என்பது புராணக் கதை.

புராணக் கதைகளில் பெண்களே ஆண்ட அல்லி ராஜ்ஜியம் உண்டு. மீனாட்சி போன்றவர்கள் அக்காலங்களில் அரசைப் பரிபாலனங்கள் செய்து வந்துள்ளனர்.

நகைச்சுவையுடன் பேசும் பெண்களோடு பலரும் நட்புடன் பழகுவார்கள். அவர்களைச் சுற்றிலும் ஒரு மகிழ்வான சூழ்நிலை காணப்படும். பல வெற்றிகளையும் அவர்கள் குவிக்கலாம்.

தைரியம்:- பெண்கள் கோழையாக வாழாமல் தைரியத்துடன் விளங்கினால்தான் இக்காலத்தில் வாழமுடியும்.

அக்கால வரலாற்றில், கண்ணகி உதாரணமாகத் திகழ்ந்தாள். 'தன் கணவன் கள்வன் அல்லன் என்று, மதுரைப் பாண்டிய அரசரிடம் நீதிகேட்டு, ''பாண்டிய அரசே! என் காலில் அணிந்த சிலம்பில் மாணிக்கப் பரல்கள் உள்ளன என்று கூறி, அதை நிரூபிக்கும்பொருட்டுத் தன்னிடம் உள்ள

ஒரு கால் சிலம்பினைத் தரையில் எறிந்து உடைத்தாள், மாணிக்கப் பரல்கள் சிதறின, இதன் மூலம் தன் கணவனான கோவலன் குற்றமற்றவன் என்பதை உலகத்திற்கு உணர்த்தி'' இன்றும் நீங்கா இடம் நம் இதயத்தில் பெற்றுள்ளாள்.

அரசியலில், குந்தவை இராஜராஜ சோழனுக்கும் இலட்சுமி பாய் வீர சிவாஜிக்கும் வழிகாட்டியாக இருந்து அவர்களைப் பேரும் புகழும் நிலைநாட்டிட வைத்தார்கள்.

பக்தியில் தெற்கில் காரைக்கால் அம்மையார், ஔவையார் மற்றும் ரோமசா போன்ற வட நாட்டின் துறவிகளையும் உதாரணமாகக் கூறலாம்.

கற்பில் கண்ணகி, கோப்பெருந்தேவி, அகல்யா, திரௌபதி மற்றும் பல பெண்களை முன்னுதாரணமாகக் கூறலாம்.

பொறுமைக்குச் சீதை!

கதை எழுதுவதிலும் கவிதை புனைவதிலும் அன்றும் இன்றும் என்றும் பெண் சிறந்து விளங்குபவள்தான். இன்று பெண்கள் இல்லாத துறைகளே இல்லை எனலாம். இராக் கெட்டில் கூட, பெண் பயணம் செய்து சாதனை படைத்துள் ளாள். பெண் என்பவள் மென்மையானவள்தான். ஆனால், மன உறுதியிலும் செயல்களிலும் வலிமை பெற்றவள். ஒரு பெண் நினைத்தால் எதையும் சாதிக்கலாம்.

ஒரு பெண் தூய்மையாகவும் இனிமையாகப் பேசியும், எளிமையாக வாழ்ந்தும் பணிவுடன் நடந்தும் திருப்தியுடன் வாழ்க்கையை நடத்தியும் குடும்பத்திற்காகப் பல தியாகங்கள் செய்தும் எது வந்தாலும் தைரியத்துடன் எதிர்கொண்டும் யார் கெடுதல் செய்தாலும் சகிப்புத் தன்மையுடனும் நல்ல காலம் வரும்வரை பொறுமையாகவும், எதைப் பற்றியும் கவலை யில்லாமல், பயமில்லாமல், சஞ்சலமில்லாமல், மலர்ந்த முகத்துடன் இவையனைத்தையும் வாழ்க்கையில், நடைமுறை யில் கொண்டுவந்தால் உலகிலேயே காலம் உள்ளவரை மறையாத பெயருடன் தெய்வமாக மற்றவர்களின் மனதில் வாழலாம்.

# 16. சொல்

நாம் பேசும் பேச்சு இரண்டு வகைப்படும்.




நாம் பிறரிடம் இனிமையாகப் பேசுவதால் பல காரியங் களைச் சாதிக்க முடிகிறது.

கடுமையாகப் பேசிக் கொண்டிருந்தால், அவ்வாறு பேசு பவர்களைக் காண நேர்ந்தால், அனைவரும் அவரைப் பார்த்துப் பயப்படுவார்கள். எனவே கடுமையாகப் பேசுபவர்களுக்கு அதனால் துன்பமே நேரும்.

துரியோதனன் விதுரரையும், கிருஷ்ணரையும் மற்றும் சபையிலுள்ள அறிவார்ந்த பெரியோர்களையும் அவமரியாதை யாகப் பேசியதாலும் பாஞ்சாலியைத் துகில் உரித்து மானபங்கப் படுத்தியதாலும் பாரதப் போர் ஏற்படக் காரணம் ஆயிற்று.

இராமாயணத்தில் மாயமானைத் தேடி இராமர் செல்லும் போது, இராமரைப்போல் மாரீசன் கத்தியதைக் கேட்டு, சீதை இராமனுக்கு ஆபத்து ஏற்பட்டுவிட்டது. என்று எண்ணி, இலட்சுமணரிடம் சென்று, இராமரைக் காப்பாற்றும்படி கேட்டுக் கொண்டாள். அதற்கு இலட்சுமணன், ''அண்ணன் இராமர், அகில உலகத்தில் உள்ள மக்களை எல்லாம் வெல்லக் கூடிய வீரர், அவருக்கு எந்த ஆபத்தும் இல்லை. அவ்வாறு ஆபத்தும் நேராது, கவலைப்படாதீர்கள்'' என்று சொல்லி மறுக்கிறான்

இலட்சுமணன். சீதைக்குக் கோபம் ஏற்பட்டு, இலட்சுமணனைப் பார்த்து "நீர் ஏதோ கெட்ட எண்ணத்துடன்தான் இராமனைக் காப்பாற்ற மறுக்கின்றீர்" என்று கூறினாள்.

சீதையின் கடுமையான சொற்களால் இலட்சுமணன் மனம் வெதும்பி, ஒரு கோடு வரைந்து, "இதைத் தாண்டி வெளியே வரக்கூடாது" என்று எச்சரித்துவிட்டு இராமரைத் தேடிச் சென்றான். அக்கோட்டை 'இலட்சுமணன் கோடு' என்பர்.

இராவணன் சாது வேடத்தில் வந்து சீதையைக் கவர நினைக்கும்போது அக்கோட்டைத் தாண்டி உள்ளே செல்ல முடியாமல் போக, அக்கோட்டைத் தாண்டிச் சீதையை வரச் செய்து, கவர்ந்து சென்றான். அதன்பின்தான் சீதை தான் பேசிய கடுஞ்சொற்களால் தானே துன்பம் அடைந்தது குறித்து மிகவும் வருந்தினாள்!

1. "யாகாவாராயினும் நா காக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு." - குறள் 127

2. "தீயினால் சுட்ட புண் உள்ளாறும் ஆறாதே
நாவினால் சுட்ட வடு." - குறள் 129

என்று திருக்குறளில் திருவள்ளுவர் கூறியுள்ளார்.

ஒரு சிலர் இடம், பொருள் பார்க்காமல் என்ன பேசுகின்றோம் என்று அவர்களுக்கே புரியாமலும் அவ்வாறு புரிந்தாலும் வேண்டுமென்றே ஒருவரைத் தாழ்த்திப் பேச இதைச் சந்தர்ப்பமாகப் பயன்படுத்திக் கொள்வார்கள். பின் அவர்களே அவமானம் அடைந்து, கெட்ட பெயர் உண்டாக்கிக் கொள்வார்கள்.

சிலர் சாகசமாகப் பேசி மற்றவர்களைத் தன்வலையில் விழவைத்து, தான் செய்வது நல்லதே என்று உலகை ஏமாற்றிக் கொண்டிருப்பார்கள். இறைவன் ஒருவன் இருப்பதை அறியாமல் பிறரின் வாழ்க்கையின் விளையாடி பாவத்திற்கு உட்பட்டு, முடிவில் வாழ்க்கையில் துன்பங்களை அடைவார்கள்.

*''சொல்லால் வருங்குற்றம்*
*சிந்தனையால் வருந்தோம் செய்த*
*பொல்லாத தீவினைப் பார்வையில்*
*பாவங்கள் புண்ணிய நூல்*
*அல்லாத கேள்வியைக் கேட்டிற் தீங்குகள்*
*பொறுத்தருள்வாய் கச்சி ஏகம்பனே''*

என்று பட்டினத்துச் சுவாமிகள் பாடியுள்ளார்.

சிலர் இனிமையாகவும் அடுக்கு மொழியாலும் அலங்காரச் சொற்களாலும் பேசி மற்றவர்களை மயக்கி விடுவார்கள். அதனால் பேசுபவர்களுக்குத்தான் பயனே அல்லாது கேட்பவர் களுக்கு எந்தப் பயனும் உண்டாகாது.

ஒருவர் வாழ்வில் முன்னுக்கு வருவதற்கு நல்ல யோசனை சொல்பவர்களையும் தப்புச் செய்தால் சுட்டிக்காட்டி, திருத்தி, புத்திமதி கூறுபவர்களையும் நட்பாகப் பயன்படுத்திக் கொண்டால் வாழ்க்கையில் முன்னேற்றம் காணலாம்.

பிறருடைய உயர்வு தாழ்வுகளைப் பற்றிப் பேசக்கூடாது. மற்றவரைப் பற்றியும் மற்றவர்களின் செயல்களைப் பற்றியும் அதிகமாகப் பேசுபவர்கள், துன்பத்தைத் தானே தேடிக்கொள் வார்கள். ஆகவே அளவுடன், பேச வேண்டியதைப் பேசுவதே நல்லது.

ஒருவர் கற்றறிந்த அறிவுடனும், அழகுடனும் சிவப்பான நிறத்தில் இருந்தாலும் அவர்களின் பேச்சில் கண்ணியம் இல்லை யெனில் அவர்களை யாரும் மதிக்கமாட்டார்கள்.

உண்மையாகவும் பிரியமாகவும் பேசவேண்டும். நன்மை தீமைகளை ஆராயும் தன்மையுள்ள அறிவு முன்னால் செல்லும். அதைத் தொடர்ந்து நம் செயல்கள் பின்னால் செல்லும். எனவே பேசும்முன் ஆராய்ந்து, யோசித்து, நிதானமாகப் பேச வேண்டும்.

ஒரு நல்ல மனைவியின் அன்பு நிறைந்த வார்த்தை களினாலும் ஆலோசனைகளாலும் அவளுடைய கணவனின் துன்பம் குறையும்.

ஒரு நல்ல தாயின் அன்பும் கனிவும் கொண்ட பேச்சினால் அக்குழந்தை நல்ல பாதையில் செல்லும்.

ஒரு நல்ல மாமியாரின் பெருந்தன்மை கொண்ட பேச்சால் புகுந்த வீட்டிற்கு வரும் மருமகள் அடுத்த தலைமுறையைச் செம்மை யாக நடத்திச் செல்வாள்.

நல்ல ஆசிரியர்களின் அறிவு மிக்க வார்த்தைகளால் வருங் காலத்தில் நல்ல மாணாக்கர்கள் உருவாகி, விஞ்ஞானிகள், புலவர்கள், சிந்தனையாளர்கள், பேச்சாளர்கள் பல தொழில் களில் நல்ல பயிற்சி கொண்ட தொழிலாளிகள், என்று பல விதங்களில் குழந்தைகள் வளர்வார்கள்.

கேட்பதற்கு இனிமையான நல்ல சொற்களை உபயோகிப் பவர்களுக்கு எல்லா நன்மைகளும் வந்தடையும். இரக்க குணம் உடையவர்க்கு உலகம் தலை வணங்கும். அன்பு சாதிப்பதை வேறு எதுவும் சாதிப்பது இல்லை.

நிறைந்த அறிவாளிகள் வளவளவென்று பேசிக்கொண்டு இருக்க மாட்டார்கள். அமைதியாக இருப்பார்கள். பலரிடம் பெரிய வித்தைகளும் திறமைகளும் அடங்கி இருக்கும். அதை அவர்கள் வெளியே காட்டிக்கொள்ள மாட்டார்கள். பேசாமல் இருப்பது அமைதிக்கு அறிகுறியாக அமைந்து விடுகிறது.

'மௌனம் கலக நாஸ்தி' என்று சொல்வார்கள். பல சமயங்களில் மௌனமே பெரிய காரியங்களைச் சாதிக்கப் பல விதங்களில் உதவுகிறது.

ஒருவர் வெறுப்பாலும் பொறாமையாலும் நம்மைப் பலவாறு தூற்றினாலும் நாம் அவர்களுக்குப் பதில் சொல்லத் தேவையில்லை. 'தூங்குபவரை எழுப்பலாம், தூங்குவதுபோல் பாசாங்கு செய்பவரை எழுப்ப முடியாது. அதுபோல், நம்மிடம் வேண்டுமென்றே சண்டையிடுபவர்களை ஒதுக்கிச் செல்வது சாலச்சிறந்தது. 'துஷ்டரைக் கண்டால் தூர விலகு' என்பது பழமொழி. எனவே, துஷ்டர்களிடம் எதிர்த்துப் பேச வேண்டிய

அவசியம் இல்லை. அவர்கள் பேசிய கடுஞ்சொற்களே அவர்களைச் சென்றடைந்து, அவர்களைத் தாக்கும்.

ஒரு சுவரைப்போல் உறுதியுடன் அமைதியாக இருந்து விடுங்கள். சுவரில் பந்து கொண்டு நாம் அடித்தால் சுவர் பந்தை ஏற்றுக் கொள்ளாததால் பந்து நம்மிடமே திரும்ப வரும். அதுபோல், ஒருவர் கேவலமாக நம்மைத் திட்டினால் நாம் அமைதியுடன் நடந்து கொண்டால், காலம் அவர்கள் பேசிய பேச்சைக் கொண்டு அவர்களையே பழிவாங்கிவிடும்.

உறவினர்களோ நண்பர்களோ நமக்கு நம்பிக்கைத் துரோகம் செய்தாலோ, தூற்றினாலோ 'ஏன் அவ்வாறு செய்தீர்கள்?' என்று அவர்களைக் கேள்விக் வேண்டாம். கேட்டு விட்டால் மட்டும் அவர்கள் திருந்தி விடப்போவது இல்லை. திருந்தாத தற்குறிகளாக இருப்பதால்தானே அவ்வாறு நடந்து கொள்கிறார்கள். எனவே, அவர்களை நாம் கேள்வி கேட்கக் கூடாது. நமக்குத் தீமை செய்பவர்களை நாம் மறந்து விட வேண்டும். அப்படி மறந்துவிட்டால் நம் மனம் துன்பம் அடையாமல் இருக்கும்.

வசதியில்லாதவர்கள் வசதி உள்ளவர்களைப்போல நடித்துப் பேசுவதும். படிப்பில்லாதவர்கள் படித்த அறிவாளர்கள் போலப் பேசுவதும். ஒன்றும் தெரியாதவர்கள் எல்லாம் தெரிந்த வர்களைப்போலப் பேசுவதும் பலரின் முன்னால் கேவலத் திற்கு ஆளாக நேரிடும். அதற்குப் பதில், பேச்சைக் குறைத்து, 'வாழ்வில் முன்னேற என்ன வழி'? என்று சிந்திப்பது மேலானது.

இழிவாக பேசும் நண்பர்களால் ஒருவனும், இழிவான பேச்சுப் பேசும் குழந்தைகளால் பெற்றோரும், இழிவான பேச்சுகளைப் பேசும் ஆசிரியர்களால் மாணாக்கர்களும் இழிந்த பேச்சைப் பேசும் குருவால் சீடனும் வாழ்க்கையில் பாதிக்கப் படுவார்கள். எனவே ஒருவர் பேசுவதை வைத்து நட்பாக இருக்க தேர்ந்து எடுப்பதில் நாம் கவனமாக இருக்க வேண்டும்.

நாம் கொடுக்கும் வாக்குநாணயத்தை நாம் காப்பாற்று வோம் என்று நன்கு உணர்ந்தால் மட்டுமே மற்றவர்களுக்கு நாம் வாக்குத் தரவேண்டும்.

நமக்கு நல்ல செயல்கள் நடக்கவும், பெரும் துன்பம் ஏற்படவும் நமது நாக்குத்தான் காரணமாக அமைகிறது. அதாவது நம் பேச்சு நமக்குக் கட்டுப்பட்டுப் பேசினால், அதைவிடச் சிறந்தது வேறு ஏதும் இல்லை. நாம் அதன் கட்டுப்பாட்டுக்கு அடங்கினால் அதை விடத் தீயது வேறு எதுவும் இல்லை. கண்டதைப் பேசாமல், கடுஞ்சொற்கள் கூறாமல் இறைவனைப் பூஜிக்க நமது நாக்கு உதவட்டும்.

திருவள்ளுவர்,

*'நயன் ஈன்று நன்றி பயக்கும் பயன் ஈன்று*
*பண்பின் தலைப்பிரியாச் சொல்.* - *குறள் - 97*

என்று கூறுகிறார்.

**கருத்து:-** "பிறர்க்கு நன்மையான பயனைத் தந்து நல்ல பண்பிலிருந்து நீங்காத சொற்கள் வழங்குவோனுக்கும் இன்பம் தந்து நன்மை பயக்கும்."

"பகைவர் நண்பராக மாறினாலும் நாம் அவர்களை நம்பக்கூடாது. ஆனால், தான் செய்த தீமைக்காக வருத்தப் படுபவர்களை மன்னித்துவிடலாம் ஆனால், தீமையைச் செய்து விட்டு அதைப்பற்றிக் கவலையே படாமல் தான் ஏதும் தவறு செய்யவில்லை என்று இருப்பவர்களை ஆண்டவனும் மன்னிக்க மாட்டான். அவர்களை நண்பனாக மீண்டும் ஏற்றுக் கொண்டால் நமக்குப் பெரும் கெடுதி ஏற்படும்.

எனவே ஒருவர் எவ்வாறு பேசி பழகுகிறார்கள் என்பதை பலமுறை ஆராய்ந்து, அவரை குருவாகவோ, நட்பாகவோ ஏற்றுக் கொள்ளவேண்டும். உறவினர்கள் மாறாக அமைந்து விட்டால் அவர்களை விட்டு சற்று விலகி வாழ வேண்டும். அப்போதுதான் நாம் வாழ்க்கையில் முன்னேற முடியும்.

# 17. துன்பங்களைக் களைவது எப்படி?

உலகில் உள்ள அனைத்து உயிர்களுக்கும் துன்பம் என்பதும் இன்பம் என்பதும் பொதுவான ஒரு நடைமுறை ஆகும். விலங்குகள், பறவைகள், ஊர்வன, நீர்வாழ்வன, மனிதர்கள் மற்றும் புழுப்பூச்சிகளுக்கும் துன்பம் என்பது இயற்கையானதே. அதைக் களைவது எப்படி? என்று அலசி, ஆராய்ந்து, அதைப் போக்கி, உயிர் வாழ்வதுதான் உலக நியதி ஆகும்.

ஒரு புழுவை எடுத்துக்கொண்டால்கூட அது இரை தேடும் போதோ, தன் இடத்திற்குச் செல்லும்போதோ, பல இடங்களில் அதற்குத் தடைகள் உண்டாகும். பறவைகள் அவற்றைக் கொத்தி தன் உணவாக ஆக்கிக் கொள்ளும். தாம் போகும் பாதையில் வெய்யில் பட்டுச் சூடாக இருந்தால் சூடு இல்லாத குளிர்ந்த இடமாகப் பார்த்துத் தம் வழியை மாற்றிக் கொள்ளும். ஒரு புழு செல்லும்போது ஒரு குச்சியை எடுத்து, அதன்முன் நாம் சீண்டினால், அது தன் பாதையை மாற்றி வேறு பாதைக்குச் செல்வதை நாம் காணலாம். ஓரறிவு உள்ள புழுவே தன்னைக் காத்துக்கொள்ளும்போது, ஆறறிவு படைத்த மனிதனால் ஏன் வரும் கஷ்டங்களை நீக்கி வாழ முடியாது?''

பறவைகளுக்குக் காலை விடிந்ததும் உணவு தேடப் புறப்பட்டு மாலை கூட்டிற்குத் திரும்பும்வரை பல ஜந்துக் களாலும், மனிதர்களாலும் ஆபத்து ஏற்படக்கூடும். ஊர்வன, விலங்குகள், நீரில் வாழும் அனைத்து உயிர்களுக்கும் வாழ்க்கை என்பது ஒரு பெரும் போராட்டம்தான். அவையே அதிலிருந்து மீண்டு வந்து வாழும்போது மனிதனால் துன்பங்களை எதிர்த்து வாழ முடியாதா?

அறிவில் சிறந்தும் நல்லது, கெட்டது தெரிந்தும் பல உதவிகள் செய்ய நல்ல மனம் கொண்டவர்கள் பலர் இருந்தும், மனிதன் துன்பம் வரும்போது துவண்டு, வாழ மனம் வெறுத்து மடியும் வரை செல்வது ஏன்? அதற்குப் பதிலாக வாழ்க்கையில் போராடி அதைச் சரி செய்து வாழலாமே!

இராமரும் பாண்டவர்களும் அரச பரம்பரையில் உதித்து, கஷ்டங்கள் என்னவென்பதே தெரியாமல் வாழ்ந்தவர்கள் இராமர் 14 வருடமும், பாண்டவர்கள் 13 வருடமும் நாட்டை விட்டு, அரசாட்சியை விட்டு, கானகம் சென்று, மிகவும் கஷ்டப் பட்டு, கஷ்டங்களைச் சந்தித்து, திரும்பவும் நாட்டிற்குத் திரும்பி அரசாட்சியைக் கைப்பற்றி ஆட்சி செய்து, வாழ்ந்து காட்டினார்கள்.

நளன், அரிச்சந்திரன் போன்ற அரசர்கள் படாத துயரா தற்போது வாழும் மனிதன் அடைகின்றான்? அவ்வாறு துன்பம் அடைந்தாலும் அவனின் துன்பத்திற்கு அவனேதான் காரண மாகவும் ஆகிறான்.

*''யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்*
*அதனின் அதனின் இலன்.''* - *குறள் 341*

ஒருவன் எந்தெந்தப் பொருளிலிருந்து பற்று நீங்கியவனாக இருக்கின்றானோ, அந்தந்தப் பொருளால் அவன் துன்பம் அடைவதில்லை.

ஒருவன் எதை எதைத் தவிர்த்து விடுகிறானோ அதனதன், பின் விளைவுகளிலிருந்து அவன் தப்பித்து விடுகிறான். எல்லா வற்றையும் தவிர்ப்பவன் வாழ்க்கையில் சிறிய அளவில்கூடத் துன்பம் அனுபவிக்க நேரிடாது.

பற்றுகளை விட்டவரை யாரும் வெல்ல முடியாது; அவரும் யாரையும் வெல்ல விரும்புவதில்லை; அவர் யாருக்கும் எதிரி இல்லை; அவர் யாரையும் பழிவாங்குவதில்லை. பிறர் புகழ்ந்தாலும், இகழ்ந்தாலும் பாதிப்பிற்குள்ளாகாமல், அமைதி யாக இருப்பார். அவர் ஒன்றை இன்பமெனக் கருதித் துள்ளிக்

குதிப்பதிமில்லை; மற்றொன்றைத் துன்பமென நினைத்துத் துவண்டு போவதுமில்லை!

*''பிறந்தன இறக்கும், இறந்தன பிறக்கும்,*
*தோன்றின மறையும், மறைந்தன தோன்றும்,*
*பெருத்தன சிறுக்கும், சிறுத்தன பெருக்கும்,*
*செல்வத்துக் களித்தனை தரித்திரத்து அழுகினை''* என்றார்

இன்பம் துன்பம்; ஏழ்மை வளமை; தோற்றம் அழிவு; இலாபம் நஷ்டம் என்று இரண்டும் மாறிமாறித்தான் ஏற்படும். இன்பத்தை ஏற்ற நம் மனது துன்பத்தை ஏற்றுக்கொள்ள மறுக்கிறது. இதனால், உலகில் உள்ள துன்பங்களைத் தாம் மட்டுமே அனுபவிக்கிறோம் என்று நினைத்து மிகவும் வருத்தம் கொள்கிறோம்.

அனைத்துப் புராணக் கதைகளும், ''நல்லதை நினை யுங்கள், நல்லதைச் செய்யுங்கள், நீங்கள் வாழுங்கள், மற்றவர் களையும் வாழ விடுங்கள்'' என்றுதான் கூறுகின்றன. அக்கருத்தை யெல்லாம் வருங்காலக் குழந்தைகள் அலட்சியப்படுத்தி வருவதால் உலகம் கற்காலத்தை நோக்கித்தான் அதிவேகமாகச் சென்று கொண்டிருக்கிறது.

தூய நீரில் உப்பைப் போட்டால் தூய நீரும் உப்பாகி விடும், குடிக்க ஏற்றது ஆகாது. அதுபோல், நாம் நல்ல மனிதராய் இருந்தாலும் கெட்டவர்களுடன் சேர்வதால் நாமும் கெட்டவர் களாகி விடுவோம். அதனால், எப்போதும் நல்லவர் சக வாசத்தைப் பெற்று அவர்களின் ஆலோனையைக் கேட்டு வாழ்ந்தால், நம் வாழ்க்கையில் ஏற்படும் கஷ்டங்கள் ஓடி ஒளிந்து வாழ்க்கை வளமையாக மாறி மேன்மையுறும்.

எந்தச் செயலையும் செய்யும் முன்னமே பல முறை சிந்தித்து, அலசி ஆராய்ந்து, பொறுமையுடன் செய்ய வேண்டும். அவ்வாறு செய்தால் நஷ்டங்கள் ஏற்பட்டுத் துன்பம் நேராமல் இலாபங்களே உண்டாகும் என்பதைத் திருவள்ளுவர்:

1. ''பொருள் கருவி காலம் வினை இடனோடு ஐந்தும்
இருள் தீர எண்ணிச் செயல்.'' - குறள் 675

2. ''முடிவும் இடையூறும் முற்றியாங்கு எய்தும்
படுபயனும் பார்த்துச் செயல்''. - குறள் 676

அறிவாளிகள் தாம் செய்யும் செயலைச் செய்யும்போது இடம், பொருள், வேலை, செய்யும் கருவி, செய்யும் காலம், எதற்காகச் செய்கின்றோம்? அதனால் என்ன பயன்? என்பன வற்றை ஆராய்ந்தபின்பே அச்செயலைப் பொறுமையுடன் செய்து முடித்தால் கஷ்டம் என்பதே நேராது.

கேட்பது மனிதனின் உரிமை, கொடுப்பது இறைவனின் தன்மை. எவ்வளவுதான் நம்மிடம் வசதிகள் இருந்தாலும் மனம் திருப்தி அடைவதில்லை. ஆகவே, கிடைத்ததைக் கொண்டு திருப்தியடைய வேண்டும். நம்மைக் காட்டிலும் இன்னும் கஷ்டப்படுபவர்களைப் பார்த்து மனதைத் திருப்திப்படுத்திக் கொள்ள வேண்டும். திருப்தியுடன் வாழ்வதுதான் மனித வாழ்வின் பூரணத்துவம். இந்தப் பூரணத்துவத்தைப் பெற பெரியோர்களது வாழ்க்கையை அறிந்து, அவர்கள் அருளிய உரைகளைப் படித்து, நாம் நம்மைத் திருத்திக் கொண்டு வாழ்ந்தால் கஷ்டங்கள் நம் வாழ்வில் படியாது.

''சிலர் எப்போதும், இப்போது காலம் சரியில்லை'' என்று சொல்லிச் சலித்துக் கொள்வார்கள். எதிர்மறையான பேச்சுகளைச் சொல்லி எந்தச் செயலையும் செய்யாமல் சும்மா உட்கார்ந்து இருந்தால் எவ்வாறு துன்பங்கள் விலகும்? எனவே, சரியாய் இருப்பதும் இல்லாததும் நம் எண்ணங்களிலும் செயல்களிலும் தான் பொருந்தியிருக்கின்றது. அதனால்தான் நாம் மாறாக எண்ணுவது தர்மம் ஆகாது.

''ஒன்றை நினைக்கின் அது ஒழிந்திட்டொன்றாகும்
அன்றி அதுவரினும் வந்தெய்தும் - ஒன்றை
நினையாத முன் வந்து நிற்பினும் நிற்கும்
எனையாளும் ஈசன் செயல்.''

என்றார் ஔவையார்.

துன்பங்கள் என்பது ஒரு மனிதனின் வாழ்வில் வந்தே தான் தீருமென்றும், அவை இறைவனின் சோதனைகள் என்றும், அவற்றுக்காகக் கலங்குவதும், கண்ணீர் சிந்துவதும் முட்டாள் தனமென்றும் உன்னை நினைத்துத் தாழ்மையுடன் நினைப்ப தும் தவறென்றும் உன்னை நீ உணர்ந்து துன்பத்திலும் ஒரு நிம்மதியைத் தேடிக்கொள். வாழ்க்கைப் போராட்டத்தைச் சவாலாக ஏற்றுப் போராடி, வரும் துன்பத்தை ஜெயிக்கும் போது ஏற்படும் சந்தோசமும் பெருமையும் அலாதியானது என்பது கருத்து.

''அறிவுள்ளவர்கள் கஷ்டகாலம் வரும் முன்னமே தெரிந்து கொண்டு, மனதைத் தைரியப்படுத்திக் கொண்டு, கலங்காமல், அதை நீக்குவது எப்படி?'' என்று ஆராய்ந்து அதிலிருந்து மீள்வார்கள். யார் ஒருவர் அகந்தை கொள்ளாமல் பிறர் துயரங் களை உணர்வார்களோ, பிறர் கஷ்டங்களைக் களைந்து உதவு வார்களோ அவர்களே மனிதர்கள்.

கோபம், பேராசை, அபிலாசை, பொறாமை, காமம் இவற்றைத் தம் இஷ்டம்போல் கொண்டு வெளியில் அலைந்து, நினைத்ததையெல்லாம் மனம்போன போக்கில் ஒழுக்கம் இல்லாமல் செய்வது போன்றவை மனிதர்களுக்குத் தலையில் கத்தி தொங்குவதுபோல், எப்பொழுதும் கஷ்டம் கூடவே நிழலைப்போல் தொடர்ந்து வரும்.

எதிலும் குறை காண்பவர்கள், பிறரைக்குறை கூறு பவர்கள், சுயநலக்காரர்கள், வஞ்சகர்கள், ஏமாற்றுக்காரர்கள், மற்றவர்களின் வாழ்க்கையைப் பார்த்து வயிறு எரிபவர்கள், பிறர் அச்சம் கொள்ளும் அளவில் வாழ்பவர்கள், நல்லவர் களைப் போல வாழ்க்கையில் கபடமாக நடிப்பவர்கள், முடிவில் அந்த நடிப்பாலேயே கஷ்டப்படுவர்கள்!

ஐம்புலன்களையும் தங்கள் விருப்பம்போல் நிறைவேற்றிக் கொள்வதால்தான் மனிதன் துன்பத்திற்கு ஆளாகிறான்.

ஒரு தாய்வயிற்றில் பல குழந்தைகள் பிறந்தாலும், சுயநலம் உள்ளவர் ஒருவர், பேராசை பிடித்தவர் ஒருவர், ஏமாளியாக ஒருவர், வஞ்சக நெஞ்சம் கொண்ட ஒருவர் என்று அவரவர் குணங்களின்படி வாழ்க்கையை மேற்கொள்கின்றனர். அவரவர் மனதைப்போல வாழ்க்கைத் துணையையும் அமைத்துக் கொள் கின்றனர். குழந்தைகளைப் பெற்றுத் தன்னைப் போலவே வளர்க்கவும் செய்கின்றனர். அவரவர் எண்ணங்கள்போல வாழ்க்கை அமையும்போது, ஏன் அடுத்தவரைப் பார்த்துப் பொறாமைப்பட வேண்டும்?

துன்பங்கள் மூன்று வகைப்படும்:

1. **ஆதியாத்மிகம்;** நம்முடைய செயல்களால் நமக்கு நாமே விளைவித்துக் கொள்ளும் செயல்கள்.

2. **ஆதி விகம்;** முன் வினையால், தெய்வச் செயலாய் வந்து விளையும் துன்பங்கள்.

3. **ஆதி பௌதிகம்;** இயற்கை நிகழ்வுகளால் நம்மை மீறி வந்து விளையும் துன்பங்கள். (பூகம்பம், விபத்துக்கள், நீரால் அழிவு, திருட்டால் இழப்பு)

இவை மூன்றும் வராமல் இருக்கவும், அமைதியும், இன்பமும் உள்ளும் புறமும் யாண்டும் நின்று நிலவ வேண்டும் என்று இறைவனை வேண்டுவோம்.

"நாம் துன்பப்படுகிறோம், சோதனை அடைகிறோம் என்றால், நாம் எதையோ சாதிப்பதற்காகத்தான் இறைவன் கொடுத்த சோதனை இது" என்று எண்ணி நாம் போராட வேண்டும். சோதனையில் வெற்றி பெற்றுச் சாதிக்கவும் வேண்டும்.

நமக்கு வரும் கஷ்டங்களை, மற்றவர்கள் அனுபவத்தைத் தம் அனுபவமாக ஏற்றுக்கொள்வதன்மூலம் விடாமுயற்சி யுடனும், தன்னம்பிக்கையுடனும் போராடினால் துன்பத்தில் இருந்து விடுபடலாம்.

உதாரணமாக ஓர் ஆணோ, பெண்ணோ +2வில் தோல்வி அடைந்தபின் ஏற்படும் அனுபவங்களைக் கண்டோமானால் மேற்கொண்டு படிக்க இயலாமல் போகலாம். வேலை கிடைப் பதில் சிரமம் ஏற்படலாம். இதனால், குடும்பத்தில் மன நிம்மதி இல்லாமல் போகலாம். பிரகாசமாக இருக்க வேண்டிய எதிர் கால வாழ்வு பாதிக்கப்படலாம். அதைப் பார்த்த மற்றவர்கள் தம் அனுபவமாக அதை ஏற்று, +2 படிக்கும் அந்த ஒரு வருட மாவது கடின முயற்சியும் விடாப்பிடியான தன்னம்பிக்கையும் கொண்டு போராடினால் காலம், நேரம் மீதம் ஆகி வாழ்க்கையில் சீக்கிரம் முன்னேறலாம்.

தன் சோம்பேறித்தனத்தையும் பிறருக்கு வஞ்சனை செய் வதையும் பேராசை பிடிப்பதையும் விட்டு வாழ்ந்தால், துன்பம் விலகி இன்பமான வாழ்வு கிட்டும் அல்லவா?

இதற்கு மகாபாரதத்தில் வரும் துரியோதனனின் குணத்தை உதாரணமாகச் சொல்வது சாலப்பொருத்தம் ஆகும்.

*''செல்வம் வந்து உற்ற காலை தெய்வமும் சிறிது பேணார்*
*செல்வன அறிந்து சொல்லார் சுற்றமும் துணையும் நோக்கார்*
*வெல்வதே நினைத்து அல்லால் வெம்பகை வலிது என்று எண்ணார்*
*வல்வினை விளையும் ஓரார் மண்ணின் மேல் வாழும் மாந்தர்''*

*- வில்லிபாரதம்.*

''உலகில் வாழும் மனிதர் சிலர் செல்வம் வந்து சேர்ந்த பின் அதற்குக் காரணமான இறைவனை மறந்துவிடுவார்கள். ஆராய்ந்து பேசமாட்டார்கள். தங்கள் வெற்றியைப் பற்றியே நினைத்துக்கொண்டிருப்பார்கள். தவிர எதிராளியின் வலிமையை மதிக்க மாட்டார்கள் வலிமையுடைய ஊழ்வினையின் பயனை யும் ஆராய மாட்டார்கள்'' என்பது இதன் கருத்து.

மற்றவர்கள் நமக்குச் செய்யும் தீமையை நாம் நினைக் காமல், அடுத்து என்ன வழியில் செல்லலாம்? என்று ஆராய்ந்து வாழ்ந்தால் நம் மனம் துன்பம் அடையாது.

**நாம் துன்பம் அடையாமல் இருக்க, காஞ்சிப் பெரியவர் கூறிய கருத்துகள்:**

*1. கோபத்தினால் பல பாவங்களைச் செய்கிறோம். கோபத் திற்குக் காரணம் ஆசை, காமம். பாவங்களை ஒழிக்க வேண்டு மென்றால் முதலில் ஆசையை ஒழிக்க வேண்டும்.*

*2. அம்பாளின் அருள் நமக்குத் தெரியாது! நமக்கேற்படும் நன்மைக்கும், தீமைக்கும் மூலம் அவளுடைய அருள்தான் நல்லது காரணம் இல்லாத அருள். கஷ்டம் (துன்பம்) ஒரு காரணத்திற்காக ஏற்படுகின்ற அருள். நல்லது வந்தாலும், கெட்டது வந்தாலும் அவளது அருள் என்று கொள்ள வேண்டும். நமக்குத் தெரியாது, எதற்காக அவள் அதைக் கொடுக்கிறாள் என்று.*

*3. எவ்வளவுக்கெவ்வளவு பெரிய மனிதர்களாக இருக்கின் றோமோ அவ்வளவுக்கவ்வளவு பெரிய கஷ்டம் வரும். மாடி யிலிருந்து விழுந்தால் கை, கால், மண்டை எல்லாம் நொறுங்கிப் போகும். திண்ணையிலிருந்து விழுந்தால் சிராய்ப்போடு நின்று விடுகிறது. அதுபோலவே பெரியவர்களுக்கு அதிகத் துன்பமும், சிறியவர்களுக்கு அவர்களுக்கேற்றபடி சிறிய துன்பமும், ஏற்படும். ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் துன்பம் வந்து கொண்டுதான் இருக்கும். நம்முடைய துன்பத்தையே நாம் பெரியதாக நினைத்துக் கொண்டிருக்கக் கூடாது.*

*4. நல்லதோ பொல்லாததோ எப்படி எப்படி நடக்கிறதோ அப்படியே நடக்கும். நாம் சும்மா இருந்தால் போதும்.*

*5. கண்ட இடங்களில் நம் கஷ்டங்களைப் போய்ச் சொல்லிக் கொள்ளாமல் கேட்பவர்கள் எப்படி எடுத்துக் கொள் வார்களோ என்று ஆதங்கம் இல்லாமல் பகவானிடம் மட்டுமே கஷ்டத்தை மனம் விட்டுச் சொல்லிக் கொள்ளலாம்.*

*6. நாம் இன்று அனுபவிக்கின்ற சுகங்களுக்கும், கஷ்டங் களுக்கும் காரணம் நம் மனமே. இந்த ஜென்மத்திலோ, பூர்வ ஜென்மத்திலோ செய்த நல்லது, கெட்டதுதாம். இதன் காரண மாகக் கிரகச்சாரம், தெய்வக்குற்றம், ஆரோக்கியக் குறைவு*

முதலியனவாக மந்திரரீதியில் எப்படி வேண்டுமானாலும் பலன் தேடிக் கொள்ளலாம்.

**நாம் துன்பம் அடையாமல் இருக்க, புத்திசாலித்தனமாக இருந்து வாழ்க்கையில் வெற்றிபெற அன்னை ஸ்ரீ சாராதா தேவி கூறும் சில வழிகள்:**

1. 'எதற்காகச் சாதனை செய்யப்போகிறீர்கள்?' என்பதைத் தெளிவாகப் புரிந்து கொள்ளுங்கள். எதையாவது சாதிக்கலாம் என்று மனம் போனபோக்கில் ஒரு முடிவு பண்ணாதீர்கள்.

2. உங்கள் இலட்சியம் உங்கள் கண்முன்னே எப்போதும் நிற்க வேண்டுமானால், முறையான பயிற்சியும் சுய ஆராய்ச்சியும் முக்கியம்.

3. நீங்கள் செய்யப்போகும் சாதனையில் நேர்மையும், உண்மையும் இருக்க வேண்டும்.

4. முன்வினைப் பயன், அதையாரும் தவிர்க்க முடியாது. ஆனால், ஜெபம் அதன் வேகத்தைக் கட்டுப்படுத்தும். அதாவது, முன் வினையின்படி ஒருவன் காலை இழக்க வேண்டும் என்று இருந்தால் ஜெபத்தால் அவன் காலில் முள்ளாவது குத்தும்!

5. காலம். உங்கள் எண்ணம் பலிக்கும்வரை பொறுமையாக இருக்க வேண்டும். இடைப்பட்ட நேரத்தில் வரும் சோதனைகளை அமைதியாக ஏற்றுக்கொள்ளுங்கள். இதில் வெற்றி பெறுபவனே எல்லாவற்றிலும் வெற்றி பெறுகிறான்.

6. சிறிய வேலையானாலும் முழுமனத்துடன் செய்யுங்கள்; பணிவோடு செய்யுங்கள்; வழிபாடாகச் செய்யுங்கள்.

7. கடைசியாக ஒன்று; கடவுளை நம்புங்கள்!

**துன்பங்களைக் களைய பாண்டிச்சேரி அன்னை அருளிய பொன் மொழிகள்:**

1. "இதுநாள்வரை இப்படி இருந்தோமே, என்ற குழப்பத்திற்கு ஆளாகாமல், இன்று முதல் இப்படி மாறுவோம்" என்ற ஆர்வத்துடன் அமையும் சிந்தனையே ஆனந்தமானது.

2. நேற்றைய சுமைகளை இன்று சுமக்காதீர்கள்.

3. விடாமுயற்சியுடன், உறுதியுடன், நீடித்துச் சற்றும் தளராத போராட்டமாக அதைத் தொடர்ந்து மேற்கொண்டால் போதும். பாறாங்கல் போன்ற அந்த மாபெரும் தடையானது தகர்ந்து, பொடிப்பொடியாகி விடும்.

4. தான் செய்யும் எந்தக் காரியத்திற்கும் இலாபம் பெற நினைக்கும் மனப்பான்மைதான் உலகிலேயே அருவறுப்பான குணமாகும்.

5. வேலையைப்பற்றித் தொல்லைப்பட்டுக் கொள்ளாமல் நாம் எந்த அளவுக்குச் சாந்தமாக அமைதியுடன் செய்கிறோமோ, அந்த அளவிற்கு அது பயனுள்ளதாய் இருக்கும்.

6. 'நீ எப்படி இருந்தாய்?' என்பதைப் பற்றிக் கவலைப் படாதே, 'எப்படி இருக்க விரும்புகிறாய்?' என்பதை மட்டும் நினை. நீ நிச்சயமாய் முன்னேறுவாய்.

7. எது நடந்தாலும் நாம் அமைதியுடனும் இறைவன் அருளில் நம்பிக்கையுடனும் இருக்க வேண்டும்.

8. நம் குறையை நாம் நேருக்கு நேராகப் பார்க்க வேண்டும். நமக்குள் காணும் குறை எதையும் உடனே பார்க்க வேண்டும்.

9. வாழ்க்கையில் நடைபெறும் அன்றாடச் சில்லறைக் காரியங்களையெல்லாம் பிரச்சினையாகக் கருதி, அவற்றுக்கு இடமளிக்கக் கூடாது.

10. மனிதன் என்பவன் சிக்கல் மிகுந்த தொகுப்பால் ஆனவன்.

11. யாராவது உன்மீது கோபப்பட்டால் அவனுடைய கோப அதிர்வுகளில் அகப்பட்டுக்கொள்ளாமல், விலகி நில். எந்த ஆதரவோ, பதிலோ கிடைக்காததால் அவனுடைய கோபம் மறைந்து போகும்.

12. எல்லாத் தொல்லைகளும் நிதானக் குறைவினாலேயே வருகின்றன. எனவே, எல்லா நேரங்களிலும் எல்லாச் சூழ்நிலை களிலும் நாம் கவனமாக, நிதானம் தவறாமல் இருப்போம்.

13. எந்த எதிர்ப்பு இருந்தபோதிலும் நடக்க வேண்டியது நடந்தே தீரும்.

14. பிறர் விசயங்களில் எப்போதுமே தலையிடாமலிருப்பது நல்லது. மனிதர்கள் பிறர் விசயங்களில் கண்டபடி தலையிடுகின்றனர். கேட்காவிட்டாலும்கூடத் தங்களுடைய அபிப்பிராயத்தைச் சொல்கின்ற பழக்கம்தான் இதற்குக் காரணம்.

15. ஒருவன் தியானத்தின் மூலம் முன்னேற முடியும். ஆனால், நேர்மையாகச் செய்யப்படும் கர்ம யோகத்தால் பத்து மடங்கு முன்னேற முடியும்.

**துன்பங்களை நீக்க ஞான வள்ளல் பரஞ்சோதி மகான் அவர்கள் கூறிய கருத்துகள்:-**

1. ஞானவள்ளலின் தாரக மந்திரமே நடந்தெல்லாம் பெரும் நன்மைக்கே.

2. எடுத்த காரியம் முடிக்கப் பெறாமல் மிகத் துன்பத்துடன் இடைவிடாமல் மேலும் மேலும் வெற்றிக்காகப் பாடுபடும் போது, மனதிற்கு ஆனந்தமும் உற்சாகமும் துணிவும் ஏற்பட, இந்த மகா பாக்கியத்தைப் பயன்படுத்துவதே சிறந்தது எனச் சொல்வேன்.

3. எடுத்த காரியத்தை முடிக்க விடாமல் இன்னல் பல கொடுப்போரும் உண்டு. அப்படிப்பட்டோருக்கு எதிராக எவ்வித நடவடிக்கையும் அவர்கள்மீது எடுக்காமல் வைராக்கியமும் பொறுமையும் கொண்டு அழைத்துக் காரிய வெற்றியடைந்து, நாம் சந்தோஷிக்குங்காலத்தில் நமக்குச் செய்யப்பட்ட இடையூறுகள் அத்தனையும் நமக்குச் சாதகமாகவே அமைந்திருக்கக் காண்போம்.

4. நல்லதே நினை. நல்லதே செய், நினைத்தது நடக்கும், சொன்னது பலிக்கும், நம்பு; நடந்தெல்லாம் பெரும் நன்மைக்கே, சந்தோசம்.

5. நேர்மையாக இருந்தபோதிலும், இன்னல்கள் வந்தால் 'நடப்பதெல்லாம் நன்மைக்கே' என்ற நம்பிக்கையுடன் பொறுமை

யாக இன்னல்களைச் சமாளிக்கையில், அதை வெல்லக்கூடிய அறிவு அவசியம் தோன்றும். அவ்வாறு அறிவு தோன்றச் சூழ்நிலையை அனுசரித்து நடக்கக்கூடிய தன்மை வரும். அப்போது இன்னல் இருக்காது.

ஒரு குடும்பத்தில் பிறக்கும் குழந்தைகள் நல்லவர்களாக வும் திறமைசாலிகளாகவும் இருந்தால், சொத்துச் சேமித்து வைக்கலாம், அவை பயன்தரும். கெட்டவர்களாகவும் ஒழுக்கம் இல்லாதவர்களாகவும் இருந்தால், சேமித்து வைப்பதால் பயன் ஆகப்போவது ஏதுமில்லை. அதைவிட, நல்லவர்களாகவும் அறிவுள்ளவர்களாகவும் ஒழுக்கம் உள்ளவர்களாகவும் திறமை சாலிகளாகவும் ஆக்குவது தந்தையின் கடமை. திருதராஷ்டிரர் குழந்தைகளைச் சரிவர வளர்க்காமல்போனதால் பாரதப் போர் ஏற்பட்டு, பல்லாயிரம் வருடம் கழிந்தாலும் நாம் இன்றளவிலும் துரியோதனனை போல் கெட்டவர்களாக வாழக் கூடாது என்று பேசிவருகிறோம்.

வாரியார் சுவாமிகள் எதனால் துன்பங்கள் ஏற்படும் என்பதை,

1. ‘பொறாமையும் குரோதமும் உடையவனுக்குச் செல்வமில்லை.

2. இம்சிக்கிறவனுக்கு நண்பன் இல்லை.

3. காமுகனுக்கு வெட்கம் இல்லை.

4. சோம்பேறியிடம் சொத்து இல்லை.

5. உறுதியில்லாதவனுக்கு ஒன்றுமில்லை''.

என்று எளிமையாகக் கூறியுள்ளார்.

''மனிதர்கள் பலர் நம்மிடம் செல்வம் இருக்கும்போதும் மகிழ்வுடன் வாழும்போதும் நம்வீட்டிற்கு வருவார்கள். நம்மை மதிப்பார்கள், துதி பாடுவார்கள், அதே, செல்வம் இழந்த போதோ, துன்பமடையும்போதோ நம்மை விட்டு விலகி ஓடுவார்கள்; நம்மைப் பழிப்பார்கள்.''

இக்கருத்தைக் கவிஞர் கண்ணாதாசன் வெகு அழகாகப்

*''பானையிலே சோறு இருந்தால்,*
*பூனைகளும் சொந்தமடா,*
*சோதனையைப் பங்கு வைச்சா,*
*சொந்தமில்லே பந்தமில்லே''*

என்று பாடியுள்ளார்.

தூய சிந்தனையுடனும் நல்ல மனத்துடனும் பெருந்தன்மை யுடனும் அமைதியுடனும் மனதை விழிப்புடனும் அமைதி யுடனும் வைத்திருக்க வேண்டும். புண்ணிய நூல்களைப் படித்தும் தியானம் செய்தும் புத்தியைச் செம்மையாகவும் நுட்பமாகவும் வைத்திருக்க வேண்டும். பெரியவர்கள், நல்லவர்கள் கூறும் அனுபவத்தைத் தன் அனுபவமாக ஏற்று அதன் வழி சென்றால் வெகு விரைவில் வெற்றி அடையலாம்.

திருவள்ளுவர்.

*''கேடும் பெருக்கமும் இல்லல்ல நெஞ்சத்துக்*
*கோடாமை சான்றோர்க்கு அணி'' - என்றார்.* *- குறள் 115*

இதன் பொருளாவது,

''வாழ்வில் யார்க்கும் துன்பமும் இன்பமும் இல்லாதவை யல்ல. ஆதலால், இந்த உண்மையை உள்ளத்தால் உணர்ந்து, நெஞ்சில் நடுவுநிலைமை தவறாமல், அதாவது, இன்பம் துன்பம் ஆகிய இரண்டையும் சமமாகப் பாவித்ததுலே அறிவுடை யோர்க்கு அழகாகும்.''

# 18. தீப வழிபாடும் அதன் பயனும்

தீப வழிபாடு செய்தால் இலக்ஷ்மி கடாக்ஷம் ஐஸ்வரியங்கள் உண்டாகும். விவாகம், மாங்கல்ய பலம், புத்திர பாக்யம், சுபிட்சம் ஆகியவை ஏற்படும். குடும்பத்தில் மகிழ்ச்சி கூடும்.

**தீபத்திற்குரிய திரிகளும் அதன் பயனும்:-**

1. பஞ்சுத் திரியில் விளக்கு ஏற்றினால், சுகவிருத்தி ஏற்படும்.

2. வாழைத் தண்டுத் திரியில் விளக்கு ஏற்றினால், சந்தான பாக்யம் ஏற்படும்.

3. தாமரைத் தண்டுத் திரியில் விளக்கு ஏற்றினால் முற்பிறவிப் பாவங்கள் நீங்கும்.

4. புது மஞ்சள்துணியில் திரிவிளக்கு ஏற்றினால் தாம்பத்யத் தகராறு நீங்கும், புத்திரசோக நிவர்த்தி ஏற்படும். அம்மன் அருள் கிட்டும்.

5. வெள்ளெருக்குப்பட்டைத் திரிவிளக்கு ஏற்றினால் நீடித்த ஆயுள் ஏற்படும், பேய், பிசாசு, காற்று, கறுப்பு விலகி ஓடும், செய்வினைக் குறைபாடு நீங்கும். ஸ்ரீ கணபதியின் அருள் பூரணமாகக் கிட்டும்.

6. அத்தித் திரிவிளக்கு ஏற்றினால் மாங்கல்ய தாரணம், விமோசனம் ஏற்படும்.

7. வன்னித் திரிவிளக்கு ஏற்றினால் அஷ்டலக்ஷ்மி குடியிருப்பாள், குபேரன் குடியிருப்பான், ஜன்ம குருவிற்கு நிவர்த்தி.

8. அரசுத் திரிவிளக்கு ஏற்றினால் புத்திர பாக்யம் உண்டாகும். மாங்கல்ய தாரணம் ஏற்படும்.

9. வில்வத் திரிவிளக்கு ஏற்றினால் சாப விமோசனம், எம பயம் நீங்கும், பில்லி, சூனியம் நிவர்த்தி உண்டாகும். (வாழைத் தண்டுத் திரிக்கும் இப்பலன் கிட்டும்)

10. எள்ளுத் திரிவிளக்கு ஏற்றினால் சனி பகவானால் ஏற்படும் கஷ்டங்கள் தீரும்.

**தீபத்திற்குரிய திசைப் பலன்கள்:-**

1. கிழக்குத் திசை முகம் மட்டும் ஏற்றினால், துன்பம் ஒழியும், ஜன வசீகரம் ஏற்படும்.

2. மேற்குத் திசை முகம் ஏற்றினால், கடன் தொல்லை நீங்கும், பங்காளிப் பகை விலகும், தேவையற்ற தொல்லைகள் ஏற்படாது.

3. வடக்குத் திசை முகம் ஏற்றினால், திரண்ட செல்வமும் சர்வ மங்களமும் ஏற்படும்.

4. தெற்குத் திசை மட்டும் ஏற்றக் கூடாது. ஏற்றினால், பாவங்கள் பெருகும், தொல்லைகள் ஏற்படும், எமனுக்கும் துர்தேவதைகளுக்கும் ப்ரிதி, தென்திசை உசிதமல்ல!

**தீபத்திற்குரிய எண்ணெய்களும் அதன் பயனும்:-**

1. பசு நெய் - கிரஹ தோசம் நீங்கும்.
2. விளக்கெண்ணெய் - குல தெய்வ கடாட்க்ஷம் கிடைக்கும்.
3. நல்லெண்ணெய் - நவக்கிரஹப் ப்ரீதி, கடன் தீரும்.
4. தேங்காய் எண்ணெய் - மன உறுதி, உள்ளத் தெளிவு ஏற்படும்.

5. வேப்ப எண்ணெய், இலுப்பை எண்ணெய், நெய் மூன்றும் கலந்த எண்ணெய் அனைத்துப் பாவங்களும் தொலையும், குடும்ப சுகம் கிட்டும், அனைத்து ஐஸ்வர்யங்களும் கிடைக்கும்.

நவக்கிரகத் திரியும் அதன் பயனும்:-

| எண் | கிழமை | கிரகம் | திரி | பலன்கள் |
|---|---|---|---|---|
| 1. | ஞாயிறு | சூரியன் | சிவப்புத் திரி | சத்ரு வசியம், சுக பாக்கியம், விருத்தி. |
| 2. | திங்கள் | சந்திரன் | வெள்ளைத் திரி | சுபகாரியம், சுப நன்மை. |
| 3. | செவ்வாய் | செவ்வாய் | சிவப்புத் திரி | எதிர்ப்புகள் விலகும், புகழ் ஏற்படும். |
| 4. | புதன் | புதன் | பச்சைப்பட்டுத் திரி | மாங்கல்ய பாக்கியம், புத்திரபாக்கியம் கிட்டும். |
| 5. | வியாழன் | குரு | மஞ்சள் திரி | புத்திரபாக்கியம் கிட்டும், குரு பார்வை கிட்டும். |
| 6. | வெள்ளி | சுக்கிரன் | வெண் பட்டுத் திரி | தொழில் விருத்தி ஏற்படும், ஐஸ்வரியம் கிட்டும். |
| 7. | சனி | சனி | கறுப்புப் பட்டுத் திரி | பில்லி, சூனியம், நிவர்த்தி. |
| 8. | செவ்வாய் | இராகு, செவ்வாய் | கறுப்புத் திரி அல்லது நீலநிறத் திரி | பூர்வீக தோச விமோசனம், சர்வ சுகம் |
| 9. | சனி | கேது, சனி | பல வண்ணத் திரி | தன பாக்கியம் கிட்டும்,குடும்ப சுகம். |

**தீபம் ஏற்றியபின் செய்யக் கூடாதவை:-**

1. *தலை பின்னுதல் கூடாது.*
2. *முகம் கழுவுதல் கூடாது.*
3. *அரிசி புடைப்பது, களைவது கூடாது.*
4. *பால், தயிர், வாங்கவோ, கொடுப்பதோ கூடாது.*
5. *வீட்டை விட்டு வெளியில் செல்லக் கூடாது.*
6. *வீட்டைப் பெருக்கக் கூடாது.*
7. *குப்பைகளை வெளியே எறியக்கூடாது.*
8. *ஊசி, உப்பு, ஆகியவற்றைக் கடன் கொடுக்கக் கூடாது.*
9. *வீட்டு வேலைக்காரர்களைக் கொண்டு விளக்குகளைத் துடைப்பதோ விளக்கி வைப்பதோ கூடாது.*

**தெய்வத்திற்கு உகந்த எண்ணெய்:-**

| | | |
|---|---|---|
| குல தெய்வத்திற்கு | - | வேப்பெண்ணெய், இலுப்பெண்ணெய், பசு நெய் மூன்றும் சேர்த்து விளக்கேற்ற வேண்டும். |
| *கணபதி* | - | தேங்காய் எண்ணெய், நெய், நல்லெண்ணெய். |
| *மகாலக்ஷ்மி* | - | பசு நெய். |
| *திருமால்* | - | நல்லெண்ணெய். |
| *தட்சிணாமூர்த்தி* | - | இலுப்பெண்ணெய். |
| *அம்பிகை* | - | பசு நெய், விளக்கெண்ணெய், வேப்ப எண்ணெய், தேங்காய் எண்ணெய், இலுப்பெண்ணெய் ஆகிய ஐந்தும் கலந்து விளக்கேற்றலாம். |
| *சர்வ தேவதைகளுக்கும்* | - | நல்லெண்ணெய் விளக்கு ஏற்றலாம். |
| *கடலெண்ணெய்* | - | எந்தத் தெய்வத்திற்கும் உகந்தது அன்று. |

**தீபத்தில் ஒளியேற்றுவதற்கு உரிய பலன்கள்:-**

| | |
|---|---|
| ஒரு முகம் ஒளியேற்றுவதால் | - மத்திய பலன் |
| இரு முகம் ஒளியேற்றுவதால் | - குடும்ப ஒற்றுமை |
| மூன்று முகம் ஒளியேற்றுவதால் | - புத்திர சுகம் கிட்டும் |
| நான்கு முகம் ஒளியேற்றுவதால் | - பசு, பூமி, செல்வம் கிட்டும் |
| ஐந்து முகம் ஒளியேற்றுவதால் | - அனைத்து நலன்களும் கிட்டும். |

★ எவர்சில்வர் விளக்குகள் பூஜைக்கு ஏற்றதல்ல.

★ வெண்கலப் பாத்திரத்தில் தீபம் ஏற்றினால் பாவங்கள் நீங்கும்.

★ தாமிரப் பாத்திரத்தில் தீபம் ஏற்றினால் கோபத்தை நீக்கிச் சாந்தத்தை ஏற்படுத்தும்.

★ மண் பாத்திரத்தில் தீபம் ஏற்றினால் சக்தியைக் கொடுக்கும், நினைத்து நடக்கும்.

★ இரும்புப் பாத்திரத்தில் தீபம் ஏற்றினால் சத்ருபயம் நீங்கும், எம பயம் அகலும், சனியால் ஏற்படும் தோசம் நீங்கும்.

★ பித்தளைப் பாத்திரத்தில் தீபம் ஏற்றினால், இலஷ்மி அருள் கிட்டும், மன சாந்தி ஏற்படும். குடும்பம் நலம் பெறும்.

**விளக்குகளின் வகைகள்:-**

1. பூஜை நேரங்களில் மட்டும் எரிவது சாதாரண விளக்கு.
2. எப்போதும் எரிவது நந்தா விளக்கு.
3. காலை, மாலை, அந்தி வேளைகளில் மட்டும் எரிவது சந்தி விளக்கு.

**மலர்களும் அதன் பயனும்:-**

மல்லிகை, முல்லை - எல்லாத் தெய்வங்களுக்கும் ஏற்ற மலர். மனசுத்தி, ஏற்படும். மனமகிழ்ச்சி கூடும். புனிதத் தன்மை தரும்.

ரோஜா - ஆண்டவனிடம் அன்பையும் பக்தியையும் ஏற்படுத்தி, தியானத்தை நிலை நாட்டும், எல்லாத் தெய்வங்களுக்கும் ஏற்றது.

அரளி - துர்க்கைக்கு மிகவும் ஏற்றது. செவ்வாய், வெள்ளி நாட்களில் அர்ச்சனை செய்தால் துணிவைத் தரும். மன அமைதி, மன மகிழ்ச்சி தரும்.

வெள்ளைத் தாமரை - சரஸ்வதிக்கு ஏற்றது. சந்திரன் சுக்கிரன் என்ற தெய்வங்களுக்கும் உகந்தது. ஞானத்தை அருளும், கல்வியைத் தரும்.

செந்தாமரை - அனைத்துத் தெய்வங்களுக்கும் மற்றும் முக்கியமாக இலட்சுமி, சூரியனுக்கு உகந்தது, பாவம் போக்கும், ஐஸ்வர்யத்தை அளிக்கும்.

அல்லி தாமரை - அம்மன், செவ்வாய், இலக்ஷ்மி, திருமால் ஆகிய தெய்வங்களுக்கு உகந்தது. செல்வத்தைத் தரும்.

செண்பகப் பூ - அம்மன், குரு ஆகியோருக்கு ஏற்றது. மனதைத் திடப்படுத்தும், வரும் துன்பம் குறையும், மனச்சாந்தி தரும்.

மருக்கொழுத்து கதிர்ப் பச்சை, திருநீற்றுப் பச்சைப் பூ - புதன், திருமால், ஆஞ்சநேயர், அம்மன் ஆகிய தெய்வங்களுக்கு ஏற்றது. கேட்ட வரம் கிட்டும், இன்பம் பெருகும், புத்திர பாக்கியம் கிட்டும்.

நாகலிங்கப் பூ - தட்சிணாமூர்த்தி, ஈஸ்வரன் ஆகிய தெய்வங்களுக்கு ஏற்றது. முக்தியைத் தரவல்லது, நல்ல மணத்தையும் கொடுத்து, ஆயுளையும் அளிக்க வல்லது.

எருக்கம் பூ - விநாயருக்கு மிகவும் ஏற்றது. கல்வியும் செல்வமும் கொடுக்கக் கூடியது.

மகிழம் பூ - அம்மனுக்கு ஏற்றது, பொறுமையைத் தரவல்லது. சந்தோசம் அளிக்கும்.

பவளமல்லி - அம்மனுக்கு உகந்தது, குடும்ப மகிழ்ச்சியை ஏற்படுத்தும்.

**துளசிப்பூ** - பக்தியைத் தரும், நல்லெண்ணம், திடமான நம்பிக்கையைத் தரவல்லது. திருமால்,ஆஞ்சநேயருக்கும் ஏற்றது.

**சாமந்திப் பூ** - அனைத்துத் தெய்வங்களுக்கும் ஏற்றது. எல்லாப் பயனும் கிட்டும்.

**தெய்வத்திற்கு உகந்த இலைகள்:**

| | | |
|---|---|---|
| அறுகம்புல் | - | கணபதி |
| வில்வ இலை | - | தட்சிணாமூர்த்தி, ஈஸ்வரன். |
| துளசி | - | திருமால், ஆஞ்சநேயர் |

**இலட்சுமி வாசம் செய்யும் இடங்கள்:-**

1.பசுவின் பின்புறம் 2. யானையின் முகம் 3. சந்தனம் 4. திருவிளக்கு 5. வாசனையுள்ள மலர்கள் 6. தாம்பூலம் 7. கோமியம் 8. கன்னிப் பெண்கள் 9. உள்ளங்கை 10. பசு மாட்டின் கால்தூசி 11. வேள்விப்புகை 12. மஞ்சள் 13. குங்குமம் 14. சாம்பிராணி.

**பிரதட்சணம் செய்ய வேண்டிய முறை:-**

கணபதிக்கு ஒரு முறையும், அம்பாளுக்கு நான்கு முறையும் அரச மரத்துக்கு ஏழு முறையும் நவக்கிரகத்திற்கு ஒன்பது முறையும் செய்ய வேண்டும்.

**ஜெபமும் பலனும்:-**

| | | |
|---|---|---|
| விரலால் எண்ணினால் | - | 1 மடங்கு பலன் உண்டாகும். |
| சங்கு மணியில் எண்ணினால் | - | 100 மடங்கு பலன் உண்டாகும். |
| பவழத்தில் எண்ணினால் | - | 1000 மடங்கு பலன் உண்டாகும். |
| ஸ்படிகத்தில் எண்ணினால் | - | பதினாயிரம் மடங்கு பலன் ஏற்படும். |

| | | |
|---|---|---|
| முத்தால் எண்ணினால் | - | இலட்சம் மடங்கு பலன் ஏற்படும். |
| சுவர்ணமணியில் எண்ணினால் | - | கோடி மடங்கு பலன் ஏற்படும். |
| துளசி, உருத்ராட்சத்தில் எண்ணினால் | - | பல மடங்கு பலன் ஏற்படும். |

பிறர் காதில் விழும்படி ஜெபம் செய்தால் ஒரு பங்கு பலன் தரும்.

தன் காதில் விழும்படி ஜெபம் செய்தால் நூறு பங்கு பலன் தரும்.

மனதுக்குள் ஜெபம் செய்வது ஆயிரம் பங்கு பலன் தரும்.

**அபிஷேகமும் பலனும்:**

| | | |
|---|---|---|
| சந்தனாதித் தைலம் | - | உடல் சுகம் |
| பஞ்சாமிர்தம் | - | கடன் தீரும், உடல் வலிமை |
| பால் | - | நீண்ட ஆயுள் |
| தயிர் | - | நன்மக்கட்பேறு |
| நெய் | - | வீடுபேறு |
| தேன் | - | குரல் இனிமை |
| கரும்புச் சாறு | - | நோய் தீரும் |
| இளநீர் | - | யோகம் |
| எலுமிச்சம் பழம் | - | பகை தீரும் |
| சந்தனம் | - | திருமகள் அருள் |
| பன்னீர் | - | இலாபம் |
| வலம்புரிச் சங்கு, கலசாபிஷேகம் | - | நினைத்தது நடக்கும். |

**சப்த மாதர்கள்:-**

*1. பிராமி, 2. மகேஸ்வரி, 3. கவுமாரி, 4. நாராயணி, 5. இந்திராணி, 6. வராகி. 7. காளி.*

**சப்த ரிஷிகள்:-**

*1. அத்திரி, 2. வசிஷ்டர், 3. கச்யபர், 4. கவுதமர், 5. பரத் வாஜர், 6. விசுவாமித்திரர், 7. ஜமதக்னி.*

*கர்ம யாகம்* - சிவனை எண்ணுதல், சிவ பூஜை செய்தல்,

*தவ யாகம்* - மந்திரங்கள் ஜெபிப்பது.

*தியான யாகம்* - உள்ளத்தில் தியானிப்பது.

*மந்திர யாகம்* - ஞான சாஸ்திரங்கள் பயிலுவது.

**தெரியாத விசயங்கள் தெரிந்து கொள்ள:-**

*1. கணபதிக்குப் பின்னால் தீபம் ஏற்றி வழிபட்டு வந்தால் நாம் நினைத்த காரியம் சித்தி ஆகும்.*

*2. கணபதிக்குப் பிரதி 6 செவ்வாய்க்கிழமைகளில், வீட்டில், தேங்காயில், மஞ்சளைப்பூசி, தேங்காயின் நான்கு பக்கமும் குங்குமப்பொட்டு வைத்து, தேங்காயின் உச்சிப் பகுதியிலும் ஒரு குங்குமப் பொட்டு வைத்து, கணபதி பெயரில் நாமே அர்ச்சனை செய்து, அடுத்த செவ்வாய்க் கிழமையில் வீட்டில் முன்போலவே பூஜை செய்து, பழைய தேங்காயைக் கணபதி கோவிலுக்குச் சென்று உடைத்து, கணபதியின் பின்னால் வைத்துக் கும்பிட்டுவிட்டு, திரும்பிப் பார்க்காமல் வர வேண்டும். நல்லதை நினைத்தால் நடக்கும்.*

*3. பைரவருக்கு இராகு காலத்தில் மிளகு விளக்கு ஏற்றி னால் திருமணம் கைகூடும்.*

*4. மாத விலக்கின்போது சுத்தம் இல்லாமல் திருமணத் திற்கோ, கோவிலுக்கோ முக்கியமாக முன்னோர்க்குத் திதி கொடுக்கவோ அப்போது கூறும் மந்திரத்தைக் கேட்பதோ கண்டிப்பாகக் கூடாது. இதனால், அபசாரம் என்கின்ற தோசம் ஏற்படும்.*

5. வீட்டிற்கு வரும் பெண் உறவினர்கள், நண்பிகள் வீட்டிற்குத் திரும்பிச் செல்லும்போது வெற்றிலை, பாக்கு, பழம் வைத்து, மஞ்சள் குங்குமம் கொடுக்க வேண்டும். சந்தர்ப்பம் அவ்வாறு அமையவில்லை எனில் வெறும் மஞ்சள், குங்குமம் கொடுப்பது சாலச்சிறந்தது.

6. இரவு, விளக்குவைத்தபின், உப்பு, எண்ணெய், தயிர், சுண்ணாம்பு, ஆகியவற்றை அக்கம் பக்கம் யாருக்கும் தரக் கூடாது.

7. தலைக்கு நல்லெண்ணெய் வைத்தபின் தனக்கோ, பிறருக்கோ அன்னம் போடக்கூடாது.

8. தலைக்கு ஊற்றியபின் (குளித்தபின்) பகலில் உறக்கம் கொள்ளக் கூடாது.

9. தான் என்ற அகந்தை, கோபம், பொறாமை புறம் கூறல் ஆகியவை தவத்திற்கு எதிரானது.

10. தெய்வ நிந்தனை கூடாது.

11. தர்மம் செய்யாவிடினும் செய்வதைத் தடுக்கக்கூடாது. (ஈவது விலக்கேல் - ஔவையார்)

12. இடக் கையால் யாருக்கும் தர்மமோ, பொருளோ கொடுக்கக்கூடாது.

13. எச்சில் கையாலோ, எச்சில் பண்டத்தையோ யாருக்கும் எதையும் கொடுக்கக் கூடாது.

14. அபசகுன வார்த்தைகளால் யாரையும் திட்டவோ, சாபம் கொடுக்கவோ கூடாது.

15. இஞ்சி, பாகற்காய், கட்டித்தயிர், கீரை வகைகள், நெல்லிக்காய் ஆகியவற்றை இரவில் உண்ணக்கூடாது.

16. ஆமணக்கு இலையிலும் பனை ஓலையிலும் வைத்த புஷ்பம் பூஜைக்கு ஆகாது.

17. குரு நிந்தனை கூடாது, அப்பாவத்தை என்ன செய்தாலும் போக்க முடியாது.

18. தெற்குத் திசையைத் தவிர மற்றத்திசையை நோக்கித் தெய்வங்களைக் கும்பிடலாம்.

19. அன்னம், நெய், உப்பு, ஆகியவற்றைக் கையால் படைக்கக்கூடாது.

20. விபூதி, மஞ்சள், குங்குமம் ஆகியவற்றை அலட்சிய மாகக் கீழே சிந்தவோ குழந்தைகளிடத்தில் கொடுத்து விளையாட விடுவதோ கூடாது.

21. மற்றவரின் மனம் புண்படும்படி பேசக்கூடாது.

22. ஒரு பெண்ணின் திருமணத்தைத் தடுப்பது பெரும் பாவம். ஏழு தலை முறைக்கு அப்பாவத்திற்குப் பரிகாரமே கிடையாது.

23. அரசர், (ஆட்சியாளர்கள்) நமக்கு நன்மை செய்பவர்கள். நம் ஆசான், குரு, தபஸ்விகளிடத்தும் மூர்க்கன், சத்ருக்கள் பலர் சேர்ந்த கூட்டத்தில் அவர்கள் கோபமாக ஏதாவது பேசினாலும் பதில் பேசாமல் திரும்பிவிட வேண்டும்.

24. வெள்ளிக்கிழமையன்று நிலைவாசலில் மஞ்சள், குங்குமப் பொட்டு வைத்து, இருபுறமும் பூ வைத்து வணங்கி வந்தால் இலட்சுமி கடாக்ஷம் கிட்டும்.





